# பரணிப் பொழிவுகள்

ஆக்கியோன் :
டாக்டர் ந. சுப்பு ரெட்டியார், எம். ஏ., பி. எஸ்சி.,
எல். டி., பிஎச். டி.,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி



திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
1972

Sri Venkateswara University

Tamil Department Publication No. 2.

General Editor :
Dr N Subbu Reddiar
Head of the Department of Tamil

---

# PARANIP-POLIVUKAL

# DEDICATED TO

All Speakers and Lovers
OF TAMIL
Whose lot is cast in lands
OTHER THAN TAMIL NADU

## அன்புப் படையல்

வண்ணமார் கடலை மலைகளைக் கடந்து
வயங்குபன் னாடுதொ றுற்று
திண்ணிய அறிவாற் கரத்தினாற் பணிகள்
சீருறப் புரிந்துநல் லுளத்தில்

பண்ணிசை தெய்வத் தமிழினை மறவா
பாங்குறு சகோதரர் தங்கள்
கண்ணியஞ் சான்ற நண்பினுக் குவந்து
கனிந்தகா ணிக்கையிந் நூலே.

# PREFACE

Printed here are a series of six Extension Lectures on a twelfth century Tamil Classic called **Kalinkattup-parani**, which it was my pleasure and privilege to deliver at Pakala during 1965-1966 under the joint auspices of Sri Venkateswara University and the Pakala Tamil Cankam. Extension lectures, as a means of fulfilment of the public and social functions of a University and its Faculty members and as a means of active contact with the intelligentsia outside its portals, have an importance which can hardly be exaggerated. In this case, the lectures, as I can testify by my experience, supplied a long-felt desire and need of the Tamils of Pakala and places around it. The lectures are a critical exposition of the classic of Jayankontan which is couched in a significant minor mode of Tamil literature called Parani, a model classic which, in fact, inaugurated the **Parani** tradition I am happy that, thanks to an enlightened gesture of the University administration, the lectures will reach a larger public through print. I take occasion to express my gratitude to the dynamic Vice-Chancellor Dr. D Jaganatha Reddy and the Members of the Syndicate for arranging for the extension lectures, and later, sponsoring publication of the lectures in book form by the University. I thank the Pakala Tamil Cankam for hosting the lectures, and the lecturer too

Department of Tamil,
S. V. University, N. Subbu Reddiar
March 31, 1972.

# உள்ளுறை

# அறிமுகம்

முதற் பொழிவு

தமிழன்பர்களே! தாய்மார்களே!

வணக்கம். இக் கூட்டத் தொடர்கள் திருவேங்கடவன் பல்கலைக்கழகம், பாக்காலா தமிழ்ச் சங்கம் இவர்களின் ஆதரவில் நடைபெறுகின்றன. சொற்பொழிவுகள் தொடர்ந்து நடைபெற இசைவு தந்த பல்கலைக் கழகத்தினருக்கும், கூட்டங்கள் நடைபெற இடவசதி முதலியவை அமைத்துத் தந்த இத்தமிழ்ச் சங்கத்தினருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இங்ஙனம் இரு கழகங்களின் ஆதரவில் நடைபெறும் இக் கூட்டத் தொடர்களில் தண்டமிழ் மொழிக்குக் கருத்துக் கருவூலமாகவும் தமிழன்னைக்கு அணிகலனாகவும் திகழும் 'கலிங்கத்துப் பரணி' என்ற நூல்பற்றி ஆறு சொற்பொழிவுகள் நிகழ்த்தத் திட்டமிட்டுள்ளேன். இன்று முதற் சொற்பொழிவு நடைபெறுகின்றது.

**நூல் அறிமுகம்** இன்று 'கலிங்கத்துப் பரணி' என்ற நூலை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும் நோக்கத்தில் வந்துள்ளேன். சாதாரணமாக சமூகத்தில் புதிதாகச் சந்திக்க நேரும் அன்பர்களை அறிமுகம் செய்து வைக்கின்றனர் அல்லவா? அத்தகைய ஓர் அறிமுகமே இது. அன்பர் யார்? அவர் எங்கிருந்து வருகின்றார்? அவருடைய தகுதி என்ன? சமூகத்தில் அவருடைய நிலை என்ன? என்பன போன்ற சில பொதுச் செய்திகளை மேம் போக்காகக் கூறியே அந்த அன்பர் அறிமுகம் செய்து வைக்கப் பெறுகின்றார். அதன் பிறகுதான் அவருடைய இயல்புகள், உயர்குணங்கள், நற்பண்புகள், பண்பாடுகள் முதலியவற்றை நாம் விரிவாக அறிகின்றோம். அத்தகைய ஒரு முறையில் இன்று மேம்போக்காக — ஒரு வெள்ளோட்டம் போல் — நூலைப் பற்றி அறிமுகம் செய்ய எண்ணுகிறேன்.

கலிங்கத்துப் பரணி என்பது போர்பற்றி எழுந்த ஓர் அரிய சிற்றிலக்கியம் ஆகும். 'பரணிக்கோர் சயங்கொண்டான்' என்று போற்றப்பெறும் சயங்கொண்டார் என்ற கவிஞர் கோமானால் இயற்றப்பெற்ற ஓர் அற்புதக் காப்பியம். 'செஞ் சொற் கவி இன்பம்'[1] என்று கம்பநாடன் கூறுகின்றானே, அந்தக் கவி இன்பத்தை இந்நூலிலுள்ள ஒவ்வொரு பாடலிலும் பெற்று அநுபவிக்கலாம்; ஒவ்வொரு பாடலும் ஒரு படித் தேனாக இனிப் பதனையும் அறியலாம். இந்தக் கவிப்பா அமுதத்தை இசையின் கறியோடுண்டால் மேலும் அதிகச் சுவையோடு[2] இருப்பதையும் உணரலாம். இழுக்குடைய பாட்டையும் இசை நல்ல பாட்டாகச் செய்து விடும் என்று நம்முன்னோர்கள் சொல்லிவைத்ததை நாம் அறிவோமன்றோ? கலிங்கத்துப் பரணி என்னும் நூல் பிற்காலச் சோழர்களில் பேரரசனாகத் திகழ்ந்த முதற் குலோத்துங்கன் தன் படைத் தலைவனை கருணாகரத் தொண்டைமான் என்பவனைக் கொண்டு கலிங்க நாட்டின்மீது போர் தொடுத்து வென்ற செய்தியைப் பொருளாகக் கொண்டு கவிஞர் பெருமானால் அமைக்கப்பெற்ற ஒரு கற்பனைக் கருவூலம்; சுவைகளின் களஞ்சியம்; வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்த ஓர் இலக்கியப் பெட்டகம். அளவுடன் அணிகளைப் புனைந்து கொண்டு அரங்கிற்கு வரும் அழகிய நங்கையை யொத்துள்ளது இக்காவியம் என்று இந் நூலினைப்பற்றிச் சுருக்கமாக அறிமுகம் செய்து வைக்கலாம்

இன்னொரு முக்கிய செய்தியையும் ஈண்டு உங்கள் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகின்றேன். தமிழில் நூல்கள் அவற்றின் தோற்றத்தின் முறையினை அடிப்படையாகக் கொண்டு முதல் நூல், வழி நூல், சார்பு நூல் என்று மூன்று வகையாகப் பிரித்துக் கூறப்பெறும் என்பதை நாம் நன்கு அறிவோம். எடுத்துக்காட்டாக 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' ஒரு முதல் நூல் காரணம், அது முதன் முதலில் தமிழிலேயே இயற்றப்பெற்றது. இக்கதை நிகழ்ந்த காலமும், இக்காவியத்தை யாத்த கவிஞரின் காலமும் ஒன்றென்று அறியப்பெறுதலால் இந் நூல் வேற்று மொழியினின்றும் எழுதப்பெற்றதன்று என்று உறுதியாக நம்ப இடம் உள்ளது. அங்ஙனமே, கலிங்கத்துப் பரணியும் ஒரு முதல் நூலேயாகும். கலிங்கப் போர் நிகழ்ந்த காலமும், அப்போரை அடிப்படையாகக் கொண்டு காப்பிய மாக்கிய சயங்கொண்டாரின் காலமும், காப்பியத்தில் போற்றப் பெறும் முதற் குலோத்துங்கனின் காலமும் ஒன்றாக இருப்பதாலும்,

1. கம்ப. பால. மிதிலைக். காட்சி 23
2. சடகோபரந்தாதி 7

தமிழிலியே முதன் முதலாகச் செய்யப்பெற்றதாலும் இதுவும் முதல் நூல் ஆகின்றது. மேலும், சிலப்பதிகாரத்திற்கு இல்லாத ஒரு பெருமையும் இதற்கு உண்டு. மாடலன் மூலமாகக் கேள்வியுற்று கோவலன் வரலாற்றைப் பொருளாகக் கொண்டு இளங்கோ அடிகள் தம் காவியத்தை அமைத்தார். ஆனால், சயங்கொண்டாரோ தாம் நேரில் கண்ட, கேட்ட கலிங்கப் போர் வரலாற்றைப் பொருளாகக் கொண்டு தம் நூலை அமைத்துள்ளார். கேள்வியுற்ற செய்தியைவிட, நேரில் கண்ட செய்தி தெளிவாக மனத்தில் அமையும் என்பதை நாம் நன்கு அறிவோம்.

பிறிதொரு கருத்தினையும் உங்கள் முன் வைக்கின்றேன். தமிழ் இலக்கியச் செல்வங்களைப் 'பேரிலக்கியங்கள்' என்றும் 'சிற்றிலக்கியங்கள்' எனறும் வகைப்படுத்திக் கூறலாம். அடிகளால் மிகுந்து, பொருள்களால் சிறந்து, மக்கள் வாழ்வை யொட்டி அவர்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தி இன்பம் நல்கத் தோன்றியவையெல்லாம் பேரிலக்கியங்களாகும். சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்றவை இப்பிரிவில் அடங்கும். இவைகள் தாம் கூறும் பொருட்பாகுபாட்டால் பெயர் பெற்றுத் திகழும். அடிகளால் குறைந்து கற்பனை மிகக் கடவுளர்களையும், வெற்றித் திறத்தால் நாட்டுப் பரப்பைப் பெருக்கிய மன்னர்களையும், கொடைவண்மையாலும் பிறவற்றாலும் புகழ் எய்திய வள்ளல்கள் வேளிர்கள் போன்ற செல்வர்கள் இவர்களையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு இயற்றப்பெறும் இலக்கியங்களே சிற்றிலக்கியங்கள் என்ற பிரிவில் அடங்கும. 'பிரபந்தங்கள்' என்ற வடசொலலால் வழங்கப்பெறுவனவெல்லாம் சிற்றிலக் கியத்தின் பாற்பட்டவையாகும்.

கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் சிற்றிலக்கியங்கள் வளரத் தொடங்கி நாளடைவில் பலவகையாய்ப் பல்கிப் பெருகியுள்ளன இவை கோவை, உலா, பரணி, பிள்ளைத்தமிழ், அந்தாதி, கலம் பகம், தூது, குறவஞ்சி, பள்ளு, மடல், மாலை என்று பல்வேறுபட்ட வகைகளாகும். இவற்றுள் உலகியல் கடந்த கற்பனை நிகழ்ச்சி களும், புராணக் கதைகளும், உயர்வுநவிற்சியணிகளும், திரிசொல் லாட்சிகளும், இல்பொருள் உவமைகளும் நிறைந்து கற்பவர் உள்ளங்களைக் கவர்ந்து நிற்கும். இச்சிற்றிலக்கியங்கள் (பிரபந் தங்கள்) தொண்ணூற்றாறு வகைப்படும் என்று கூறும் மரபு ஒன்று உண்டு. சிற்றிலக்கியங்கள்பற்றிய இலக்கணம் கூறும் நூல்களும் பிற்காலத்தில் எழுந்தவையேயாகும். பன்னிரு பாட்டியல், வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல், நவநீதப்

பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் போன்ற நூல்களே சிற்றிலக்கியங்கட்கு இலக்கணம் கூறும் நூல்களாகும். இவற்றுள் ஒன்றிலாயினும் 'பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு' என்ற வரையறை காட்டப் பெறவில்லை; அவற்றிற்கு இலக்கணமும் கூறப்பெறவில்லை. அவற்றில் கூறப் பெறும் இலக்கணங்களும் மாறுபட்ட கருத்துக்களுடன் மிளிர் கின்றன. தொண்ணூற்றாறு என்ற வரையறைக்குள் அடங்காத நொண்டி நாடகம், கப்பற்பாட்டு, வில்லுப்பாட்டு, கும்மிப்பாட்டு, கோலாட்டப் பாட்டு, ஆநந்தக்களிப்பு, கிளிக்கண்ணி, விலாசம், புலம்பல், உந்திபறத்தல், சாழல், தெள்ளேணம், வள்ளைப்பாட்டு, கவசம், ஓடப்பாட்டு, காதல், ஏற்றப் பாட்டு முதலான பல சிற்றி லக்கியங்களும் உள்ளன.

**பரணி—பெயர்க்காரணம்** : இனி, 'பரணி' என்ற பெயர்க் காரணத்தைக் காண்போம். 'பரணி' என்பது நாளின் (நட்சத் திரம்) பெயராகும் என்பதை நாம் அறிவோம். பரணி நாளில் கொண்டாடப்பெறும் போர் வெற்றி விழாவைச் சிறப்பித்துப் பாடப் பெற்றதால், பரணி என்று நூலும் பெயர் பெற்றுவிட்டது. போர்க்குரிய கடவுள் கொற்றவை; காளி. கொற்றவைக்குரிய நாள் பரணி. பரணி நாளில் கொற்றவைக்குப் படையலிட்டு வெற்றி விழாவைக் கொண்டாடுவது வழிவழி வந்துகொண் டிருக்கும் வழக்கமாகும். இதனைத் தேவ பாணியில் அடக்கிப் பேசுவர் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவராகிய பேராசிரியர் என்பார். புறத்திணைகள் பலவும் நூலில் விரவி வருதலாலும் பாட்டுடைத் தலைவனைப் பெய்து சொல்லப்படுவதாலும் இங்ஙனம் கொண்டதற்கு ஒரு காரணமும் கூறுகின்றார் அவர். இவரே 'காடு கெழு செல்விக்குப் பரணி நாளில் கூழும் துணங்கையும் கொடுத்து வழிபடுவதோர் வழக்கு'[3] என்று கூறிய வழக்கினைச் சுட்டி யுரைப்பதையும் காண்மின். அதே தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவிற்கு உரையெழுதிய உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியரும், "பரணியாவது—காடு கெழு செல் விக்குப் பரணி நாட் கூழும் துணங்கையும் கொடுத்து வழிபடுவ தோர் வழக்குபற்றியது; அது பாட்டுடைத் தலைவனைப் பெய்து கூறலிற் புறத்திணை பலவும் விராயிற்று" என்று கூறுவதையும் உணர்வீர்களாக. காடு கெழு செல்வி என்பது ஈண்டுக் கொற்ற வையைக் குறிப்பதாகும். பரணி நூலில் புறத்திணைத் துறைகள் பலவும் பயின்றுள்ளமையும் நன்கு காணலாம். களவேள்வி, பின்

3. தொல். பொருள்-செய்யுளி-149 இன் உரை காண்க.

தேர்க்குரவை, மாறூர்ச் சுட்டிய வாண்மங்கலம் முதலிய துறைகள் பரணி நூல்களுள் பரக்கக் காணப்பெறுகின்றனவாகும்.

'தமிழ்த் தாத்தா' என்று இன்று அன்போடு குறிப்பிடப்பெறும் டாக்டர். உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் பரணி என்ற நாள் மீன் காளியையும் யமனையும் தன் தெய்வமாகப் பெற்றது என்றும், அந் நாள்மீனுல் வந்த பெயரே நூலுக்கும் பெயராக அமைந்தது என்றும், அவ்வாறு கொள்வதே ஏற்புடைத்து என்றும் கூறுகின்றார்கள்.[4] இதற்கு,

> " காடு கிழவோள் பூத மடுப்பே
> தாழி பெருஞ்சோறு தருமனுள் போதமெனப்
> பாகு பட்டது பரணிநாட் பெயரே "

என்னும் திவாகரத்தையே அவர்கள் ஆதாரமாகக் கொண்டு இவ்வாறு கூறுகின்றார்கள்.

மேலும், 'பரணி பிறந்தான் தரணி யாள்வான்' என்னும் பழமொழியும், 'பரணியான் பாரவன்' என்ற நன்னூல் மயிலை நாதர் உரை மேற்கோளும்,[5] "பரணிநாட் பிறந்தான்" என்பதற்கு[6] 'பரணி யானை பிறந்த நாளாதலின் அதுபோலப் பகையை இவன் மதியான்' என்ற நச்சினார்க்கினியரின் விசேட உரையும் பரணி நாள் வெற்றியோடு தொடர்பு உடையது என் பதைத் தெரிவிக்கின்றன

இவ்விடத்தில் என் அருமை நண்பர் பேராசிரியர் ந. சேதுரகுநாதன் அவர்கள் 'பரணி' என்ற சொல்லுக்குக் கூறும் பொருளையும் உங்கள் முன் வைத்துக் காட்டினால் நம் எல்லோருக்கும் மகிழ்ச்சி யுண்டாகும் என்று கருதுகின்றேன். அருமையாக அண்மி இருக்கின்ற காரணத்தால் கோட்டையையும் காட்டுப் பொழிலையும் 'அரண்' என்று கூறுகின்றோம். பருமை அண்ணுதல் (அண்ணுதல் - பொருந்துதல்) காரணமாக யானைக்கும் எட்டாத உயர்வுடைய பரிய தூண்களுடையதாக அமைக்கப்பெற்றதைப் 'பரண்' என்று வழங்குவதையும் நாம் அறிவோம். அங்ஙனமே, பருமையாகிய அணியாகிய யானைப் படையே பரணி எனப் பெயர் பெற்றது என்று கூறுவர் என் நண்பர். நால்வகை அணிகளுள் தேர் அஃறிணையுள் உயிரில்

4. தக்கயாகப் பரணி-முன்னுரை. பக் 11.
5. நன்னூல் நூற்பா, 150 மயிலைநாதர் உரை காண்க.
6. சிந்தா 1813. நச். உரை.

பொருளாக இருத்தலின் அதனை நீக்கிப் பரிய அணியாகிய யானைப் படை மட்டிலும் சிறந்ததாகக் கொள்ளப் பெற்றது. பருமையாகிய அணி பரணியாகும் என்பது, என் நண்பரின் கருத்து இந்த யானைப் படை, ஏனைய மூன்று வகைப் படைகள் போலன்றி, மேலாள் இல்லாத வழியும் கதமும் மதமும் சிறந்து தாக்குவதாதலின் அதுவே ஈண்டுப் பரணியாக, பெரிய அணியாக, மதிக்கப் பெற்றது என்று கொள்ளல் ஏற்புடைத் தாகும். அத்தகைய படையிலும் ஆயிரம் யானைகளைக் கொன்ற வனுக்கே பரணி பாடப்பெறும் என்பதுவும் அறியத்தக்கது. இவ்வழக்கே பின்னர் இலக்கண வழக்காகவும் வந்து விட்டது.

**பரணி-இலக்கணம் :** இனி, பரணி நூலின் இலக்கணத்தை விளக்கலாம் என்று கருதுகின்றேன். போர் முகத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றி கொண்ட வீரரைப் புகழ்ந்து பாடு வதைப் 'பரணி' என்று வழங்குவர்.

> "ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
> மானவ னுக்கு வகுப்பது பரணி" [7]

என்ற இலக்கண விளக்கப் பாட்டியல் நூற்பாவால் இதனை அறிய லாம். தவிர,பெரும் போர் புரிந்து வெற்றிபெற்ற வீரனைச் சிறப்பித் துப் பாடுவதையும் பரணி என்று வழங்கும் மரபும் உண்டு. ஈண்டு ஒரு முக்கிய குறிப்பினை நினைவூட்ட விரும்புகின்றேன். வெற்றி பெற்றோனைச் சிறப்பிப்பதே பரணி நூல் என்ற வழக்கு நிலை பெற்றி ருந்தாலும் தோற்றோரைச் சார்ந்தே நூலுக்குப் பெயரிடப்படும் முறையும் பரணி நூல்களின் பெயரால் அறியக் கிடக்கின்றது. 'கலிங்கத்துப் பரணி' என்பது தோல்வியுற்ற கலிங்க மன்னனின் நாட்டின் பெயரால் அமைந்துள்ளதன்றோ ? 'தக்கயாகப் பரணி' என்ற நூலின் பெயரும் தோல்வியுற்ற தக்கன் பெயரால் அமைந் திருப்பதை அறிகின்றோ மன்றோ ? 'இரணியவதைப் பரணி' 'கஞ்சவதைப் பரணி' ஆகிய இரண்டிலும் தோற்று மாண்ட வீரர்களின் பெயர்கள் வந்திருத்தல் காண்க. தோல்வியுற்றோரை யும் பெருமைப்படுத்தும் உயர்பண்பு தமிழர்களிடையே என்றும் நிலவி வந்தது என்பதனைப் பரணி நூல்கள் தம் பெயரால் பறை சாற்றி நிற்கின்றன. இங்ஙனம் போரில் வெற்றிபெற்ற மன்னர் கள், மாபெரும் வீரர்கள் இவர்களின் புகழ் விளங்கப் பாடப் பெற்ற பரணி காலப்போக்கில் பிற துறைகளில் வெற்றிபெறு தலையும் பொருளாகக் கொண்டாடும் நிலைக்கு வந்துவிட்டது. தெய்வங்கள் பேரிலும் தத்தம் ஆசிரியர்கள் பேரிலும் பரணி

---

7. இலக். விளக். நூற்பா 78

நூல்கள் இயற்றப்பெற்று வழங்கி வருவதை நோக்குமின்கள். எடுத்துக்காட்டாக 'கஞ்சவதைப் பரணி' கஞ்சனைக் காய்ந்து காலனுலகிற்கு அனுப்பிய கண்ணன் புகழ் பாட எழுந்த பரணி நூலாகும். அங்ஙனமே,

> ''எங்கும் உளன் கண்ணன்'
> என்றமக னைக்காய்ந்து,
> 'இங்கில்லை யால்' என்(று)
> இரணியன் தூண்புடைப்ப,
> அங்கப் பொழுதே
> அவன்வீயத் தோன்றிய, என்
> சிங்கப் பிரான்பெருமை''[8] யைப்

பாட எழுந்த நூல் 'இரணியவதைப் பரணி' யாகும் இந்த இரண்டிலும் தோற்று மாண்டவர்களின் பெயர்களாலேயே நூல்களின் பெயர்கள் அமைந்திருத்தல் எண்ணி அறியத்தக்கது. 'பாசவதைப் பரணி' என்னும் நூல் **வைத்தியநாத தேசிகர்** என்பாரால் தம் ஞானாசிரியராகிய சிவஞான பாலைய சுவாமிகளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பெற்ற ஒரு பைந்தமிழ்ப் படையல் இதில் ஆசிரியர் பாசத்தைப் பாசமன்னனாகவும், புல்லறிவை அம் மன்னனின் அமைச்சனாகிய துன்மதியாகவும், காமம் குரோதம் மோகம் உலோபம் மதம் மாற்சரியம் என்னும் உட்பகை ஆறையும் பாச மன்னனின் படைத் தலைவர்களாகவும் அழகுற உருவகித்துள்ளார் இவற்றிற்குப் பொருத்தமாக ஞானத்தைச் சிவஞான பாலைய சுவாமிகளின் தண்டத் தலைவராகவும், நிரூபகம் பொறை சந்தோடம் விவகாரபராமுகம் சாந்தம் சீலம் இவற்றை ஞான விநோதரின் படைத் தலைவர்களாவும் உருவகம் செய்துள்ளார். ஞானத்தால் பாசம் அழிந்ததை ஞான விநோதருடைய படைகளால் பாசமன்னன் அழிந்ததை எழிலுடன் உருவகித்து ஓதியுள்ளார். இந்தப் பனுவலிலும் ஞானத்தினுல் அழிவுற்ற பாசத்தின் பெயராலேயே நூலின் பெயர் அமைந்திருத்தல் கண்டு மகிழத்தக்க தாகும்.

இவ்விடத்தில் கம்பராமாயணத்திலுள்ள ஒரு நிகழ்ச்சியையும் எடுத்துக் காட்டுவது பொருத்தமாகலாம் என்று கருதுகின்றேன். மேகநாதன் நிகும்பலையாகம் செய்யத் திட்டமிட்டு அதனையும் நடத்துகின்றான். வீடணன்மூலம் இதனையறிந்த இராமன் தன் தம்பி இலக்குவனையும் அவனுடன் அநுமன் முதலிய துணைவர்கள் அடங்கிய படையையும் அனுப்புவித்து அந்த யாகத்தைக் குலைக்கச் செய்கின்றான். இருவரிடையேயும் பெரும்போர் நிகழ்

8. திருவாய். 2. 8 : 9.

கின்றது. போரினைத் தொடர்ந்து நடத்த முடியாத மேகநாதன் போரின் நடுவில் மாயமாக மறைந்து இராவணன் மருங்குச் சென்று வீடணன் உளவு கூறியதையும் இலக்குவனின் வீரச் செயல்களையும் எடுத்துக் கூறிச் 'சீதையைவிட்டு விடுவதேதக்கது' என்று யோசனை கூறுகின்றான். இராவணன் சினந்து தன்மகனை நோக்கிப் பலபடப் பேசுகின்றான். அப்போது,

" வென்றிலன் என்ற போதும்
வேதம்உள் ளளவும் யானும்
நின்றுளன் அன்றோ மற்ற
இராமன்பேர் நிற்கு மாயின் "[9]

என்று பேசுகின்றான். தான் இராமனை வெல்லாவிடினும் தன்னை வென்ற இராமன் பெயர் இவ்வுலகில் நிலைத்து நிற்கும் காலம் வரையிலும் தன் பெயரும் நிற்கும் என்றன்றோ கூறுகின்றான்? இத்தகைய ஒரு கருத்தின் அடிப்படையில்தான் தோற்றவர்களின் பெயர்களால் பரணிப் பனுவல்களின் பெயர்களும் அமைந்தன போலும் என்று கருதுவதில் தவறு இல்லை அல்லவா?

இனி, பரணிக்குரிய யாப்புபற்றியும் குறிப்பிட விரும்பு கின்றேன். ஒருநூலில் கூறப்பெறும் பொருளுக்கேற்ப அந்நூலில் வரும் பாடல்களில் சந்தம் அமையின் அது கற்போர்க்கு இனிமை பயக்கும் என்பதை நாம் அறிவோம். கலிப்பாவின் ஒருவகையான கொச்சகக் கலி என்னும் பாவின் உறுப்பாகிய ஈரடிக் கலித் தாழிசை என்ற உறுப்பே பரணிப் பனுவலுக்கு ஏற்றது என்று தேர்ந்தெடுத்துள்ளனர் கவிஞர்கள். எனவே, ஆனை ஆயிரம் அமரிடை வென்றவனைப்பற்றிப் புறத்திணைகள் விரவி வருமாறு ஈரடிக் கலித்தாழிசையால் பாடப் பெறுவது பரணிப் பனுவலாகும் என்பதை அறிகின்றோம். இதனை,

" மயக்கறு கொச்சகத் தீரடி இயன்று
நயப்புறு தாழிசை உறுப்பிற் பொதிந்து
வஞ்சி மலைந்த உழிஞை முற்றித்
தும்பையிற் சென்ற தொடுகழல் மன்னனை
வெம்புசின மாற்றான் தானைவெங் களத்தில்
குருதிப் பேராறு பெருகுஞ் செங்களத்து
ஒருதனி ஏத்தும் பரணியது பண்பே."[10]

என்ற பன்னிருபாட்டியல் நூற்பாவால் அறியலாம். பரணியின் யாப்பை,

9. கம்பரா. யுத்த. இந்திரசித்துவதை—10.
10. பன்னிருபாட்டியல்—நூற்பா 87,

" —கண்டிய
நேரடியோ(டு) ஆதியாம் நீண்டகலித் தாழிசை
ஈரடிகொண்(டு) ஆதியுடன் ஈறு."[11]

என்ற வெண்பாப் பாட்டியல் நூற்பாவின் பகுதியாலும் அறியலாம். கொச்சகக் கலியை 'கொச்சக ஒரு போகு' என்றும், ஈரடித் தாழிசைகள் 'தேவபாணி' என்றும் வழங்கப்பெறும். மேலும், பரணியின் யாப்புபற்றிய குறிப்பினைச் சிதம்பரப் பாட்டியல்,[12] பிரபந்தத் தீபிகை,[13] நவநீதப்பாட்டியல்[14] முதலிய நூல்களிலும் காணலாம்.

**பரணி நூல்களின் தோற்றமும் தோன்றிய காரணமும் :** மேற் கூறிய இலக்கணங்களுடன் தோன்றிய பரணி நூல்களின் தோற்றத்தை ஆராய்ந்தால் அது மிகத் தொன்மையுடையது என்பதனை அறியலாம். பரணி நூல்களில் கூறப்பெறும் செய்திகள் சங்க நூல்களில் காணப்பெறுகின்றன. தொல்காப்பிய உரைகளில் பல இடங்களில் பரணி நூல்கள் எடுத்துக் காட்டப்பெறுகின்றன. மேலும், தமிழ் இலக்கிய இலக்கணங்களில் குறிப்பிடப்பெறும் பொருநருள் 'பரணி பாடும் பொருநர்' என்று ஒருவகையார் இருந்தனர் என்பதைச் சிந்திக்குங்கால் பரணியின் பழைமையை ஒருவாறு உய்த்துணர முடிகின்றது. இன்று நமக்குக் கிடைத்துள்ள பரணி நூல்களுள் நாம் ஆராய இருக்கும் 'கலிங்கத்துப் பரணி' என்ற பரணிப் பனுவலே மிகப் பழைமையுடையது; தலைமையும் உடையது. "கலிங்கத்துப் பரணியின் செப்பத்தைப் பார்க்கும்போது அது பல புலவர்கள் பாடிய பரணிகளைப் பயின்றதனால் உண்டான பயனென்றே எண்ண வேண்டியிருக்கின்றது" என்று டாக்டர் உ.வே சாமிநாதய்யர் அவர்களும் குறிப்பிடுகின்றார்கள். ஆகவே, கலிங்கத்துப் பரணி தோன்றுவதற்கு முன்னும் பல பரணி நூல்கள் இருந்திருக்கலாம் என்று எண்ணுவதில் தவறு ஒன்றும் இல்லை.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பரணி நூல்களை ஆராய்ந்தால் அவை தோன்றியதற்குரிய காரணமும் புலனாகின்றது (அவை

11. வச்சணந்தி வெண்பாப் பாட்டியல்—செய்யுளியல் [நூற்பா—38.
12. சிதம்பரப் பாட்டியல்.
13. பிரபந்தத் தீபிகை—6.
14. நவநீதப் பாட்டியல்—56.

செய்ந்நன்றியறிதல் காரணமாகவும், கடவுட் பற்றுக் காரண மாகவும், ஞான உணர்வு காரணமாகவும் தோன்றியுள்ளன என்பதனை அறியலாம். கலிங்கத்துப் பரணியும் தக்கயாகப் பரணியும் செய்ந்நன்றி காரணமாக அரசர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பெற்றவையாகும். ஆயினும், தக்கயாகப் பரணி அரசனை நேரிடையாகத் தலைவனுகக் கொள் ளாமல் சார்த்து வகையால் கொண்டு, தக்கன் செய்த யாகத்தை வீரபத்திரர் அழித்த வெற்றியைப பாராட்டு முகத்தான் அமைந் துள்ளது.

மாநிலத்தைக் காவல் கொண்டு மன்னுயிர் காக்கும் மன்னர் பால் செலுத்தப்பெற்ற அன்பு நாளடைவில் உலகினையே படைத்துப் புரக்கும் கடவுள்பால் திருப்பப்பெற்றது இறைவ னுடைய கருணைத்திறத்தைப் பாராட்டும் முறையால் பல பரணி நூல்கள் எழுந்தன. 'கஞ்சவதைப் பரணி', 'இரணியவதைப் பரணி', சூரன்வதைப் பரணி' என்பன இம் முறையில் தோன்றிய பரணி நூல்களாகும். காலப் போக்கில் ஞானசிரியர்களையே கடவுளாகக் கருதும் வழக்கமும் ஏற்பட்டது. அவர்களைப் பாராட்ட விரும்பிய புலவர்கள் அவர்கள்மீது பரணி நூல்களை இயற்றினர். 'அஞ்ஞவதைப் பரணி' 'மோகவதைப் பரணி', 'பாசவதைப் பரணி' என்பன இவ்வாறு எழுந்தவை. ஆகவே, பரணிப் பனுவல்கள் எழுவதற்கு அரசர் அன்பு, ஆண்டவன் பற்று, ஆசிரியர் வழிபாடு ஆகியவை காரணமாக இருந்தன என்பதை அறிகின்றோம்.

**நூல் தோன்றும் சூழ்நிலை :** இவ்விடத்தில் ஒரு நல்ல நூல் தோன்றுவதற்கேற்ற சூழ்நிலைபற்றி ஒரு சில கருத்துக்களைக் கூறுவது பொருத்தமாக இருக்கும் என்று கருதுகின்றேன். மனித னிடம் இயல்பாக அமைந்துகிடக்கும் ஆற்றல்களுள் படைப் பாற்றலும் (Creative activity) ஒன்று. அவன் தன் கடமைகளை ஆற்றுவதற்கு அதுவே பெருந்துணையாக உள்ளது. அந்த ஆற்றல்தான் அவனுக்கு நம்பிக்கையை ஊட்டி அவன் வெற்றியை அடையவும், அதனுல் ஒருவித மனநிறைவு கொள் ளவும் இன்றியமையாததாகின்றது. இப்படைப்பாற்றல் இலக் கியத்துறை, கலைத்துறை ஆகியவற்றில்தான் செயற்படும் என்பதில்லை; பிறதுறைகளிலும் செயற்படத்தான் செய்கின்றது அங்ஙனம் இல்லையாயின் மனிதன் தன் மனநிறைவினை எட்டிப் பிடிக்கவே முடியாது எல்லா மொழிகளிலும் உள்ள பேரிலக்கி யங்கள் தோன்றுவதற்கு இவ்வாற்றலே முதற் காரணமாகும்.

ஆயினும், இவ்வாற்றல் மட்டிலும் செயற்பட்டால் போதாது; அதற்கேற்ற சூழ்நிலையும் அமைதல் வேண்டும்.[15].

உலக இலக்கிய வரலாற்றைக் கூர்ந்து நோக்கினுல் எல்லாக் காலங்களிலும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பேரிலக்கியங்கள் தோன்றவில்லை என்பது புலனுகும். இதிலிருந்து அக்காலத்தில் கவிதை ஆற்றல் படைத்தவர்கள் தோன்றவே இல்லை என்று முடிவு கட்டுதல் தவறு. பெரும் புலமையும் பேராற்றலுமுடைய கவிஞர்கள் தோன்றியிருந்துமிருக்கலாம்.ஆனுல் அந்தக் காலத்து அரசியல், பொருளியல் முதலிய காரணங்களால் அவர்கட்குத் தக்க சூழ்நிலை வாய்க்கவில்லை எனக் கருதுவதே பொருத்தமாகும். பிறந்த இனம் (the race), சூழ்நிலை (milieu), சரியான காலம் (the moment) ஆகிய இம்மூன்றும் இணைந்து செயற்பட்டால்தான் ஒரு கவிஞனின் தனித்திறமை வெளிப்படும் என்று பிரெஞ்சு அறிஞர் டெயின் (Taine) என்பார் தாம் எழுதியுள்ள "ஆங்கில இலக்கிய வரலாறு" என்ற நூலில் கூறியிருப்பதையும் ஈண்டுச் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன். 'பருவத்தால் அன்றிப் பழா' என்ற நம் நாட்டு முதுமொழியின் உண்மை இலக்கியத் துறைக்கும் பொருந்தும். தக்க சூழ்நிலை அமையாதபொழுது பேரிலக்கியங்களைப் படைக்க மேற்கொள்ளும் முயற்சி பயனற்ற தாகப் போய்விடும் உலக இலக்கிய வரலாற்றில் இதற்கு எத்தனையோ சான்றுகள் உள்ளன.

படைப்பாற்றல் செயற்படுவதற்குச் சில பொருள்கள் இன்றியமையாதவை பக்குவப்பட்ட நிலையில் அப்பொருள்கள் அமையாவிடின் படைப்பு எங்ஙனம் முகிழ்க்கும்? அப்பொருள்கள் பக்குவ நிலையினை எய்தும்வரை இலக்கிய ஆசிரியன் காத்திருக்கத்தான் வேண்டும் இலக்கியத்தைப் பொறுத்த மட்டிலும் கருத்துக்களே அப்பொருள்களாகும் கருத்துக்கள் கலையுணர்ச்சியுடன் கையாளப்பெற்றுல் அவை பேரிலக்கியங்களாக வடிவெடுக்கும். இலக்கியங்களில் காணப்பெறும் கருத்துக்கள் யாவும் சிறந்தவை; பண்பட்ட நிலையிலிருப்பவை. இதனுல் வாழ்க்கையே இலக்கியமாக வடிவெடுக்கின்றது [16]

15. "For a creation of master-work of literature two powers must concur, the power of the man and the power of the moment, and the man is not enough of the moment" (Mathew Arnold).

16. Literature is a criticism of life p. 14 (Hudson : *An Introduction to the Study of Literature* ) (1946)

என்பது பெறப்படுகின்றது. அங்ஙனமே இலக்கியமும் வாழ்க்கையை நெறிப்படுத்துகின்றது என்பதனையும் நன்கு உணரலாம். மொழியின் துணைக்கொண்டு வாழ்க்கை முறையினை எடுத்துக் காட்டுவதுதான் இலக்கியமாகும்.[17] சில ஆசிரியர்கள் இத்தகைய உண்மைகளைக் குறிப்பாகப் புலப்படுத்துவர்; வேறு சிலர் வெளிப்படையாக எடுத்துரைக்கவும் செய்வர்.

சமுதாய வாழ்வு இலக்கியத்தில் பிரதிபலிக்கும் என்று கூறினேன். இலக்கியத்தைப் படைக்கும் ஆசிரியன் தன் காலத்தில் தான் வாழும் சமுதாயத்தில் நடைமுறையிலுள்ள கருத்துக்களை இலக்கியத்தில் காட்டுவான். நிலவும் கருத்துக்களை அவன் ஒன்று சேர்த்து விளக்கம் செய்வானே யன்றிப் புதிய கருத்துக்களைக் கண்டறிவது அவன் நோக்கம் அன்று. புதிய கருத்துக்களைக் கண்டறிவதும், அவற்றை வெளிப்படுத்துவதும் மெய்யறிவுத்துறை (Philosophy) அறிஞனின் செயலாகும். இலக்கிய ஆசிரியன் அக் கருத்துக்களைக் கலைத்திறனுடன் காட்டுவதற்கு ஏற்ற வாய்ப்பினை உண்டாக்கிக் கொள்ளுவான்; தான் காட்ட நினைக்கும் கருத்துக்களைக் கவர்ச்சிகரமானவையாய் ஓர் ஒழுங்கில் கோவையாக அமைத்துக்கொள்ளுவான் அவற்றைத் தான் ஏற்படுத்திக்கொண்ட வாய்ப்பில் மிகத் திறனுடன் கவர்ச்சிகரமாக அமையும்படி செய்வான். இவ்வாறு செய்வது எளிதான செயலன்று. எனவேதான், எல்லாக் காலங்களிலும் சிறந்த இலக்கியங்கள் தோன்றுவதில்லை. பேராற்றல் வாய்ந்த ஒருசில ஆசிரியர்கள் தோன்றியிருந்தாலும் அவர்கள் சிறப்புடன் திகழ முடியாது போய்விட்டது என்றுதான் கொள்ள வேண்டும். ஆசிரியனிடம் திறன் அமைந்திருந்தும் ஏற்ற சூழ்நிலை அமையாத காரணத்தால் அவன் படைப்பு சிறப்புடன் மிளிர்வதில்லை. படைப்புக்கேற்ற சூழ்நிலையை அமைத்துக் கொள்வது அவனுடைய கையிலும் இல்லை.

பொது வாழ்வில் நிலவும் கருத்துக்களை அவன் ஆட்சி செய்ய இயலாது போயினும், இலக்கியங்களுக்கேற்ற சூழ்நிலையை உண்டாக்கும் ஆற்றல்பெற இயலாவிடினும், இலக்கிய ஆசிரியனிடம் திறனும் திறன் அவன் விருப்பப்படி இயக்கவல்லதாக உள்ளது. இத்திறனும் திறனைக் கொண்டுதான் இலக்கிய ஆசிரியன் மக்கட்சமுதாயம் ஏற்றுக்கொள்ளக்கூடிய மனநிலையை உண்டாக்குகின்றான்; இத்திறன் மக்கட் சமுதாயத்தில் நிலவும்

17. Literature is thus fundamentally an expression of life through the medium of language ibid. p. 10.

கருத்துக்களை ஒழுங்கு படுத்தத் துணை புரிகின்றது; வலிவற்றுக் கிடக்கும் ஒரு சில கருத்துக்களை வலியுறச் செய்கின்றது. மக்கட் சமுதாயத்தில் நிலவும் கருத்துக்கள் ஒழுங்கு பெற்று இலக்கிய ஆசிரியன் படைக்கும் நூல்கள் வாயிலாக வெளிப்படுங்கால் அவை ஒரு புதிய வீறுடன்மீண்டும் மக்கட் சமுதாயத்தை அடைகின்றன; சமுதாய வாழ்வுடன் ஒன்றியும் விடுகின்றன. எனவே, சமுதாய வாழ்வே புத்துயிர் பெற்றுப் புதிய ஊட்டத்தை அடைகின்றது. இப்புதிய ஊட்டம் இன்னும் பல புதிய இலக்கியங்கள் தோன்றுவதற்கும் காரணமாகின்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் தோத்திரப்பாக்கள் எழுந்த காலம், காவியங்கள் தோன்றிய காலம், சிற்றிலக்கியங்கள் இயற்றப்பெற்ற காலம் ஆகிய கால எல்லைகளை ஆராய்ந்தால இவ்வுண்மை நன்கு புலனாகும். இக் கருத்துக்களின் அடிப்படையில் 'கலிங்கத்துப்பரணி'யை ஆராய்தல் வேண்டும் ; நோக்க வேண்டும்.

**பரணிநூலின் உறுப்புக்கள்.** இனி, பரணிப் பனுவலின் உறுப்புக்களைப்பற்றிப் பகர விரும்புகின்றேன். 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற பழமொழியின ஊறறத்தைத் தமிழ்க் கவிஞர்களிடம் தாராளமாகக் காணலாம எனவே, கடவுள் வாழ்த்து இன்றி எத்தமிழ் நூல்களையும் காண்டல் அரிது. ஆகவே, 'கடவுள் வாழ்த்து' முதல் உறுப்பாக அமைகின்றது. இவ்வுறுப்பு ஈண்டு மிக விநோதமாக அமைக்கப்பெற்று இருக்கும். நூல் இனிது முடிய இறைவனை வாழ்த்தாமல் நூலால் போற்றப் பெறும் தலைவன் வெற்றிபெற வாழ்த்தப்பெறும் பெற்றியை இங்குத்தான் காணலாம் இரண்டாவது உறுப்பாக அமைவது 'கடை திறப்பு'. நூலில் கூறப்பெறும் வென்றிச் சிறப்பைப் பாடுவதற்கு மாற்றார் தேயத்தினின்றும் கொணர்ந்துள்ள மகளிரையும் பிறமகளிரையும் வாயிற்கதவைத் திறந்து வரும் வண்ணம் அழைப்பதாக இப்பகுதியில் கூறப்பெறும் வீரச்செயல்களும் வெற்றிச் செயல்களும் நிகழ் காலத்தவை என்று ஒரு சாரார் கூறுவர்; கடந்த காலத்தவை என்று பிறிதொரு சாரார் பகர்வர். ஆனால் இன்று நமக்குக் கிடைக்கும் பரணி நூல்கள் அனைத்தையும் நோக்கினால் இவை முக்காலத்தையும் பற்றியவை என்பது தெளிவாகப் புலனாகும். எடுத்துக்காட்டுக்களாக கலிங்கத்துப் பரணியில் வரும் நிகழ்ச்சிகள் நிகழ்காலத்தைச் சுட்டுகின்றன; ஒட்டக் கூத்தர் இயற்றிய தக்கயாகப் பரணியில் வருபவை இறந்த காலத்தைப்பற்றியவை ; வைத்திய நாத தேசிகரால் இயற்றப் பெற்ற பாசவதைப் பரணியிலுள்ளவை எதிர்காலத்தவையாகும். இவ்வுறுப்பு, கடவுள் வாழ்த்தைப்போல் புற உறுப்பு என்று

கூறுவாரும் உள்ளனர். அடுத்து வரும் 'காடு பாடியது' என்னும் உறுப்பில் புறங்காட்டைப்பற்றிய வருணனை புலப்படும். இது புறத்திணைத் துறைவகையுள் ஒன்றாகிய 'காடு வாழ்த்து' என்பதைச் சார்ந்ததாகும். இதனை அடுத்து வரும் 'கோயில் பாடியது' என்பதில் தேவியின் திருக்கோயில் வருணனையைக் காணலாம். இதனை அடுத்து வரும் 'தேவியைப் பாடியது' என்பதில் அன்னையின் பெருமை அறையப்பெறும். இவ்வுறுப்பு 'காளி நிலை' என்றும் கழறப்பெறும். 'பேய்களைப் பாடியது' என்னும் பகுதியில் பேய்களின் இயல்பு கூறப்பெறும். இது 'கூளி நிலை' என்றும் வழங்கப்பெறும். இதனைத் தொடர்ந்து வரும் 'பேய் முறைப் பாடு' என்பதில் தேவியிடம் பேய்கள் தம் குறைகளைக் கூறி முறையிடுவதைக் காணலாம். பின்னர் வரும் 'காளிக்குக் கூளி கூறியது' என்னும் பகுதியில் போர் வரலாறும் வெற்றியும் இயம்பப்பெறும். இதனைத் தொடர்ந்து வரும் 'போர் பாடியது', 'களம் பாடியது', 'வாழ்த்து' முதலிய பகுதிகள் வரும். ஒவ்வொரு பரணியிலும் இவ் வுறுப்புக்கள் முறை மாறி அமைக்கப்பெறுதலும் உண்டு.

"கடவுள் வாழ்த்துக் கடைதிறப் புரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டம்
கடிகணம் உரைத்தல் காளிக் கதுசொலல்
அடுபேய்க் கவள்சொலல் அதனால் தலைவன்
வண்புகழ் உரைத்தல் எண்புறத் திணையுற
வீட்டல் அடுகளம் வேட்டல்"[18]

என்ற இலக்கண விளக்க நூற்பாப் பகுதியாலும்,

"தேவர் வாழ்த்தே கடைநிலை பாலை
மேவி அமரும் காளிகோயில்
கன்னியை ஏத்தல் அலகை விநோதம்
கனாநிலை நிமித்தம் பசியே ஓகை
பெருந்தேவி பீடம் அழகுற இருக்க
அமர்நிலை நிமித்தம் அவள்பதம் பழிச்சா
மன்னவன் வாகை மலையும் அளவு
மரபினி துரைத்தல் மறக்களம் காண்டல்
செருமிகு களத்திடை அடுகூழ் வார்த்தல்

18. இலக்கண விளக்கம்-நூற்பா 467

பரவுதல் இன்ன வருவன பிறவும்
தொடர்நிலை யாகச் சொல்லுதல் கடனே." [19]

என்ற பன்னிரு பாட்டியல் நூற்பாவினாலும் அறியலாம்.

**கலிங்கத்துப்பரணி தோன்றிய காரணம் :** இனி, 'கலிங்கத்துப் பரணி' என்ற இந் நூல் தோன்றியதன் காரணத்தைக் குறிப்பிட விரும்புகின்றேன். கலிங்கப்போர் நிகழ்ந்த ஒரு சில நாட்கள் கழித்து அரசவையில் குலோத்துங்கனும அவனுடைய அவைப் புலவராகிய சயங்கொண்டாரும் உரையாடிக் கொண்டிருந்தனர். பேச்சின் இடையில் புவியரசன் கவியரசனை நோக்கி வேடிக்கையாக "கவிஞரேறே, கலிங்க நாட்டைச் சயங் கொண்டமையால், யானும் தங்களைப்போல் சயங்கொண்டான் ஆயினேன்" என்று கூறினான். அதனைச் செவிமடுத்த கவிஞர் கோமான், "அங்ஙனமாயின், சயங்கொண்டானைச் சயங் கொண்டான் பாடுதல் சாலப் பொருத்தமாகும்" என்று மறு மாற்றம் உரைத்து இந்நூலைப் பாடி முடித்தாக ஒரு செவிவழிச் செய்தியால் அறிகின்றோம். இந்நூலின் அரங்கேற்றம நிகழுங்கால் அந்நூலின் சொற்சுவை பொருட்சுவைகளை நன்கு அநுபவித்த மன்னன் ஒவ்வொரு பாடலுக்கும ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டி அவரையும் அவரது நூலையும் சிறப்பித்தான் என்றும அச் செவிவழிச் செய்தியாலேயே அறிகின்றோம். இதில் உண்மை உண்டோ, இல்லையோ கேட்பதற்கு இனிமையாயுள்ளது என் பதை நாம் அனைவரும ஒருமனமாக ஒப்புக்கொள்வோம். இல்லையா ?

பின்னொரு சமயம் கவிஞரும் மன்னனும உரையாடிககொண் டிருந்தனர். அப்பொழுது தன் நூலினைப் பாராட்டி அரசன் அளித்த நிலையாப் பொருட் கொடையினும் தான மன்னனுககு நல்கிய நிலைத்த புகழ்க் கொடையே பல்லாயிரம மடங்கு பெரிது என்று சொன்னதாகவும் ஒரு வரலாறு வழஙகி வருகின்றது

"காவலர் ஈகை கருதுங்கால் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசுஒவ்வா—பூவில்நிலை
யாகாப் பொருளை அபயன்அளித் தான்புகழாம்
ஏகாப் பொருள்அளித்தேம் யாம்." [20]

என்ற தமிழ் நாவலர் சரிதையில் காணப்பெறும வெண்பாவே இதற்குச் சான்றாகும். சோழன் தனக்குச் செய்த சிறப்பு சிறிது

19 பன்னிருபாட்டியல்-நூற்பா 58
20. தமிழ் நாவலர் சரிதை—செய். 118.

குறைந்து தன் மனத்தைப் புண்படுத்தவே அதனைப் பொருராய் முனிவு கொண்டு சயங்கொண்டார் இதனைப் பாடினர் என்று கூறுவர்.

கதைக்குக் கால் இல்லை அல்லவா ? இக் கதையையே நாம் இன்னும் நீட்டி இதற்கு மேலும் சுவையூட்டலாம். மேற்கூறிய வெண்பாவைக் கண்ட அரசமாதேவி அதனைப் படித்து அதன் கருத்தினையும் அதனைப் பாடிய கவிஞரின் உட்கிடக்கையையும் நன்கு அறிந்தாள் அவளோ கற்றுத்துறைபோகிய வித்தகி.'மாதர் முன்னேற்றக் கழகத்தின்' ஆதரவில் மற்ருேர் அரங்கேற்ற விழா விற்கு ஏற்பாடு செய்தாள் புவியரசி. இவ்விழாவில் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டிச் சிறப்பித் தாள். ஆனுல், இவள் உருட்டச் செய்த ஒவ்வொரு தேங்காயிலும் வயிரம், மரகதம், மாணிக்கம் ஆகிய மூன்று கற்கள் மூன்று கண்க ளாகப் பதிக்கப்பெற்றிருந்தன. அரசமாதேவியின் கூர்த்த மதி யினையும் கவிதையின் நுட்பத்தை அறியும் அவள் திறமையையும் வியந்து போற்றினுர் கவிஞர்; அவரது உள்ளம் குளிர்ந்து அரசன்மீது கொண்டிருந்த முனிவும் அகன்றது. இப்படியெல்லாம் வேண்டியவாறு கதையை நீட்டிக் கொண்டே போகலாம்.

நூலமைப்பு : இனி 'கலிங்கத்துப்பரணி'யின் அமைப்பினைக் காட்ட முற்படுகின்றேன் (இந்நூல் 'கடவுள் வாழ்த்து' முதலாகக் 'களம் பாடியது' ஈருகப் பதின்மூன்று பகுதிகளைக் கொண்டது. நூலைத் தொடங்கு முன் பாட்டுடைத் தலைவனை குலோத்துங்கனை நெடிது வாழுமாறு சிவபெருமான், திருமால், நான்முகன், ஞாயிறு, யானை முகன், ஆறுமுகன், நாமகள், உமை, ஏழு அன்னையர் ஆகிய கடவுளர்களை வணங்கி வாழ்த்துக் கூறுகின்ருர் கவிஞர் கோமான். ) எடுத்துக்காட்டாக,

"ஒரு வயிற்றிற் பிறவாது
பிறந்தருளி உலகொடுக்கும்
திருவயிற்றிற்(று) ஒருகுழவி
திருநாமம் பரவுதுமே."

"அந்நெடுமால் உதரம்போல்
அருளபயன் தனிக்கவிகை
இந்நெடுமா நிலமனைத்தும்
பொதிந்தினிது வாழ்கஎன்றே". [21]

[ஒடுக்குதல்-அடைத்தல்; வயிற்றிற்று-வயிற்றையுடையது; நாமம்-பெயர்; உதரம்-வயிறு ; கவிகை-குடை ]

21. தாழிசை 3, 4.

என்பது திருமால் வணக்கத்தைக் கூறும் தாழிசைகளாகும். திருமாலின் உதரம் உலகங்களையெல்லாம் அடக்கியது போல் அபயனின் குடை உலகங்களை அடக்கி வாழட்டும் என்று வாழ்த்துகின்றார். அபயன் உலகம் முழுவதையும் காப்பது ஈண்டுக் குறிப்பிடப்பெற்றுள்ளது.

அடுத்து வரும் இரண்டாவது பகுதி கடை திறப்பு. இஃது இன் சுவை மிக்க பகுதி. இதனை அடுத்து வரும் அடுத்த வாரச் சொற் பொழிவில் தனியாக விளக்க எண்ணியுள்ளேன். சொற்சுவையும், பொருட்சுவையும், கற்பனை நயமும் செறிந்த இப்பகுதியை நன்கு துய்க்க வேண்டும் என்றே இதற்கெனத் தனியாக ஒரு சொற் பொழிவு அமைத்துள்ளேன். கலிங்கப் போர்மேற்சென்ற வீரர்கள் மீண்டுவரக் காலந் தாழ்த்தினராகவும், அது கண்ட அவர் காதல் மகளிர் ஊடல்கொண்டு கதவடைத்தாராகவும் கொண்டு, கவிஞர் தாம் பாடப்போகும் அக்கலிங்கப்போரின் சிறப்பைக் கேட்டுமகிழு மாறும், அதன்பொருட்டுக் கதவினைத் திறக்குமாறும் வேண்டுவ தாக இப்பகுதி அமைக்கப்பெற்றுள்ளது.

மூன்றாவது பகுதி 'காடு பாடியது' என்பதாகும். இதில் காளி தேவி உறையும் இடமாகிய பாலைநிலத்தைச் சார்ந்த காட்டின் இயல்பு விரித்துக் கூறப்பெறுகின்றது. அக்கானில் கதிரவனின் வெப்பத்தைத் தாங்கமாட்டாது பொரிப் பொரியாய்ப் போன காரைச் செடிகளும், சூரைச் செடிகளும், பல்வேறு செடிகளும் மரங்களுமே எம்மருங்கும் காட்சி அளிக்கின்றன. பருந்துக்களும், புறுக்களும் மான்களும் ஆங்காங்குச் சிலஇடங்களில் காணப்பெறு கின்றன. ஒவ்வோரிடங்களில் மரப் பொந்துக்களில் பாம்புகள் தலை நீட்டிக்கொண்டுள்ளன.

" வற்றியபேய் வாயுலர்ந்து
வறன்நாக்கை நீட்டுவபோல்
முற்றியநீள் மரப்பொதும்பின்
முதுப்பாம்பு புறப்படுமே". [21]

[ வறன்நாக்கு-வறண்ட நாக்கு; பொதும்பு-பொந்து ]

என்ற தாழிசையால் தலைநீட்டி நிற்கும் பாம்பின் காட்சி வருணிக் கப்பெற்றிருத்தல் காண்மின். மேலும், அக்காட்டில் கானல் நீர் எங்கும் காட்சி அளிக்கின்றது. நாகங்கள் உமிழ்ந்த மணிகளும் மூங்கில்கள் உதிர்த்த முத்துக்களும் ஆங்காங்குச் சிதைந்து கீழே வீழ்ந்து காணப்பெறுகின்றன.

21. தாழிசை—89.

('கோயில் பாடியது' என்ற பகுதி நான்காவதாகும். இதில் அன்னை உறையும் திருக்கோயிலுக்கு அடிப்படை அமைத்ததும், சுவர் அடுக்கியதும், தூண் நிறுத்தி உத்தரம் சமைத்ததும், கூறையில் துலாம் அமைத்துப் பாப்பரப்பியதும், நாசிகை இயற்றியதும், கூரைவேய்ந்ததும், கோபுரமும் மதிலும் இயற்றியதும், மகர தோரணம் விளைத்ததும், கொடி முதலாகப் பல பொருள்களைச் சுற்றிலும் கட்டி அணி செய்ததும், தேவிக்கு ஊசல் அமைத்ததும், கோயிலின் முன்றிலில் அலகிட்டு நீர்தெளித்துப் பூச்சிந்தி விளக்கேற்றியதுமான செய்திகள் நிரல்படவும் எழிலொழுகவும் கூறப பெற்றுள்ள தன்மை வியத்தற்குரியதாகும் | இதன்பின், தேவியை வழிபடும் வீரர் முழக்கம், அன்னையின் முன்னர் வேள்வி வளர்க்கும் இயல்பு, பலிபீடத்தின் காட்சிகள், உடுக்கையடித்துக் கடாப்பலி இடும் முழக்கம் ஆகியவை மிகக் கவர்ச்சிகரமாகக் காட்டப்பெறுகின்றன.

'' சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து தருதும் என்று
பரவும்ஒலி கடல்ஒலிபோல் பரக்கு மாலோ''.[22]

[தறுகண்-அஞ்சாமை; பரவுதல்-துதித்தல் ; பரக்கும்-பரவும்]

என்ற தாழிசையில் வீரர்களின் வழிபாட்டியல்புபற்றிய காட்சி கூறப்பெற்றருக்கும் முறை அக்காட்சியை நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துவதைக் கண்டு மகிழ்கின்றோம். அதன் பிறகு காளியின் மெய்காப்பாளர்களாகிய சாதகர், பரிவார மகளிராகிய யோகினியர் முதலியோர் காளியை வணங்க வரும் காட்சிகள் காட்டப்பெறுகின்றன. அடுத்து, கோயிலின் அருகிலுள்ள மூங்கில்தோறும் அரிந்த தலைகள் தொங்கவிடப்பெறும் காட்சி கூறப்பெறுகின்றது. இறுதியாக கொள்ளிவாய்ப் பேய், பருந்து, நரி, சுடுகாடு, பிணம், நெருப்பு, செம்பருத்தி, பேய் முதலியன கோயிலைச் சூழ்ந்திருக்கும் இயல்பு இயம்பபபெறுகின்றது.

\'தேவியைப பாடியது' என்ற பகுதி| ஐந்தாவதாக அமைகின்றது ஈண்டு,

''உவைஉவை உளஎன் றெண்ணி
உரைப்பதென் உரைக்க வந்த
அவைஅவை மகிழ்ந்த மோடி
அவயவம் விளம்பல் செய்வாம்''.[23]

[மோடி - காளி.]

22 தாழிசை - 109.

23. தாழிசை-121

என்று தொடங்கிய கவிஞர் காளிதேவியின் உறுப்பு நலன்களைக் கூறுகின்றார். தேவி அணிந்துள்ள சிலம்பு, பொட்டு, அவளது கூத்து, கொங்கை, உடை, வயிறு, மேலாடை, கை, உதடு, முகம், காதணி, மாலை என்பவற்றின் சிறப்பினை விளக்கி அவளது பேருருவச் சிறப்பினைக் காட்டுகின்றார்.

" அண்டமுறு குலகிரிகள்
அவளொருகால் இருகாதில்
கொண்டணியின் குதம்பையுமாம்
கோத்தணியின் மணிவடமாம் ".[24]

[அண்டம்-உலகம; கிரி-மலை, குதம்பை-காதோலை; வடம்-மாலை]

கைமலர்மேல் அம்மனையாம்
" கந்துகமாம் கழங்குமாம்
அம்மலைகள் அவள்வேண்டின்
ஆகாத தொன்றுண்டோ? "[25]

[அம்மனை-ஒரு விளையாட்டுக்கருவி; கந்துகம்-பந்து; கழங்கு-கழற்சிக்காய்]

என்ற தாழிசைகளைப் பன்முறை படித்துப் படித்து அவளுடைய பேருருவத்தை உள்ளத்தில் அமைத்துக் கொள்வோமாக. இப்படி அமைத்துக்கொள்ளுங்கால்,

" யாது மாகி நின்றாய் — காளீ !
எங்கும் நீநிறைந் தாய் ;
தீது நன்மை எல்லாம் — நின்றன்
செயல்கள் அன்றி இல்லை ".[26]

என்ற பாரதியாரின் வாக்கில் அந்த ஆதி சகதியைத் தோத்திரம் செய்யத் தோன்றுகின்றது. இல்லையா ?

ஆறுவதாக அமையும் பகுதி 'பேய்களைப பாடியது' என்பது. இப்பகுதியில் அன்னையைச் சூழ்ந்திருக்கும் பேய்களின் இயல்பு கூறப்பெறுகின்றது. பேய்களின் கை, கால், வாய், வயிறு முழந்தாள், உடம்பு, கன்னம், கண், முதுகு, உந்தி, உடன மயிர், மூக்கு,

24. தாழிசை, 132
25. தாழிசை, 132.
26. பாரதியார் பாடல்கள் 31. (காளி ஸ்தோத்திரம்)

காது, பல், தாலி, தலை, உதடு என்பவற்றின் தன்மை படிப்போர் வியப்புறுமாறு பகரப்பெறுகின்றது. தொடர்ந்து கான் முடப் பேய், கைம்முடப்பேய், குருட்டுப்பேய், ஊமைப்பேய், செவிட்டுப் பேய், குறட்பேய், கூன் முதுகுப் பேய் ஆகிய காளியைச் சூழ்ந் திருக்கும் பேய்களைக் கூறும் முகத்தான் அபயனின் வெற்றி மேம் பாட்டைப் புலப்படுத்துவது பெரிதும் போற்றத்தக்க முறையில் அமைந்துள்ளது.

'இந்திர சாலம்' என்ற பகுதி ஏழாவதாக அமைகின்றது. பேய்கள் சூழக் காளி அணையிட்டு மெத்தை பரப்பிய கட்டிலின் மீது திருவோலக்கத்திலிருக்கும் போது, நெடும் பேய் ஒன்று காளியை வணங்கி அவளது சீற்றத்திற்கு அஞ்சி இமயம் சென்று மறைந்து வாழ்ந்திருந்த முதுபேய் ஒன்றன் வருகையைத் தெரிவித்துக் காளியைக் காண அது செவ்வி பார்த்து நிற்பதைக் கூறுகின்றது. காளியும் இசைவுதர, முது பேய் அன்னையை அணுகி தான் இமயத்தில் உறைந்த போது கற்ற இந்திரசாலங்களைக் காளிமுன் காட்டுகின்றது. இப்பகுதியில் வியப்புச் சுவையும் நகைச் சுவையும் நிறைந்து காணப்பெறு கின்றன. இந்த ஏழு பகுதிகளும் பின்வரும் ஆறு பகுதிகளுடன் இயைபுற்று நிற்கும் தோற்றுவாய்ப் பகுதிகளாக நன்கு அமைந் துள்ளன

எட்டாவதாக அமைந்துள்ள 'இராச பாரம்பரியம்' என்ற பகுதியில் குலோத்துங்கன் பிறந்த 'குடிவழியை' இமயத் தினின்றும் மீண்ட முதுபேயின் வாயில்வைத்துப் பேசுகின்றார் கவிஞர். முதுபேய் இமயத்தில் உறைந்த ஞான்று கரிகாலன் இமயத்தைச் செண்டால் எறிந்து சிரித்து, மீண்டுல் அது நிலை நிற்குமாறு தன் புலிக்கொடியைப் பொறித்தான். அவ்வமயம் அவண் போந்த நாரதர் திருமாலே குலோத்துங்கனாகப் பிறக்கப் போகும் சோழர் குடி சிறப்புடையது என்று கூறினார். அவர் உரைத்த சோழர் குடிவரலாற்றைக் கரிகாலன் இமயத்தில் எழுது வித்தான். அந்த வரலாற்றையே முதுபேய் காளிக்குக் கூறு கின்றது. ஈண்டு இதிகாச பாத்திரமாகிய நாரதரைக் கொண்டு வந்து நிறுத்தி அவர் வாயிலாகத் திருமாலையும முதற்குலோத் துங்கனையும் பொருத்தும் கவிஞரின் கலைத்திறம் மிகவும் போற்றி மகிழத்தக்கது. மேலும், நாரதரையும் கரிகாலனையும் சந்திக்க வைத்து முனிவர் கூறிய வரலாற்றையே மன்னன் இமயத்தில் பொறித்தான் என்று கூறும் கவிஞரின் கலைத்திறமும் கற்பனைத் திறமும் மிகமிகப் பாராட்டிப் போற்றத் தக்கவை.

'பேய் முறைப்பாடு' என்ற பகுதி ஒன்பதாக வருகின்றது. குலோத்துங்கனின் பிறப்பு, வளர்ப்பு, சிறப்பு இவற்றைக் கூறுவதற்கு முன்பதாகப் பரணிப் போர் நிகழ்வதற்கான நிமித்தங்களைக் கூறும் கவிஞரின் நுண்ணிய திறன் நம்மை இறும்பூது அடையச் செய்கின்றது. முதுபேய் கூறியவற்றையெல்லாம் கேட்டு அன்னை மகிழ்ந்திருந்த அதே சமயத்தில் காளியைச்சூழ்ந்திருந்த அலகைகள் தம் பசிக்கொடுமையை அறிவித்து அதனைப் போக்குமாறு அம்மையை வேண்டி நிற்கின்றன. அப்போது அவை தமக்கு ஏற்படும் சில நற்குறிகளையும் இயம்புகின்றன. அவ்வமயம், இமயத்தினின்றும் போந்த முதுபேய் தான் கலிங்க நாட்டின் வழியே வருங்கால் ஆங்குக் கண்ட சில தீநிமித்தங்களைக் கூறுகின்றது. அது கேட்ட காளிதேவி அவர்களுக்கேற்பட்ட குறியையும், கலிங்கத்தில் முதுபேய் சுண்ட தீநிமித்தங்களையும், கணிதப்பேய் கனவிலும் நனவிலும் கண்ட குறிகளையும் இணைத்து மிக்க விரைவில் கலிங்க நாட்டில் ஒரு பெரும் போர் நிகழும் என்றும், அதனால் பேய்களின் பசி முற்றிலும் ஒழியும் என்றும் கூறி உற்சாகப்படுத்தி ஆறுதல் மொழி பகர்கின்றாள். அது கேட்ட பேய்கள் குதித்துக் கூத்தாடி,

> " ஆடியிரைத் தெழுகணங்கள்
> அணங்கேஇக் கலிங்கக்கூழ்
> கூடியிரைத் துண்டுழியெம்
> கூடாரப் போதுமோ ? "[27]

[இரைத்து-இரைந்து; கணம்-பேய் கூட்டம்; அணங்கு-காளிதேவி; கூழ்-உணவு; கூடு-வயிறு; ஆர்தல்-நிறைதல்]

என்று காளியை வினவுகின்றன. அதற்குத் தேவி,

> " ஓதஞ்சூழ் இலங்கைப்போர்க்(கு)
> ஒட்டிரட்டி கலிங்கப்போர் ".[28]

[ஓதம்-கடல்; ஒட்டிரட்டி-ஒன்றுக்கு இருமடங்கு]

என்று உற்சாக மூட்டும் மறுமொழி கூறிப் பேய்களை அமைதியுற்றிருக்குமாறு கூறுகின்றதுடன் இப்பகுதி முடிகின்றது.

பத்தாவது பகுதி 'அவதாரம்' என்பதாகும் இதில் அபயனது பிறப்பு, வளர்ப்பு, இளவரசுப் பட்டம் எய்தியது, முடிசூடியது முதலிய செய்திகள் அழகுற விரித்தோதப் பெறுகின்றன. இவற்றைக் கவிஞர் காளியின் வாய்மொழியாகக் கூறு

27. தாழிசை-230.
28. தாழிசை-231,

கின்றார். (மேலும், இப்பகுதியில் குலோத்துங்கன் அரசோச்சினமை, அவன் அமைதிக் காலத்தில் பொழுது போக்கினமை போன்ற செய்திகளும், பாலாற்றங் கரைக்குப் பரிவேட்டையாடச் சென்று வேட்டை முடிந்ததும் காஞ்சி நகர் அடையும் வரை உள்ள செய்திகளும் இடம் பெறுகின்றன இச்செய்திகளைக் காளி பேய்கட்குக் கூறிக் கொண்டிருக்கையில் ஒரு பேய் ஓடிவந்து கலிங்க நாட்டில் போர் மூண்ட செய்தியைக் கூறுகின்றது. அதனைக் கேட்ட பேய்கள் மகிழ்ச்சியால் குதித்துக் கூத்தாடி இரைகின்றன. அவ்வளவில் காளி பேய்களின் ஆடல் பாடல்களைக் நிறுத்துமாறு பணித்து, போர்ச் செய்தியைக் கூறிய கலிங்கப் பேயை நோக்கி கலிங்கத்தில் நடைபெறும் போரின் இயல்பைக் கூறுமாறு வினவுகின்றாள். இ∴துடன் இப்பகுதி முடிவுறுகின்றது.

'காளிக்குக் கூளி கூறியது' என்று குறிப்பிடப் பெறுவது பதினோராவது பகுதியாகும். இதில் கலிங்கப் பேய் முதலாவதாகப் போர்க் காரணத்தைப் புகல்கின்றது. குலோத்துங்கன் காஞ்சியில் தென் மேற்குத் திசையில் அமைந்த மாளிகையொன்றில், செய்தமைத்த சித்திர மண்டபத்தில், முத்துப் பந்தலின் கீழ்த் தேவியர், அமைச்சர், தானைத் தலைவர் முதலியோர் புடைசூழ வீற்றிருக்கும் பொழுது சிற்றரசர் பலர் வந்து அவனைத் திறையுடன் காண்கின்றனர். கலிங்க நாட்டரசன் அனந்தபன்மன் மட்டிலும் அங்ஙனம் வந்து காணவில்லை. அதைக் கண்ட குலோத்துங்கன் தன் தானைத் தலைவனாகிய கருணாகரத் தொண்டைமான் என்பவனைத் தண்டெடுத்துச் சென்று கலிங்க வேந்தனின் செருக்கை அடக்கிவருமாறு ஏவுகின்றனன். சோழர் படைகள் கலிங்க நாட்டை அடைந்து எரிகொளுவியும், சூறையாடியும் ஊர்களை அழிக்கும் செய்தி அனந்தபன்மனுக்கு எட்டுகின்றது. உடனே அவன் 'வெந்தறுகண் வெகுளியினால் வெய்துயிர்த்துக் கைபுடைத்து வியர்த்து நோக்கி',

" வண்டினுக்கும் திசையானை மதங்கொடுக்கும்
மலர்க்கவிகை அபயற் கன்றித்
தண்டினுக்கும் எளியனோ எனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கே" [29]

[கவிகை-வெண்கொற்றக் கொடை; தண்டு-சேனை; நக்கு-சிரித்து]

29, தாழிசை 376

"கானரணும் மலையரணும் கடலரணும்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரணம் உடைத்தென்று கருதாது
வருவதுமத் தண்டுபோலும்" [30]

எனக் கூறிப்போர் தொடங்குகின்றான். நால்வகைப் படைகளும் ஆர்த்து எழுகின்றன. இவ்வளவில் இப்பகுதி முடிவடைகின்றது

அடுத்து வரும் 'போர் பாடியது' என்ற பன்னிரண்டாவது பகுதியில் அதே கலிங்கப் பேய் போரைக் கூறும் செய்திகள் அழகுற விரித்தோதப்பெறுகின்றன. எங்கும் போர் முழக்கம் மண்டுகின்றது. நால்வகைப் படைகளும் தத்தம் எதிர் நின்று பொருகின்றன செரு முதிர்கின்றது. இரண்டு படைகளும் தாம்தாம் பரந்து பட்டு நின்று பொருத நிலை மாறி, ஒரு முகப்பட்டு நின்று பொரத் தொடங்குகின்றன. பிணமலை பெருகி வருகின்றது. கலிங்க வேந்தன் எதிர் நிற்கலாற்றாது எங்கோ மறைந்து பதுங்கி விடுகின்றான். கலிங்க வீரர்கள் தங்கள் உருக் கரந்து நாற்புறமும் சிதறியோடுகின்றனர். இங்ஙனம் கருணாகரன் கலிங்கத்தை அழித்து பல்வேறு நிதிகளைக் கவர்ந்து வாகை மாலை சூடிக் குலோத்துங்கனின் அடிபணிந்து நிற்கின்றான். இந்த அளவில் இப்பகுதி நிறைவு பெறுகின்றது.

இறுதியாக 'களம்பாடியது' என்ற பகுதி அமைகின்றது. போர் நிகழ்ந்த வரலாற்றைச் செவ்வனே சொல்லி முடித்த கலிங்கப் பேய் 'காலக்களம் அது கண்டருள் இறைவி கடிதென' என அன்னையை அடிபணிந்து வேண்டிநிற்க, காளிதேவியும் பேய்க்கணங்கள் சூழக் களத்திற்கு ஏகிப் போர்க்களக் காட்சிகளை ஒவ்வொன்றாகப் பேய்கட்குக் காட்டுகின்றாள். காட்சிகளைக் கண்டு களித்தபிறகு தேவி நீராடிக் கூழ் அட்டு உண்ணுமாறு அலகைகட்குப் பணிக்கின்றாள். கூழ் அடும் காட்சிகள், அட்ட கூழைப் பேய்கட்குப் பகிர்ந்து வார்க்கும் காட்சிகள் இவற்றைக் கூறும் தாழிசைகள் பன்முறை படித்து அநுபவிக்கத்தக்கன. உண்ட களிப்பால் பேய்கள் குதித்துக் கூத்தாடி வள்ளைப்பாட்டுக்களால் குலோத்துங்கன் புகழ்பாடி வாழ்த்துகின்றன.

"யாவ ரும்களி சிறக்கவே தருமம்
எங்கும் என்றும்உள தாகவே
தேவர் இன்னருள் தழைக்கவே முனிவர்
செய்த வப்பயன் விளைக்கவே". [31]

[களி-மகிழ்ச்சி; அருள்-மக்கள் மாட்டு வைக்கும் அருள்]

30. தாழிசை 377 31. தாழிசை, 595

" வேத நன்னெறி பரக்கவே அபயன்
வென்ற வெங்கலி கரக்கவே
பூத லம்புகழ் பரக்கவே புவி
நிலைக்க வேபுயல் சுரக்கவே". [32]

[பரக்க-எங்கும் பரவுக; கலி-துன்பம்; கரக்க-மறைக; புகழ்-புகழ்ச் செயல்கள்; நிலைக்க-நிலை பெறுக; புயல்-மழை]

என்ற வாழ்த்துடன் இப்பகுதி முற்றுப்பெற்று நூலும் நிறைவு அடைகின்றது.

முடிவுரை: ஒரு சில கூறி பேச்சை முடிக்கின்றேன். அன்பர்களே, கலிங்கத்துப்பரணி தாழிசையால் முதன் முதலாகத் தோன்றிய ஓர் ஒப்பற்ற பரணி நூலாகும். இந்நூல் பரணி நூல்கட் கெல்லாம் தலைசிறந்ததாய்த் திகழ்கின்றது; பரணி பாடுவோர்க் கெல்லாம் முன்மாதிரியாய் விளங்குகின்றது; தமிழ் இலக்கிய வானில் ஒரு கலங்கரை விளக்கம்போல் நின்று நிலவுகின்றது. காவியங்களுக்கெல்லாம் சிறந்ததாய்க் கம்பராமாயணம் திகழ்வது போல, பரணி நூல்களெல்லாவற்றிலும் சிறந்ததாய்க் கலிங்கத்துப் பரணி ஒளிர்கின்றது. கவிச் சக்கரவர்த்தியாகிய ஒட்டக் கூத்தரும் தாம் பாடிய தக்கயாகப் பரணியில் "தென் தமிழ் தெய்வப் பரணி"[33] என்று இந்நூலைச் சிறப்பித்துள்ளமை ஈண்டு எண்ணி மகிழத் தக்கது. நூலைப்பாடியருளிய கவிஞர் கோமானை யும் பிற்காலத்துப் புலவர் பலபட்டடைச் சொக்கநாதர் என்பார் "பரணிக்கோர், சயங்கொண்டான்"[34] என்று பாராட்டிப் போற்றியுள்ளார். எனவே, அணி நலன்களும் சுவைப் பயன் களும், வரலாற்றுக் குறிப்புக்களும், பிறநூல்களில் காண்டற்கரிய கற்பனை நயங்களும், சந்தமேம்பாடும் செறிந்துள்ள இந்த ஒப்பரிய பனுவலைத் தமிழ்மக்கள் பன்முறை படித்துச் சுவைக்க வேண்டிது அவர்கள் கடமை என்று கூறி அமைகின்றேன். வணக்கம்,

32. தாழிசை, 596
33. தக்கயாகப் பரணி-தாழிசை 776,
34. தனிப் பாடல்,

## 2. கடை திறப்பு

இரண்டாம் பொழிவு

*தமிழன்பர்களே! தாய்மார்களே!*

வணக்கம். இன்று கலிங்கத்துப் பரணிபற்றிய இரண்டாம் சொற்பொழிவு நிகழ இருக்கின்றது. சென்ற சொற்பொழிவில் நூலை ஒருவாறு அறிமுகம் செய்து வைத்தேன். சொற்சுவை, பொருட் சுவை, ஓசை நயம் இவை நிறைந்தது இந்நூல் என்பதை அறிந்தோம். இதனால்தான் இது கற்றோராலும் மற்றோராலும் மிகவும் பாராட்டப்பெறுகின்றது என்பதனையும் தெரிந்து கொண்டோம்.

> " முன்னோர் மொழிப்பொருளே
> யன்றி அவர்மொழியும்
> பொன்னேபோற் போற்றுவம் ".[1]

என்னும் தமிழ் இலக்கிய மரபினையொட்டிப் பாடும் இயல்பினை யுடையவர் நம் கவிஞர் பெருமான். இவருடைய பாடல்களில் இவர் காலத்திற்கு முற்பட்ட புலவர்களுடைய கருத்துக்கள் மிளிர் வதை ஆங்காங்குக் காணலாம். இச்சொற்பொழிவிலும், இனி நிகழவிருக்கும் சொற்பொழிவுகளிலும் இத்தகைய இடங்களைக் காட்டிப் போக நினைத்துள்ளேன்.

இன்றைய சொற்பொழிவில் "கடைதிறப்பு" என்ற தலைப்பில் சில கருத்துக்களை உங்கள் முன் வைக்கின்றேன். கதவைத் திறக்கு மாறு வேண்டுதலையுணர்த்தும் செய்யட்களின் பகுதி என்பது இதன் பொருளாகும். "கடை திறப்பு" என்பது பரணிப் பனுவலின் உறுப்புக்களுள் ஒன்று என்பதைச் சென்ற சொற் பொழிவில் குறிப்பிட்டதை ஈண்டு மீண்டும் நினைவு படுத்த விரும்புகின்றேன். "கலிங்கத்துப் பரணி" என்னும் வனப்பு மிக்க

1. நன்னூல் நூற்பா, 9.

மாளிகையின் முன்னர் அமைந்திருக்கும் எழிலெல்லாம் திரண்ட ஓர் அழகிய பூங்காபோல் 'கடை திறப்பு' என்னும் பகுதி அமைந்துள்ளது என்று சொல்லி வைக்கலாம். சென்னை போன்ற பெருநகரங்களில் பெருஞ் செல்வர்கள் வாழும் அரண்மனை போன்ற "பங்களாக்களின்" முன்புறம் இத்தகைய எழிலமைப்பு இருப்பதைக் காணலாம். இதனைப் பார்க்க வாய்ப்பில்லாதவர்கள் திரைப்படங்களில் வரும் காட்சிகளில் தாம் பார்த்தவற்றை நினைவுபடுத்திக் கொள்வார்களாக. காவியத்தின் நுழைவாயில் போல் அமைந்திருக்கும் இப்பகுதியிலுள்ள ஒரு சில காட்சிகளை இப்பொழிவின் இறுதியில் காட்டுவேன். அதற்குமுன்னதாக வேறு சில ஆராய்ச்சிக் குறிப்புக்களை உங்கள் முன் வைக்கின்றேன்.

"கடை திறப்பு" என்ற பகுதி பற்றி இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன அவை :

ஒன்று : விசயதரனது பட்டினத்துள்ள மகளிர் கலிங்கப் போரில் பங்கு பெறச் சென்றிருந்த தங்கள் கணவன்மார் திரும்பி வரக் காலம் தாழ்ந்தமையால் அவர்களுடைய பிரிவால் கவன்றும் ஊடியும் தம் வாயிற் கதவுகளை அடைத்துக்கொண்டு வீட்டினுள்ளே இருக்க, கவிஞர் பெருமானாகிய சயங்கொண்டார், அவர்கள் வீட்டின் முன்புறம் அம்மகளிரின் இயற்கை அழகு செயற்கை அழகு, மென்மைத்தன்மை, முன்னாட்களில் அவர்கள் ஊடியும் கூடியும் துய்த்த இன்பம் முதலியவற்றை எடுத்துக் கூறி அவர்களை அழைத்துக் கதவு திறக்கவும் கலிங்கப் போரின் வெற்றியைக் கேட்கவும் வேண்டுதல் என்பது

மற்றொன்று : செருக்களம் சென்ற தம் கொழுநர் குறித்த காலத்து வாராது தாழ்க்கக் கவலையுற்றும் ஊடியும் கதவுகளைத் தாழிட்டுக் கொண்ட மகளிரைத், தம் மன்னனும் அவனுடைய தானைத் தலைவனும் அடைந்த கலிங்க வெற்றியைப் பாடுவதற்குத் தலை நகரிலுள்ள பல்வேறு மகளிரும் நாட்காலையே எழுந்து வாயிற்கடை நின்று துயிலெழுப்புதல் என்பது.

இந்த இரண்டு கருத்துக்களையும் ஈண்டு உங்கள் முன் ஆராய விரும்புகின்றேன். இந்த இரண்டு கருத்துக்களுள் முன்னது அமைதிவுடையதன்று. முதலாவதாக : போருக்குச் சென்றிருந்த தம் கணவரான வீரர்கள் திரும்பிவரக் காலம் தாழ்த்தினமையால் அவர்தம் மனைவிமார் கதவுகளை அடைத்துக் கொண்டு கவலையுற்றிருந்தனர் என்று கருதுவதற்கு 'கடை திறப்பு' என்ற பகுதியில்

2. தாழிசை-36.

வரும் பாடல்களில் யாதொரு குறிப்பும் காணப்பெறவில்லை; இப் பகுதி அம்மகளிரைப் பற்றியதே என்று கொள்வதற்கும் யாதொரு சான்றும தென்படவில்லை. ஆனால், அதற்கு மாறாகக் கொழுநருட னிருந்து அவரோடு ஊடியும் கூடியும் மகிழ்கின்ற நிலையில் அம் மகளிரைக் கடை திறக்கும்படி வேண்டும் பாடல்களே மிகுதியாகக் காணப்பெறுகின்றன. எடுத்துக்காட்டாக,

" மெய்யே கொழுநர் பிழைநலிய
வேட்கை நலிய விடியளவும்
பொய்யே யுறங்கும் மட நல்லீர் !
புனைபொற் கபாடம் திறமினோ ".[2]

[கொழுநர்-கணவர்; நலிய-மனத்தை வாட்ட; வேட்கை ஈண்டு, கல்வி வேட்கை ]

என்ற பாடலை நோக்குங்கள். கணவருடைய உண்மையான தவற்றினை எடுத்துக்காட்டி அவருடன் புணர்ச்சிக்கு இடந்தராமல் ஊடுகின்றனர் மகளிர் சிலர்; இதனால் கணவன்மார் தாம் செய்த பிழையை எண்ணி மனவாட்டம் அடைகின்றனர். ஆனால், உண்மையாக அவருடன் புணர விரும்புகின்றனர்; புணர்ச்சி வேட்கை அவர்களிடம் மீதூர்ந்து நிற்கின்றது. என் செய்வர்? இதனால் உறக்கமும் அவர்கட்கு வந்திலது ஊடினாராயினும் கலவி வேட்கையால் உறங்காராய்த் திண்டாடுகின்றனர். 'பொய்யே உறங்கும் மடநல்லீர்'' என்று, உறங்குவது போல் பாசாங்கு செய்யும் மகளிர் என்று அவர்கள் விளிக்கப் பெறு வதைக் காண்மின்

இரண்டாவதாக ' வீரர்தம் இல்லக்கிழத்தியரே இப்பகுதியில் கூறப்பெற்றவராகக் கொண்டாலும் சில அசம்பாவிதங்களை உண்மையில் நிகழ்ந்தனவாகக் கொள்ளல் நேரிடும் எடுத்துக் காட்டாக,

நனவினிற் சயதரன் புணரவே பெறினும்
நனவெனத் தெளிவு(று)து அதனையும் பழையஅக்
கனவெனக் கூறுவீர் தோழிமார் நகைமுகம்
கண்டபின் தேறுவீர் கடைதிறந் திடுமினோ. [3]

[நனவு-விழித்திருக்கும் நேரம்; சயதரன்-குலோத்துங்கன்; தெளிவுறுது-தெளிவு அடையாமல்; அதனையும்-புணர்ச்சியையும்; நகை-நனவினைக் கனவெனக் கூறியதைக் கேட்டு எள்ளி ஆடிய நகை; தேறுவீர்-தெளிவீர் ]

3. தாழிசை-35.

என்ற பாடலைப் பார்ப்போம். இதில் நனவையும் கனவென மயங்கி நிற்கும் மகளிர் காட்டப்பெறுகின்றனர் என்பது தெளிவு. ஆதலின், இதில் குறிப்பிடப்பெறும் மகளிர் வீரர்தம் மனைவிமாராகக் கொள்ள இடம் இல்லை. இன்னொரு பாடலையும் காண்போம்.

> " கூடிய இன்கன வதனிலே
> கொடைநர துங்கனொ(டு) அணைவுறு'து)
> ஊடிய நெஞ்சினொ(டு) ஊடுவீர்
> உமது நெடுங்கடை திறமினோ " [4]

[கூடிய-வந்தடைந்த; நரதுங்கன்-குலோத்துங்கன்; அணைவுறுது-தழுவிப்புணராமல்]

இதில் கனவில் கண்ட குலோத்துங்கனைப் புணராது விட்டுத் தம் நெஞ்சுடன் நொந்தனராக மகளிர் சிலர் காட்டப் பெறுகின்றனர். இதில் குறிப்பிடப்பெற்ற மகளிரையும் வீரர்தம் மனைவிமாராகக் கொள்ள இடமே இல்லை. அப்படிக் கொண்டால் அம் மகளிரின் கற்பு நெறி நிலை குலைந்து விட்டதாகக் கொள்ளநேரிடும். இது பெறுந்தவறு என்று நான் சொல்லி நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. ஆகவே, பிரிந்த மகளிர் கணவருடன் துய்த்த ஊடல் முதலிய முற்செயல்களை நினைப்பூட்டிச் சயங்கொண்டார் அவர்களைக் கதவு திறக்கும்படி இதற்குக் கருத்துக் கூறுதலும் பொருத்தம் அன்று; வழக்கும் உடையதன்று பழைய செய்திகளையே நினைப்பூட்டியவராயின் 'ஊடினீர், புணர்ந்தீர், குழைந்தீர்' என்றாற் போல இறந்த காலம் படக் கவிஞர் ஓரிடத்திலேனும் தம் கருத்தைக் குறிப்பிடாமற் போகார் என்பது ஒருதலை; திண்ணம். ஆனால், 'ஊடுவீர்', [5] 'தடவுவீர்', [6] 'புணருவீர்', [7] 'கனவெனக் கூறுவீர்', [8] என்று எதிர் காலத்திலேயே கூறப்பெற்றுள்ளன. எனவே, பழைய செய்திகளை நினைப்பூட்டினர் என்ற கொள்கையை ஏற்றுக் கொள்வதற்கே இடம் இல்லாமற் போகின்றது.

மூன்றாவதாக : மகளிரின் கலவி புலவிகளை ஆடவர்கள் எடுத்துக்கூறி அவர்களை விளித்தல் என்பது நடைமுறையில் நேரிடக்கூடிய செயல் அன்று. ஒருக்கால் கற்பனைக் கதையுள்ள

4. தாழிசை-24.
5. தாழிசை-24.
6. தாழிசை-26.
7. தாழிசை-33.
8. தாழிசை-35.

இலக்கியத்தில் அவ்வாறு கொள்ளல் மரபாக இருப்பினும், வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட இலக்கியத்தில் அவ்வாறு கொள்ளல் சிறிதும் பொருத்தம் அன்று. அதிலும் கவிஞர் கோமான் சயங்கொண்டார் அத்தகைய ஒரு சூழ்நிலையை உண்டாக்க ஒருப்படார்; அங்ஙனம் ஒருப்பட்டார் என்று கருதுவது பெரியதோர் அபவாதமுமாகும்.

**நான்காவதாக :** தக்கயாகப் பரணி, இரணியவதைப் பரணிகளுள் வரும 'கடை திறப்புக்களில்' வானர மகளிர், நீரரமகளிர், மேரு கயிலை போன்ற இடங்களில் வாழும் மகளிர் முதலியோர் கடை திறக்குமாறு விளிக்கப்பெறுகின்றனர். கவிஞரே அவ்வாறே விளிப்பதாகக் கொள்ளின் ஒட்டக்கூத்தரும், இரணிய வதைப் பரணியாசிரியரும் வானம், மேரு, கயிலை முதலான இடங்கட்குச் சென்று அவ்வவ்விடங்களில் உறக்கத்திஞல் பகலில் கதவடைத்திருக்கும் மகளிரைக் கதவு தட்டுபவராகக் கூறுதல் வேண்டும். இஃது எவ்வாற்ருனும் பொருந்தாது என்பது எண்ணிப் பார்ப்பார் அனைவருக்கும் எளிதில் புலனுகும்.

முன்னர்க் குறிப்பிட்ட இரண்டு கருத்துக்களிலும், இரண்டாவது கருத்தே மிகவும் பொருத்தமுடையது; கொள்ளக் கூடியது. தம் அரசனும அவனுடைய தானைத்தலைவனும் அடைந்த கலிங்க வெற்றி விழாக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று வேண்டித் தலைநகரத்திலுள்ள பல்வேறு மகளிரும், நாட்காலையே எழுந்து தம் தோழியரின் வாயிற்கடை முன்னின்று அவர்களைத் துயிலெழுப்புவதாகக் கொள்வதுதான் மிகவும் பொருத்தமுடையதாகும். இத்தகைய பண்டைய மரபு திருப்பாவை, திருவெம்பாவை முதலிய நூல்களில் பயின்று வந்துள்ள மரபுகளை அடியொற்றி வந்துள்ளதாகக் கொள்ளல் வேண்டும். கோகுலத்திலுள்ள ஆய்ச்சியர் மார்கழி நோன்பில் மாயன் பேர் பாடி மகிழவதற்குத் தம் தோழியரின் முன்றுலில் சென்று அழைப்பதை,

> " நாயகப் பெண்பிள்ளாய்
> நாரா யணன்மூர்த்தி
> கேசவனைப் பாடவும்
> கேட்டே கிடத்தியோ ?
> தேசம் உடையாய் திற".[9]

என்றும்,

9. திருப்பாவை 7

" பந்தார் விரலி! நின்
மைத்துனன் பேர்பாட
செந்தா மரைக்கையால்
சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் ".[10]

என்றும் ஆண்டாள் கூறுவதைக் காண்மின். அங்ஙனமே, அதே நோன்பின்பொழுது சிவபெருமானின் புகழ்பாடுமாறு திரு வண்ணாமலையிலுள்ள மகளிர் ஒருவரையொருவர் வேண்டுவதாக

" முத்தன்ன வெண்ணகையாய் !
முன்வந்து எதிர்எழுந்து, என்
அத்தன், ஆனந்தன்
அமுதன்என்(று) அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் ;
வந்துஉன் கடைதிறவாய் ! ".[11]
(அள் ஊறி—வாயில் நீர் ஊறி)

என்றும்,

" கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம் ; கேட்டிலையோ ?
வாழி! ஈதுஎன்ன உறக்கமோ? வாய்திறவாய் ?
ஆழியான் அன்புடைமை ஆம்ஆறும் இவ்வாறோ ?
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேல்ஓர் எம்பாவாய் ". [12]

[கேழ்இல்-ஒப்பற்ற; விழுப் பொருள்-சிறந்த பொருள் ; வாய் திறவாய்-வாய் திறந்து ஒரு சொல் கூறுக; ஆழியான்-சக்கரப் படையையுடைய மாயன்]

என்றும் மணிவாசகப் பெருமான் திருவெம்பாவையில் கூறு வதையும் நோக்குமின். 'முன்னோர் மொழிந்த மொழிப்பொருளைப் பொன்னேபோல் போற்றும்' புலவராதலால் சயங்கொண்டாரும் பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்கொடியையும், வாதவூர்

10. திருப்பாவை, 18
11. திருவெம்பாவை, 3.
12. திருவெம்பாவை, 8.

அண்ணலையும் பின்பற்றிக் குலோத்துங்கனின் வெற்றியைச் சிறப்பித்துப் பாடுவதற்கு நகரத்துப் பல்வேறு மகளிர் ஒருவரையொருவ சென்று அழைப்பதாக அமைத்துள்ளார் என்று கொள்வதே எல்லாவற்றுனும் ஏற்புடைத்தாகும்.

"காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த
கலவி மடவீர்! கழற்சென்னி
காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த
களப்போர் பாடத் திறமினோ".[13]

[காஞ்சி-இடையணி, காஞ்சிபுரம்; கலிங்கம்-(உடுத்த)ஆடை, கலிங்க நாடு; குலைந்த-நிலை பெயர்ந்து கிடந்த, அழிந்த என்று இருபொருளில வந்துள்ளமை காண்க]

என்றும்,

"இலங்கை எறிந்த கருணா கரன்தன்
இகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்கம் எறிந்த கருணா கரன்தன்
களப்போர் பாடத் திறமினோ".[14]

[இலங்கை எறிந்த கருணாகரன்-இராமன்; கலிங்கம் எறிந்தவன்-கருணாகரத் தொண்டைமான்; களப்போர்-கலிங்கக் களப்போர்]

என்றும கடைதிறப்பின் இறுதியில், கலிங்க வெற்றியைப் பாடுவதற்கென்றே இங்ஙனம் மகளிர் அழைக்கபபெறுகின்றனர் என்பதைச் சயங்கொண்டார் குறிப்பிட்டு அப்பகுதியை முடித்திருப்பது இதனை நன்கு வலியுறுத்துகின்றது

மேலும், மார்கழி நோன்பு கொண்டாடும மகளிர் வைகறையில் துயிலெழுந்து ஆற்றுக்குச் சென்று குளிர்ந்த நறுநரில குளித்து விளையாடிப் பின்னரே தங்கள் நோன்பினைத் தொடங்குவர். திருப்பாவையிலும் திருவெம்பாவையிலும் மகளிர் ஒருவரையொருவர் எழுப்புதல் வைகறையில நடைபெறுவதாகவே அறிகின்றோம். இம்மரபுகளைப் பின்பற்றியே சயங் கொண்டாரும எல்லா மங்கலங்களும் தொடங்குதற்குரிய காலையே பரணி விழாவின் தொடக்கத்திற்கும உரியதெனக் கொண்டு தம்முடைய நூலில **'கடை திறப்பு'** என்ற பகுதி நாட்காலையிலேயே நிகழுமாறு அமைத்துள்ளார். இதறகுச் சில அகச் சான்றுகள் காட்டுவேன்.

13. தாழிசை, 63.
14. தாழிசை 64

" மெய்யே கொழுநர் பிழைநலிய
வேட்கை நலிய விடியளவும்
பொய்யே யுறங்கும் மடநல்லீர் !
புனைபொற் கபாடம் திறமினோ ".[15]

[கொழுநர்-கணவர்; வேட்கை-(கலவி)ஆசை; நலிய-மனத்தை வாட்ட]

" போக அமளிக் களிமயக்கில்
புலர்ந்த தறியா தேகொழுநர்
ஆக அமளி மிசைத்துயில்வீர்
அம்பொற் கபாடம் திறமினோ ".[16]

[போகம்-கலவி யின்பம்; அமளி-படுக்கை; புலர்ந்தது-விடிந்தது; ஆகம்-மார்பு]

" வருவார் கொழுநர் எனத்திறந்தும்
வாரார் கொழுநர் எனஅடைத்தும்
திருகும் குடுமி விடியளவும்
தேயும் கபாடம் திறமினோ ".[17]

[திருகும்-சுழலும்; குடுமி-வாயிலின் மேற்புறத்தமைந்த குழிவிடத்தோடு பொருத்தப்பெறும் கதவின் தலைப்பகுதி]

என்ற தாழிசைகளில் வரும் 'விடியளவும்', 'புலர்ந்தறியாதே' என்ற தொடர்களால் மகளிர் ஒருவரையொருவர் எழுப்புதல் வைகறையிலேயே நடைபெறுவது என்பதனை அறியலாம்.

முதற் கருத்தினை ஆராயுங்கால் புலவரே மகளிரை எழுப்பினர் என்று கொள்வதால் நேரிடும் குற்றங்களை எடுத்துக் காட்டினேன். சயங்கொண்டாரின் 'கடை திறப்புப்' பகுதியில் துயிலெழுப்பப் பெறுவதாகக் கூறப்பெறுவோர் பல்வேறு மகளிராவர். உயர்குல மகளிர், (தா. 24, 37), சிறையாகவும் திறையாகவும் பெற்ற மகளிர் (தா 40, 41), வீரர்களின் இல்லக் கிழத்தியர் (தா. 69), ஓதல் முதலியவைபற்றிப் பிரிந்தவர்களின் துணைவியர் (தா. 51). வேற்று நாட்டு மகளிர் (தா. 43), பொது மகளிர் (தா. 27, 30), முதலிய பல்வேறு மகளிர் சுண்டுக் காட்டப்பெற்றுள்ளனர்.

15. தாழிசை, 36.
16. தாழிசை, 37.
17. தாழிசை, 69.

நாடாளும் வேந்தனின் வெற்றி அந்நாட்டில் வாழும் எல்லோ ருடைய வெற்றியன்றோ? தக்கயாகப்பரணி, இரணியவதைப் பரணி ஆகிய நூல்களில் வரும் கடை திறப்புப் பகுதிகளில் வானர மகளிர், நீரர மகளிர், மேரு கயிலைகளில் வாழும் மகளிர் முதலியோர் கடை திறக்குமாறு விளிக்கப்பெற்றிருப்பது கருதத் தக்கது. இந்த இரண்டு நூல்களில் குறிப்பிடப்பெறுவோர் கடவுளர்களாதலின் எல்லா உலகங்களிலுமுள்ள மகளிரும் வெற்றி விழாவில் பங்கு கொள்கின்றனர் என்று ஏற்றபெற்றி அமைத்துக்கொள்வதே பொருத்தமாகும். திருப்பாவைச் செல் வியும் மணிவாசகப் பெருமானும் குறிப்பிடும் பாவை நோன்பில் பங்கு கொள்பவர்கள் மணமாகாத கன்னியரேயாக இருக்க, சயங் கொண்டார் குறிபபிடும் பரணி விழாவில் பங்கு பெறுவோர் எல்லா வயது நிலை மகளிருமாக இருக்கக் காண்கிறோம். இவ் வேறுபாடு உய்த்துணரத்தக்கது. இன்னும், இரவில் நிகழ்ந்த ஊடல் கூடல் முதலிய செயல்களால் அயர்ந்து துயிலெழாது வைகறையில் உறங்கிக் கிடக்கும் மகளிரை அவர்கள் செயல் களைப் பல படியாகவும் அசதியாடித் துயிலுணர்த்தும் உரிமை, 'தாமே, அவரே' என்ற வேற்றுமையின்றிப் பழகும் தோழியர்க் கன்றி அங்ஙனம் பழக வாய்ப்பே இராத ஆடவர்கட்கு எவ் வாற்றானும் இயலாதன்றோ? இங்ஙனம் மகளிரே எழுப்பிய தாகக் கொள்வதால் யாதொரு குற்றமும் ஏற்படாது போகின்றது.

இன்னும் ஒரு குறிப்பினை உங்கள் முன் வைக்கின்றேன். திருப்பாவையிலும் திருவெம்பாவையிலும் உள்ள பாடல்கள் மகளிர் கூற்றென்று வெளிப்படையாகப் புலப்படுவதுபோல் கடை திறப்புப் பகுதியிலுள்ள பாடல்களால் வெளிப்படையாக அறியக் கூடவில்லையே என்று சிலர் ஐயுறுகின்றனர் அங்ஙனம் வெளிப் படக் கூறியிருப்பின் இவ்வித ஆராய்ச்சிக்கு இடமே இல்லை. எனவே, முன்னோரால் தெளிவாக விளக்கப் பெறாத கடை திறப்பின் உட்கருத்தை அப்பகுதியில் கூறப்பெறுவனவற்றோடும் பண்டிருந்து நிலவி வரும் வழக்குகளோடும் கூட்டி ஏற்ப தொன்றினைக் கொள்ளல் வேண்டும் என்பதற்காகவே இவ்வளவும் கூற வேண்டியதாயிற்று.

**வேறு இலக்கியச் சான்றுகள் :** இத்தகைய வெற்றி விழாக்கள் கொண்டாடுவது பண்டையோர் மரபாக இருந்து வந்துள்ளது என்பதை உங்கட்குத் தெரிவிக்க விரும்புகின்றேன். இதனை வலியுறுத்துவதற்குப் பல்வேறு இலக்கியச் சான்றுகளும் உள்ளன பரணி நாளில் கொண்டாடப்பெறும விழாவில் மகளிர் கொற்றவை பொருட்டுக் கூத்தும் பலியும் கொடுத்து வழிபடும் வழக்கம்

உண்டு என்று முன்னர்க் குறிப்பிட்டது உங்கட்கு நினைவு இருக்கலாம் என்று கருதுகின்றேன். இத்தகைய வெற்றி விழாவில் நாடாளும் அரசனைப் பாட்டுடைத் தலைவனாக்கி அவனுடைய வெற்றித் திறங்களைக் கொண்டாடும் வழக்கமும் அக்காலத்தில் இருந்து வந்தது. பரணியைப் பற்றிக் குறிப்பிடும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'வழிபடுவதோர் வழக்குப் பற்றியது' என்றும், 'வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே' என்றும் கூறுவதனால் அத்தகைய வழக்கு மக்களிடம் நிலவி வந்த வழக்கே என்பதனை நாம் அறிதல் வேண்டும். மேலும், 'கூழுந் துணங்கையும் கொடுத்து வழிபடுவதோர் வழக்கு' என்று கூறுவதனை எண்ணிப பார்க்கும் பொழுது அவற்றினைக் கொடுப்போர் மகளிரே யாவர் என்பதனையும் அறிதல் வேண்டும். இஃது எங்ஙனம் என்று நீங்கள் வினவலாம்.

> " மன்னர் குழீஇய விழவி னானும்
> மகளிர் தழீஇய துணங்கை யானும் " [18]

[மன்னர்-வீரர்; குழீஇய-கூடியுள்ள; தழீஇய-தழுவி ஆடுகின்ற]

என்ற ஆதிமந்தியாரின் குறுந்தொகைப் பாடற்பகுதியால் இதனை அறியலாம். திருவிழாக் காலங்களில் வீரர்கள் தத்தம் சேரிகளில் விளையாட்டுப் போர் நிகழ்த்துவதையும், அந்த விழாக் காலத்தில் மகளிர் துணங்கை யாடுதலும், அக்காலத்தில் ஆடவர் அவர்கட்குத் தலைக்கை கொடுத்தலும் பண்டைய மரபாக இருந்து வந்துள்ளது. மதுரைக் காஞ்சியிலும்,

> " இலங்குவளை மடமங்கையர்
> துணங்கையஞ்சீர்த் தழூஉமறப்ப " [19]

[இலங்கு - விளங்குகின்ற; அம்சீர் தழூஉ - அழகினையுடைய தாள அறுதியினையுடைய குரவைக் கூத்து.]

என்று துணங்கையாடுதல் மகளிர்க்கே உரியதாகக கூறப்பெற்றிருத்தல் காணத்தக்கது. இன்னும் சங்க இலக்கியங்களில் இதற்குப் பல சான்றுகளைக் காணலாம்.

இத்தகைய கொற்றவை விழா பண்டையில் நடைபெற்று வந்தது என்பதற்குச் சிலப்பதிகாரத்திலும் சான்று உள்ளது. காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள மறக்குடிப் பெண்டிர் நாளங்காடி

18. குறுந்தொகை-31.
19. மதுரைக் காஞ்சி—வரிகள் 159, 160.

பூதத்திற்குப் பூவும் பொங்கலும் சொரிந்து குரவையாடி அரசனை வாழ்த்து வதை,

" காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து
துணங்கையர் குரவையர் அணங்கெழுந் தாடிப்
பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி " [20]

[நோலை-எள்ளுருண்டை; விழுக்குடை மடை-நிணத்துடன் கூடின சோறு; அணங்கு-தெய்வம்; வசி-மழை]

என்ற 'இந்திர விழாவூரெடுத்த காதை'ப் பகுதியால் அறியலாம். அன்றியும், செங்குட்டுவனது வடநாட்டு வெற்றியை அறிந்த ஆயச் செவிலியர் அதிகாலையில் அரண்மனைக்குச் சென்று துயி லெழுப்பி யுணர்த்திப் பாட்டொடு தொடுத்து வாழ்த்தியதை,

" வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு
எறிந்துகளங் கொண்ட இயறேர்க் கொற்றம்
அறிந்துரை பயின்ற ஆயச் செவிலியர்
தோட்டுணை துறந்த துயரீங் கொழிகெனப்
பாட்டொடு தொடுத்துப் பல்யாண்டு வாழ்த்த " [21]

[வெயிலிளஞ் செல்வன்-பகலவன்; குணதிசை-கிழக்குத் திசை துணையணை தாங்(கு)-துயிலைப்போக்கி; தோள்துணை-கண வனது தோளின் துணை]

என்று இளங்கோவடிகள் 'நீர்ப்படைக் காதை'யில் குறிப்பிடு வதனாலும் அறியலாம். இங்ஙனம், விழாக் காலங்களில் துணங்கை, குரவை முதலிய கூத்துக்களையும், அம்மானை பந்து ஊசல் முதலிய ஆட்டங்களையும், தம் அரசனது போர் வெற்றிகளைப் புனைந்து புகழ்ந்து பாடிக் கொண்டே நிகழ்த்துவது மகளிர் வழக்கு என்ப தைக் குறுந்தொகை, மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் முதலிய

20. சிலப். 5 67—73.
21 சிலப் 27 : 195-212.

முன்னூல்களால் அறிந்து தெளியத்தக்கது என்பதைக் குறிப்பிட விரும்புகின்றேன். அங்ஙனம் பாடுவது வேந்தனது வெற்றித் திறங்களாக இருப்பின், அவற்றுள் களவழி முதலிய புறத் துறைகள் பலவும் பயின்று வருதல் இயல்பேயன்றோ ? அதனால் செருக்களத்தின் இயல்புகளைக் கவிஞர்கள் மகளிர் கூற்றாக அமைத்துக் கூறிச் சிறப்பித்ததனால் எவ்வித குற்றமும் இல்லை என்பது ஈண்டு அறியத்தக்கது. எனவே, முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்றும் புலவர் பெருமான் சயங் கொண்டாரும் செருக்களத்தியல்புகளை மகளிரின் கூற்றில் வைத்துச் சிறப்பித்துள்ளார் என்பது ஈண்டு உளங்கொள்ளத் தகும்.

**சில சுவையான காட்சிகள் :** இனி, கடை திறப்பில் சித்திரிக் கப்பெறும் சில சுவையான காட்சிகளைக் காட்ட விரும்புகின்றேன் உண்மையும் அழகும் நிறைந்த சொற்களால் வாழ்க்கையைப் புலப்படுத்துவதே இலக்கியம் என்பர் திறனாய்வாளர்கள். உயிரின் (ஆன்மாவின்) உண்மை வரலாறாக இருப்பதுவே இலக்கியம் என்பர் மெய்ப்பொருளியலார். கலையழகும், குறிப்பாற்றலும், நிலைபெற்றப் பண்புகளும் இலக்கியத்தின் சிறப்பியல்புக ளாகும். ஓர் இலக்கியம் வெவ்வேறு மனநிலைகட்கு ஏற்ப வெவ்வேறு உணர்ச்சிகளை எழுப்ப வல்லது. அதே இலக்கியம் ஒருவர்க்கு இளமையில் ஒருவகை உணர்ச்சியையும், வளர்ந்த பிறகு அவருக்கே மற்றொரு வகை உணர்ச்சியையும், தொடித் தண்டூன்றி நடக்கும் முதுமைப் பருவத்தில் வேறொரு வகை உணர்ச்சியையும் அளிக்கவல்லது உணர்ச்சி வடிவமான மனம் என்றும் ஒரே நிலையில் இருக்க முடியாததே இதற்குக் காரணம் ஆகும். ஆகவே, இலக்கிய அநுபவம் பலர்க்குப் பல வகை யாகவும், ஒருவர்க்கே பருவத்திற்கேற்பச் சில வகையாகவும் வேறுபடுகின்றது இத்தகைய வேறுபாட்டினை விளைவிக்க வல்ல தனிப் பண்பும் ஓர் இலக்கியத்தின் நெடுங்காலக் கவர்ச்சிக்கு ஒரு காரணமாக அமைகின்றது.

இந்த உலகில், கலை உலகில், பண்பட்ட உணர்ச்சியை யுடைய கலைஞர் மிகச் சிலரே. அந்த ஒரு சிலரின் உணர்ச்சி யநுபவம் நன்கு புலப்படுவதற்குக் கலைகாரணமாக அமைகின்றது அந்த ஒரு சிலரின் அநுபவத்திற்கும் கலை கருவியாக உள்ளது அத்தகைய கலை இல்லையாயின் உயர்ந்த உள்ளத்தின் நிலையைப் பலர் பெற முடியாமல் போயிருக்கும்; சிலருடைய உயர்ந்த அநு பவங்களும பயன் அற்றுக் கழிந்திருக்கும்.[22] இங்ஙனம், மற்ற

22. Richards, I. A., *Principles of Literary Criticism* p. 228.

உயர்ந்த உள்ளங்களின் உணர்ச்சிகளை நாம் உணர்வதற்குக் கலை பயன்படுவது ஒரு புறம் இருக்கட்டும். நம் உள்ளத்திலும் ஆழ்ந்த உணர்ச்சிகள் வெளிப்பட வழியின்றி மிகவும் அடங்கிக் கிடக்கின்றன. அந்த ஆழ்ந்த உணர்ச்சிகள் நம் வாழ்வின் அடிப்படையாக அமைந்திருந்தும் நாம் அவற்றை நன்கு உணராமலேயே கிடக்கின்றோம். புலன்களால் உணரத்தக்க உலகினின்று தப்பித்துக் கொள்வதும், நம்மிடமிருந்து நாம் தப்பித்து கொள்வதுமே வாழ்க்கையாக அமைந்துள்ளன. இந்நிலையினின்று விழிப்புற்று, வாழ்க்கையை நன்கு உணரவும், நம் உள்ளத்து ஆழ்ந்த உணர்ச்சிகளை நன்கு புரிந்து கொள்ளவும் கலைஞரின் உணர்ச்சிப் படைப்பு நமக்குத் துணைநிற்கின்றது. [23]

இக் கருத்துக்களை நினைவிலிருத்திக்கொண்டு சயங் கொண்டார் காட்டும் காட்சிகளைக் காண்போம். காதல்பற்றிய அகச்செய்திகள் 'அகம்' என்று குறிப்பிடப்பெறும் என்பதை நாம் நன்கு அறிவோம். ஒருவனும் ஒருத்தியும் தம்முள்ளே காதல்கொண்டு மணம்புரிந்து இல்வாழ்வு நடத்துகின்ற செய்திகளைப் பலபடியாக வகுத்துக் கூறுவதே அகப் பகுதியாகும். 'காதல்' என்பது கேவலம் விலங்கு உணர்ச்சியன்று காதலுக்கு எல்லையே இல்லை. அஃது ஒரு நெறியில் நின்றாலும் எல்லையற்றுப் பரந்து பெருகித் தோன்றும்.

> " நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
> நீரினும் ஆரள வின்றே ; சாரற்
> கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
> பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே. " [24]

[உயர்ந்தன்று-உயர்ந்தது; ஆரளவு-அருமையளவு, அளத்தற்கரிய ஆழம்; இழைக்கும்-செய்யும்]

என்ற குறுந்தொகைப் பாடல் காதல் பூமியைக் காட்டிலும் பெரிதென்றும், வானைக் காட்டிலும் உயர்ந்தது என்றும், கடலைக் காட்டிலும் ஆழமுடையது என்றும் கூறுவது காண்க. 'கடை

23 "It may make us from time to time a little more aware of the deeper, unnamed feelings which form the substratum of our being, to which we rarely panetrate, for our lives are mostly a constant evasion of ourselves, and an evasion of the visible and sensible world". Eliot, T. S: *The Use of Poetry and the Use of Criticism* p. 155

24. குறுந்தொகை-3.

திறப்பு' என்ற பகுதியிலுள்ள சயங்கொண்டாரின் பாடல்கள் அனைத்துமே அகத்துறைபற்றியவை; காதல் சுவை விஞ்சி நிற்கும் அற்புதச் சொல்லோவியங்கள். இப்பகுதியில் மகளிர் பண்புகளே பன்னிப் பன்னிச் சொல்லப்பெறுகின்றன. கலிங்கப் போரை அடிப்படையாகக் கொண்ட பரணி நூலில் — புறத்துறை பற்றிய நூலில்—அகப்பொருளையும் அழகுற எடுத்துக்காட்டும் கவிஞர் பெருமானின் ஆற்றல் விழுமியது; திட்பமுடையது; ஆழ நோக்கும் தன்மை வாய்ந்தது.

**முதலாவதாக :** உறுப்பு நலன்களைச் சித்திரிக்கும் ஒரு சில காட்சிகளைக் காண்போம். எடுத்த எடுப்பில் சூதாடு கருவியின் அளவாகிய கொங்கைகளையும், உடுக்கையின் அளவாகிய இடுப்பினையும், காதை அளாவும் கண்களையும் உடைய பெண்கள் கடை திறக்குமாறு வேண்டப்படுகின்றனர்[25] அடுத்து,

" புடைபட இளமுலை வளர்தொறும்
பொறையறி வுடையரும் நிலைதளர்ந்(து)
இடைபடு வதுபட அருளுவீர்
இடுகத(வு) உயர்கடை திறமினோ."[26]

[புடைபட-பக்கம் திரண்டு; இடை-இடுப்பு; இடைபடுவது-துவள்வது, துன்புறுவது, பட-பொருந்த; இடுகதவு தாளிடப்பட்ட கதவு; கடை-வாயில்]

என்று மகளிர் காட்டப்பெறுகின்றனர். இளமுலைகளே யோகியரின் நிலையைக் குலைக்குமெனில், முதிர்ந்த முலைகளின் செயலை மொழியவியலாதென்று காட்டுகின்றார் கவிஞர்; யோகியரே நிலை குலைவாரெனின், ஏனைய ஆடவரின் செயலை இயம்ப வேண்டுவதில்லை என்பதை ஊகிக்க வைக்கும் கவிஞரின் திறம் போற்றத்தக்கது. இன்னொரு பாடலில் மகளிரை விளிக்கும்போது கொங்கைகளின் வனப்பு உருவக அணி தோன்றக் காட்டப்பெறுகின்றது. இதோ அப்பாடல் :

" உந்திச் சுழியின் முளைத்தெழுந்த
உரோமப் பசுந்தாள் ஒன்றில் இரண்(டு)
அந்திக் கமலம் கொடுவருவீர்
அம்பொற் கபாடம் திறமினோ."[27]

[உந்திச்சுழி-கொப்பூழ்; உரோமம்-மயிரொழுங்கு; தாள்-தண்டு; அந்திக் கமலம்-மாலையில் காணப்பெறும் தாமரை மொட்டு; கொடு-கொண்டு (இடைக்குறை).

25. தாழிசை—21. 26. தாழிசை—22. 27. தாழிசை—39,

'கொப்பூழாகிய நீர்ச்சுழியில் உரோமப் பசுந்தண்டு முளைத்தெழுந் துள்ளது; அத்தண்டில் மாலையில் காணப்பெறும் தாமரை மொட்டுக்கள் போன்று இரண்டு கொங்கைகள் தாங்கப்பெறு கின்றன' என்று வருணிக்கும் அழகினைக் காண்மின். கொப்பூழை நீர்ச்சுழிக்கும் கொங்கைகளைத் தாமரை அரும்புகட்கும் உவமை கூறுவது வழிவழி வரும் கவி மரபு."நீர்ப்பெயல் சுழியின் நிறைந்த கொப்பூழ்" (பொருநரா. வரி 36) "ஆற்றில், சுழியொன்றி நின்ற தன்ன உந்தியாள்" (கம்பரா. பாலகாண்-உண்டாட்டு-15) என்ப வற்றில் உந்தி நீர்ச்சுழியுடன் உவமிக்கப்பெற்றிருத்தல் காண்க அங்ஙனமே, 'குளனணி தாமரை பாசரும்பு ஏய்க்கும், இளமுலை பாராட்டினும்" (கலி—22) என்றும், "தாமரை, முற்று முகை நீர் எழுதி முலையென்றீர்" (பாண்டிக் கோவை—86) என்றும் வருவதில் தாமரை அரும்பு கொங்கைகட்கு உவமையாக வந்துள்ளமை காணத்தக்கது.

கொங்கைபற்றிய இன்னொரு நயமான காட்சியைக் காட்ட விரும்புகின்றேன். அழகிய நங்கையொருத்தி காலில் அணிந் துள்ள சிலம்புகள் ஒலிக்குமாறு ஒய்யார நடைபோட்டுக் கொண்டு நடந்து வருகின்றாள். அவளுடைய கொங்கைகளின் பாரத்தை அவளது நுண்ணிய 'துடியிடை' தாங்க முடியாது போகும் என்று எண்ணி 'அபயம், அபயம' என்று அபயக் குரல் தந்து ஒலிக் கின்றனவாம அச்சிலம்புகள். இதனைக் கவிஞர்,

" உபய தனம்அசையில் ஒடியும் இடை நடையை
'ஒழியும் ஒழியும்'என ஒண்சிலம்பு
'அபயம் அபயம்'என அலற நடைபயிலும்
அரிவை மீர்கடைகள் திறமினோ." [28]

என்ற பாடல் பன்முறை படித்துச் சுவைக்கத் தக்கது. இயல்பாக எழும் சிலம்பு ஒலிக்குக் கவிஞர் தம் கற்பனைத் திறத்தால் புதுப் பொருள் கற்பித்துச் சிறப்பிக்கும் நயம் எண்ணி மகிழத்தக்கது இப்பாடல தாயுமான அடிகளின் கருத்தையும் கவர்ந்துவிட்டது இதனை அடியொற்றி அப்படியே,

" மின்போலும் இடைஒடியும்
ஒடியுமென மொழிதல்போல்
மென்சிலம்பு ஒலிகள்ஆர்ப்ப
வீங்கிப் புடைத்துவிழு

28. தாழிசை,—58.

சுமையன்ன கொங்கைமட
மின்னூர்கள்." [29]

என்று தம் பாசுரத்தில் அடிகளார் ஆண்டிருப்பது கண்டு களிகொள்ளத் தக்கது.

அடுத்து, மாதர்களின் கண்விழியின் இயல்பினைக் கூறி அவர்கள் விளிக்கப்பெறும் பாடல்களில் வரும் காட்சிகளைக் காண்போம்.

" கடலில் விடமென அமுதென மதனவேள்
கருதி வழிபடு படையொடு கருதுவார்
உடலின் உயிரையும் உணர்வையும் நடுவுபோய்
உருவு மதர்விழி யுடையவர் திறமினோ." [30]

[கடல்-பால் கடல் ; மதனவேள் - மன்மதன் ; வழிபடு மதன வேள் என இயைக்க. படை - மலர்க்கணை ; மதர் - செருக்கு]

என்பது பாடல். மன்மதனின் கணைகள் ஆடவர் உயிரையும் உணர்வையும் பிளத்தல்போல், அம்மாதர் கண்களும் அவர்தம் கணவர் உயிரையும் உணர்வையும ஊடுருவிச் செல்லும் என்று கூறுகின்றார் கவிஞர். அம்மெல்லியலாரின் கண்கள், அவர்களுடைய கேள்வர் அவர்களைத் தணக்குங்கால் அவர்கட்கு விடம் போல் துன்பத்தையும், மணக்குங்கால் அமுதம்போல் பேரின்பத்தையும் பயத்தலால் ' விடமென அமுதென ' என்று கூறிய நயம் உணர்ந்து மகிழத் தக்கது.

" நீங்கில் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்." [31]

[தெரூஉம் - சுடும் ; குறுகுதல் - அணுகுதல் ; தீ - நெருப்பு]

என்னும் திருக்குறளின் கருத்து ஓராற்றான் இதில் வந்துள்ளமை கண்டு இன்புறத் தக்கது காதலிமார் அன்பு கனிந்து மொழியும் இனிய சொற்கள் காமவேட்கையை மிகுவித்து இன்பம் பயத்தலால் ஆடவர் அம்மகளிர் மொழியை அமுதம என்று கூறிப் புகழ்வர். அத்தகைய அன்புக் கணவன்மார் பரத்தையர் பால் விழைந்து செல்லாமல் காக்கும் தன்மையை யுடைய விழிகளைப் பெற்றுள்ளனர் அம் மகளிர்.

29. தாயுமானவர் பாடல் : தேசோமயானந்தம், 10.
30. தாழிசை—48.
31 குறள்—1104,

" பண்படு கிளவியை அமுதெனப்
பரவிய கொழுநனை நெறிசெயக்
கண்கொடு கொலைசெய அருளுவீர்
கனகநெ டுங்கடை திறமினோ." [32]

[பண் - இசை ; கிளவி - சொல் ; பரவிய - புகழ்ந்த ; கொழுநன் - கணவன் ; கொடு - கொண்டு ; நெறிசெய-வழிப்படுத்த]

என்ற பாடலில் தம் மொழியினைப் புகழ்ந்த கணவரை மகளிர் தம் கட்பார்வையால் வாட்டினர் என்ற செய்தி வந்துள்ளமை காண்க. மாதர்கள் தம் கண்கள் தம் கணவன்மார்களிடம் இழைத்த புண்கட்குச் சிகிச்சை செய்யும் காட்சிகள் காட்டப் பெறுகின்றன. புண்கள் ஆறுவதற்கு வாய்வழியாகவும் மருந்தூட்டுகின்றனர் : புண்ணிற்கும் வேது கொண்டு ஒற்றித் தம் கைகளாலும் கட்டுகின்றனர் (இறுகத் தழுவுகின்றனர்).

" தங்குகண் வேல்செய்த புண்களைத்
தடமுலை வேதுகொண்(டு) ஒற்றியும்
செங்கனி வாய்மருந்து ஊட்டுவீர்
செம்பொன் நெடுங்கடை திறமினோ." [33]

[கண் வேல்-கண்ணாகிய வேல் ; வேது-சூடான ஒற்றடம் தருதல ; வாய்மருந்து - அதர பானம்.]

" பொருங்கண் வேல்இளைஞர் மார்பின் ஊடுருவு
புண்கள் தீரஇரு கொங்கையின்
கருங்கண் வேதுபட ஒற்றி மென்கைகொடு
கட்டு மாதர்கடை திறமினோ" [34]

[புண்கள்-மனத்தே புகுந்த காமத் தீ ; கண்-முலைக்கண் ; கட்டும்-இறுகத்தழுவும்]

என்ற பாடல்களில் இக்காட்சிகள் வந்துள்ளமை காண்க. " பனி மொழி, வால்எயிறு ஊறிய நீர் " (குறள்-1121) என்ற வள்ளுவர் வாக்கையும், " ஊறு நீர்அமுது ஏய்க்கும் எயிற்றாய் " (கலி-20), என்ற பாலைபாடிய பெருங்கடுங்கோவின் வாக்கையும், " முள்ளெயிற்று அமிழ்தம் ஊறும் செவ்வாய் " (குறுந், 286) என்ற குறுந்தொகைப் புலவரின் வாக்கையும் நினைந்தே நம் புலவர் பெருமானும் ' வாய் மருந்து ' என்று குறிப்பிட்டுள்ளார்.

---

32. தாழிசை—71.
33. தாழிசை—55.
34. தாழிசை—56.

" தன்னோய்க்குத் தானே மருந்து" (குறள் 1112) என்ற வாறு, அம்மடந்தையர் தம் கணவர்க்குத் தாம் தந்த காம நோயைத் தாமே போக்கினர் என்பதை இந்த இரு பாடல் களாலும் பெறவைத்தார் நம் கவிஞர் பெருமான்.

கவிஞர் பெருமான் மாதர்களின் கண்பிறழ்ச்சியைக் காட்டும் காட்சி சிலேடை நயந்தோன்ற நின்று கற்போர்க்குக் களிபேரு வகை பயந்து நிற்கின்றது.

" பூவிரி மதுகரம் நுகரவும்
பொருகயல் இருகரை புரளவும்
காவிரி எனவரும் மடநலீர்
கனகநெ டுங்கடை திறமினோ." [35]

[மாதர் மேல். கரம்-கை; விரிபூமது-மலர்ந்த மலரிலுள்ள கள்; பொருகயல்-போரிடும் கெண்டை மீன் போன்ற கண்கள்; இரு கரை-இரண்டு கண் இதழ்கள் காவிரிமேல். விரிபூ-மலர்ந்த மலரிலுள்ள தேன்; மதுகரம் வண்டுகள்; பொருகயல்-போரிடும் கெண்டை மீன்கள்; இருகரை-இரண்டு கரைகள்]

என்பது பாடல். மலர்ந்த மலரிலுள்ள கள்ளைத் தங்கள் கைகளால் பருகவும், போர்புரியும் கெண்டை மீன்கள் போன்ற கண்கள் இரண்டு கண்ணிதழ்களினிடையில் புரளவும் மாதர்கள் வரு கின்றார்கள் எனவும், மலர்ந்த மலரிலுள்ள தேனை வண்டுகள் நுகரவும், போர்புரியும் கெண்டைமீன்கள் இரண்டு கரைகளில் புரளவும் காவிரிநதி வருகின்றது எனவும் இரு பொருள் காண்பதற்கேற்றுவாறு இப்பாடலில் சிலேடை நயம் அமைந் திருப்பதைக் கண்டு மகிழ்க.

" செழுநீர்த் தடத்துக் கயல்மிளிர்ந்தால்
ஒப்பச் சேயரிக்கண்
அழுநீர் துளும்ப அலமரு
கின்றன வாழியாரோ." [36]

[செழுநீர்-மிக்க நீர்; தடம்-குளம்; கயல்-மீன்; சே அரிகண்-சிவந்த இரேகைகளையுடைய கண்கள்; அழு நீர்-புலம்பும் நீர்; துளும்ப-ததும்ப; அலமருகின்றன-தடுமாறுகின்றன]

என்ற நம்மாழ்வாரின் 'திருவிருத்தப்' பாசுரக் கருத்தையொட்டி இத்தாழிசை அமைந்திருப்பதாகக் கருதலாம். பராங்குச

35. தாழிசை—59.
36. திருவிருத்தம்—2.

நாயகிக்கு நாயகனைப் பிரிந்த வருத்தத்தினால் கண்கள் நீர்ததும்பி நிற்கும் நிலையைக் காட்டுகின்றது இப் பாசுரப் பகுதி. பெரிய கடல் போல் இருக்கும் ஒரு தடாகத்தில் அதன் பரப்பெல்லாம விம்மும்படி மிளிர்ந்ததொரு கயல் மீனானது அத் தடாகம் முழுவதும் குழம்பும்படி இடம் வலம் கொள்ளுமாப்போலே இவள் கண் காணப்பெறுகின்றது என்பது இதன் பொருள். இக்கருத்தை யொட்டியே தாழிசையின் கருத்தும் அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்க.

இனி, மகளிரின் கூந்தலின் இயல்புபற்றிக் கூறி அவர்கள் விளிக்கப்பெறும் பாடல்களில் வரும் காட்சிகளைக் காண்போம்.

> " இடையின் நிலைஅறி(து) 'இறும்இறும்' எனஎழா
> எமது புகலிடம் இனிஇலை எனவிழா
> அடைய மதுகரம் எழுவது விழுவதாம்
> அளக வனிதையர் அணிகடை திறமினோ." [37]

[இடை-இடுப்பு ; நிலை-நிலைபெறுதல் ; இறும்-ஒடியும் ; எழா-எழுந்தும் ; புகலிடம்-அடைக்கலம ; இலை-வேறு இல்லை ; விழா-விழுந்தும்; அடைய-முழுவதும; அளகம்-கூந்தல் ; வனிதையர்-மகளிர் ]

என்பது ஒரு பாடல். மகளிர் தங்கள் கூந்தலில் முடித்த மலரிலுள்ள மதுவினைப பருக வந்த வண்டுகள் கூந்தல் கொங்கைகளின் சுமையால் அவர்தம் சிற்றிடை வருந்தா நிற்கும் நிலை கண்டு, அவர்கள் கூந்தலில் உட்கார்ந்தால் அவர்தம் மெல்லிய நுசுப்பு முறிந்து போகும் என்று கருதி அவை மேலே எழுவதும், அவைகட்கு வேறு புகலிடம் இன்மையால் அவைகள் மீண்டும் அக் கூந்தலிலேயே விழுவதுமாக இருந்தனவாம்.

> " நூலொத்த நேரிடை நொய்ம்மைஎண்
> ணாதுநுன் தேன்நசையால்
> சாலத் தகாதுகண் டீர்வண்டு
> காள்கொண்டை சார்வதுவே." [38]

[நொய்ம்மை-மென்மை ; நசை-விருப்பம் ; சால மிகவும்]

என்ற மணிவாசகப் பெருமானின் கருத்து இங்குப் பெரிதும் ஒத்திருத்தல் கண்டு இன்புறத் தக்கது ; முன்னோர் மொழிந்த மொழிப் பொருளைப் பொன்னேபோல் போற்றும் பெற்றி பெரிதும்

37. தாழிசை—57.
38. திருக்கோவையார்—45,

போற்றத்தக்கது. அன்றியும், மகளிரின் கூந்தலின்மீது வண்டுகள் மொய்த்துக் கொண்டிருந்தமைக்குக் கவிஞர் கூறும் இன்னொரு கருத்தும் சுவை ததும்பி நிற்பதாகும். தண்மதி புறப்பட்டுத் தன் கதிர்களாகிய வெப்பத்தைக் கலவைச் சந்தனச் சேற்றைப் பூசியுள்ள குடம் போன்ற கொங்கைகளின்மீது சொரியும் என்று கருதி வண்டுகள் பந்தலையமைக்கின்றனவாம்[39]. காம நோயால் வருந்துவோர்க்குத் தண்மதி வெம்மையை விளைவிக்கும் என் பதை நாம் அறிவோம்.

மென்னடை பயிலும் மகளிர் நிலைக்கண்ணாடியின்முன் நின்று தம் அழகிய கூந்தலைப் பின்னி முடிக்கும் காட்சி மைந்தர் களின் மனத்தைக் கவர்ந்து நிற்கும் என்பதை இரண்டு பாடல்க ளால் வெளியிடுகின்றார் கவிஞர்.

" முருகிற் சிவந்த கழுநீரும்
முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் செருகும் குழல்மடவீர்
செம்பொற் கபாடம் திறமினோ."[40]

[முருகு-மணம்; கழுநீர்-செங்கழுநீர்ப்பூ; திருகி-முறுக்கிப் பறித்து; குழல்-கூந்தல்; பொன்-அழகு]

" செக்கஞ் சிவந்த கழுநீரும்
செகத்தில் இளைஞர் ஆருயிரும்
ஒக்கச் செருகும் குழல்மடவீர்!
உம்பொற் கபாடம் திறமினோ."[41]

[செகம்-உலகர்]

காமுகராகிய இளைஞர் மாதர்களின்முகம், மார்பு, கூந்தல் முதலிய உறுப்புக்களைக் கண்டு மனமுருகி நிற்பர் என்ற இயல்பினை நன்கு அறிந்த கவிஞர் பெருமான் 'அவருயிரைத் திருகிச் செருகும் குழல்' என்று இந்த இரண்டு பாடல்களிலும் விதந்து ஓதினார் என்று கருதலாம்.

இரண்டாவதாக: மகளிர் புன்முறுவலின் இயல்பு கூறி விளிக்கப்பெறும் பாடல்களில் வரும் காட்சிகளைக் காட்ட நினைக் கின்றேன்.

39. தாழிசை—60.
40. தாழிசை—50.
41. தாழிசை—74.

" வேகம் விளைய வருங்கொழுநர்
மேனி சிவந்த படிநோக்கிப்
போகம் விளைய நகைசெய்வீர்
புனைபொற் கபாடம் திறமினோ."[42]

[கொழுநர்-கணவர்; மேனி-உடல்; சிவந்தது புணர்ச்சி விழைவால். போகம்-கலவி; விளைய-அதன் பயனாய் உண்டாக; நகை-சிரிப்பு; இதுபோகத்தை விளைத்தது]

என்பது ஒரு பாடல். மகளிர் தம்கேள்வர் தம்பால் விரைந்து வருதலைக் கண்டு அவர்களைப் பரிகசித்துப் புரிந்த புன்முறுவல் அவ்வாடவரின் வருத்தத்தைப் போக்கி அவர்கட்குக் களிப்பூட்டு தலால் 'போகம் விளைய நகை செய்வீர்' என்கின்றார் கவிஞர். மகளிர்பால் மைந்தர் விரைந்து வருதலைச் சங்கப் பாடல்களில் பரக்கக் காணலாம். எடுத்துக்காட்டாக "கடியக் கடவுதி பாக, நெடிய நீடின நேரிழை மறந்தே" (ஐங்கு-484) என்ற ஐங்குறு நூற்றுப் பாடலால் இதனை அறியலாம்.

" முறுவல் மாலையொடு தரள மாலைமுக
மலரின் மீதுமுலை முகிழினும்
சிறுநி லாவும்அதின் மிகுநி லாவும்என
வருந லீர்கடைகள் திறமினோ."[43]

[முறுவல் மாலை-பல் வரிசை; தரளம்-முத்து; முகிழ்-கோங் கரும்பு, மொட்டு; சிறுநிலா-மூன்றாம் பிறை; மிகு நிலா-நிறை நிலா; என-என்று தோன்றுமாறு; நலீர்-நல்லீர், பெண்களே]

என்ற பாடலில் வரும் காட்சியையும் கண்டு மகிழலாம் முகத் தில் தோன்றும் புன்னகை இளமதியின் ஒளியையும், அவர் களின் கொங்கைகளிலணிந்த முத்துமாலை முழுமதியின் ஒளி யையும் ஒத்து விளங்குமாறு அன்னநடை என மென்னடை பயின்று வருகின்றனர் மகளிர். அவர்களைக் கதவு திறக்குமாறு வேண்டுகின்றனர் வேறு சில மகளிர்.

**மூன்றாவதாக :** புணர்ச்சி இயல்பு கூறி விளிக்கப்பெறும் பாடல்களில் பல்வேறு சொல்லோவியங்கள் வருகின்றன. எல்லா ஓவியங்களும் இன்பம் பயப்பன வாயினும் அனைத்தையும் ஈண்டுக் காட்ட நேரம் இல்லை. ஆகவே, ஒரு சிலவற்றை மட்டிலுமே

---

42. தாழிசை—45.
43. தாழிசை—49

காட்டுவேன். புணர்ச்சிக் காலத்தில் ஆடை முதலியன நிலை குலைந்திருக்கும் நிலையை,

" அளக பாரமிசை அசைய மேகலைகள்
அவிழ ஆபரணம் இவையெலாம்
இளக மாமுலைகள் இணைய ருமல்வரும்
இயல்ந லீர்கடைகள் திறமினோ".[44]

[அளகம்-கூந்தல்; மேகலை-இடை அணி; இளக-நெகிழ; மா-பெரிய; இணை அருமல்-ஒன்றோடொன்று உயர்வு தாழ்வு இன்றி; வரும்-வளரும்]

என்று குறிப்பிடுவர். கலவிக் காலத்தில் கூந்தல் தலைமேல் அசைதலையும், இடுப்பிலணிந்துள்ள மேகலாபரணம் அவிழ்தலையும், ஏனைய அணிகள் யாவும் நிலைகுலைதலையும், பெரிய தனங்கள் மேலும் விம்மிப் பருத்தலையும் காட்டுகின்றார் கவிஞர். விழி சிவப்ப, இதழ் வெளுக்கக் கலவிபுரிந்த மகளிர் சிலர் தம் கேள்வர்களின் அதரபானம் மதுபானமாக மாறிமையாலும் காம மிகுதியாலும் மொழி பதறி அறிவிழந்த நிலையிலுள்ளமையையும் காட்டுகின்றார்.[45]

கலவிக் காலத்தில் உள்ளம் பரவசமடைந்து நெகிழ்தலையும், உறக்கம் நீங்கிப் போதலையும், பவள வாயில் செந்நிறம் அறுதலையும், கடைக்கண்கள் செந்நிறம் உறுதலையும், அடக்கம் காவல் நீங்குதலையும், களிப்பினால் புன்னகை அரும்புதலையும் காட்டுகின்றார் ஒரு பாடலில்.[46] காமவேட்கை உற்ற மகளிர் அச்சம், நாண் முதலியவற்றை இழப்பராதலின் வள்ளுவரும்,

" காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு."[47]

[கணிச்சி-குந்தாலி]

என்று குறிப்பிட்டுள்ளார். இந்த மொழியையே பொன்னேபோல் போற்றி 'நிறைக் கவசம் அற்று' (தா-33) என்று விதந்தோதினார் சயங்கொண்டார்.

44. தாழிசை—53.
45. தாழிசை—54.
46. தாழிசை—33.
47. குறள்—1251.

" வாயின் சிவப்பை விழிவாங்கத்
மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத்
தோயக் கலவி அமுதளிப்பீர்
துங்கக் கபாடம் திறமினோ."[48]

[வாங்க-பற்றிக்கொள்ள; தோயம்-கடல்; துங்கம-மேன்மை]

என்ற பாடலில் விழிசிவக்க இதழ் வெளுக்கக் கலவி புரிந்தமை தெளிவாகக் காட்டப்பெறுகின்றது.

பட்டப் பகலென நிலவு பொழியும் இரவில் மேன்மாடத்தில் மங்கையொருத்தி கலவி இன்பத்தில் திளைத்த பிறகு உறங்கி விடுகிருள். அவள் அணிந்திருந்த ஆடை நெகிழ்ந்து போய் விடுகின்றது. அரைத் தூக்கத்தில் நிலவொளியை ஆடையென நினைத்துக் கொண்டு அதனைப்பற்றி இழுத்து உடுத்திக் கொள்ள முனைகின்ருள் அந்நங்கை. இதனைக் கவிஞர்,

" கலவிக் களியின் மயக்கத்தால்
கலைபோய் அகலக் கலைமதியின்
நிலவைத் துகிலென்று எடுத்துடுப்பீர்
நீள்பொற் கபாடம் திறமினோ."[49]

[கலவி-புணர்ச்சி; களி-பெருமகிழ்ச்சி; கலை-ஆடை; மதி-நிலா; நிலவு-நிலாவொளி; துகில்-ஆடை]

என்று காட்டுகின்ருர் மகளிரில சிலர் புணர்ச்சியின்பத்தால் மயங்கிப் பொழுது புலர்ந்ததையும் அறியாமல் தம் கொழுநரின் மார்பினையே படுக்கையாகக்கொண்டு உறங்கும் காட்சியும் காட்டப்பெறுகின்றது.[50]

கலவிப் போரில் ஒருத்தியின கொங்கையில் எப்படியோ நகக் குறி ஏற்பட்டு விடுகின்றது. அந்தக் குறியை அடிக்கடி நோக்கும் பொழுதெல்லாம் கலவியில் தான் பெற்ற இன்பத்தை அடைகின்ருள் அப் பெண்மணி. நித்திய தரித்திரன் ஒருவனுக்கு எதிர் பாராதவண்ணம் நிறைந்த பொற்குவியல் கிடைப்பின் அவன் அச் சத்தின் மிகுதியால் அப்பொருட்குவியலைப் பிறர் அறியாவண்ணம் பார்த்துப் பார்த்துப் பெருமகிழ்ச்சியுறுதல் போல, தன் கொங்கையில் புதியனவாய்த் தோன்றியுள்ள தம்கொழுநரின் நகத்தால்

48. தாழிசை—61.
49. தாழிசை—34
50. தாழிசை—37.

ஏற்பட்ட குறிகளை தாணம் மிகுதியால் நனியிடத்திற்குச் சென்று அவற்றைப் பார்த்துப் பார்த்து மகிழ்கின்றாள் அந்நங்கை.

"முலைமீது கொழுநர்கைந் நகமேவு குறியை
முன்செல்வ மில்லாத அவர்பெற்ற பொருள்போல்
கலைநீவி யாரேனும் இல்லாவி டத்தே
கண்ணுற்று நெஞ்சங்க ளிப்பீர்கள் திறமின்."[51]

[கொழுநர் - கணவர் ; கலை - மேலாடை ; நீவி - விலக்கி]

என்று இக்காட்சியைக் காட்டுவர் கவிஞர்பெருமான்.

இன்னொரு காட்சி. இரவில் மங்கையரும் அவர்களுடைய கணவன்மாரும் கலவிப்போர் நிகழ்த்துங்கால் காமம் மீதூர மனங் கனிந்து முறைபிறழ்ந்து தகுதியற்ற காதற்சொற்களைப் பேசிக் கொண்டிருந்தனர், அவற்றைச் செவிமடுத்த கிளிகள் 'சொன்னதைச் சொல்லுமாம் கிளி' என்ற தம் குணத்திற்கேற்பப் பகலில் அவற்றைச் சொல்லத் தொடங்கின. அவற்றைக் கேட்ட அப் பேதையர் பெரிதும் நாணி, அக்கிளிகளை மேலும் பேசவிடாமல் அவைகளின் வாயைப் புதைத்தனர்.

"நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கும் மடநல்லீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ."[52]

[நேயல் - அன்பு ; கலவி - புணர்ச்சி ; மொழி - சொல்]

என்பது கவிஞர் காட்டும் சொல்லோவியம். பிற்காலத்தில் இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதியவர்களும் சதாவதானம் சரவணப் பெருமாள் கவிராயரும் வினாவிடையாக அமைத்துப் பாடிய,

"தத்தை யொருத்திகைத் தத்தையையோ யாதடித்த
வித்தையென்ன தென்முகவை வேல்வேந்தே—
மெத்தையின்மேல்
புல்லினஎன் மன்னன் புகன்மொழிகற் றுச்சகிபால்
சொல்லினையே என்று துடித்து."[53]

[முகவை - சேதுபதிகளின் நாடு ; சகி-தோழி]

51. தாழிசை—47
52. தாழிசை—67.
53. இப்பாடல் 'தனிச்செய்யுள் சிந்தாமணி' யில் உள்ளது.

என்ற வெண்பாவில் மேற்கூறிய பாடலின் பொருள் அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்க. இத்தகைய பல பாடல்கள் கடை திறப்புப் பகுதியில் உள்ளன. அவற்றை நீங்களே படித்துச் சுவைக்குமாறு வேண்டுகின்றேன்.

**நான்காவதாக :** மகளிரின் ஊடல் இயல்புபற்றிய பல காட்சிகள் இப்பகுதியில் வருகின்றன. இவற்றுள் சுவை மிக்க காட்சி யொன்றினைக் காண்போம்.

> "விடுமின் எங்கள்துகில் விடுமின் என்றுமுனி
> வெகுளி மென்குதலை துகிலினைப்
> பிடிமின் என்றபொருள் விளைய நின்றருள்செய்
> பெடைந லீர்கடைகள் திறமினோ."[53]

[துகில் - ஆடை ; முனிவெகுளி - ஊடலால் வந்த சினம் ; குதலை - பொருள் தோன்றாச் சொல் ; விளைய - உண்டாக ; நின்று - அகலாமல் நின்று ; பெடை - பெண் அன்னம ; நலீர் ; நல்ல குணமுடையவர்களே ]

என்பது ஒரு சொல்லோவியம். இஃது ஒரு பள்ளியறைக் காட்சியாகும் ஆடவர் ஊடல்கொண்ட தம் காதல் மடவார் துகிலினைக் காமவேட்கையால் பற்றி ஈர்க்கின்றனர் அச்செயல் அம்மகளிர்க்கு ஒரு புறம் இன்பமும் மற்றொரு புறம் நாணமும் விளைவிக்கின்றது. ஆகவே அவர்கள், 'எங்கள் துகில் பிடிமின்' என்ற பொருள் தோன்ற அவற்றை 'விடுமின் எங்கள் துகில் விடுமின்' என்று கூறித் தாமும் விடாது பற்றி ஈர்ப்பதுபோல் 'பாசாங்கு' செய்கின்றனர் இதுவே காட்சி. கணவர்மாட்டு அன்புறு காமத்தால் நலிவும் எய்திய மகளிர்பால் தோன்றிய மொழியாதலின் 'மென்குதலை' என்று கூறினர் கவிஞர். இன்னொரு பாடலில் ஊடலின் இயல்பு கூறப்பெறுகின்றது. மகளிர் ஊடுங்கால் கொங்கைகளின் இளந் தன்மை அழியும்; அதாவது பசலை நிறம் அடையும். செவ்வரி படர்ந்த கண்களினின்று நீர் பெருகி நிற்கும[54] இம்மகளிர் தம் கணவரைத் தணந்தால் கொங்கை, முகம் முதலிய உறுப்புக்கள் பசலை பாய்தலும், அவர்களைப் புணர்ந்தால் அப்பசலை நீங்கலும் இயல்பு என்பது முன்னோர் இலக்கியங்களில் கண்டதாகும். எடுத்துக்காட்டுக்களாக சங்க இலக்கியங்களில்,

---

53. தாழிசை-25
54. தாழிசை-52.

" ஒருநாள்நீர் அளிக்குங்கால்
ஒளிசிறந்(து) ஒருநாள்நீர்
பாராட்டாக் கால்பசக்கும் நுதல்." [55]

[அளி செய்தல்-அன்புகாட்டல்; நுதல்-நெற்றி]

என்று பாலைபாடிய பெருங்கடுங்கோவும்,

" ஊருண் கேணி உண்டுறைத் தொக்க,
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பசத்த லானே." [56]

[பாசி - நீர்ப் பாசி ; பசலை-தேமல் ; தொடுவுழி - தீண்டும் தோறும் ; விடுவுழி-பிரியுந்தோறும்]

என்று குறுந்தொகையில் பரணரும் கூறியிருத்தல் ஈண்டு அறியத் தக்கது திருமங்கையாழ்வாரும்,

" பொங்கார்மெல் இளங்கொங்கை பொன்னே பூப்ப,
பொருகியல்கண் நீர்அரும்பப் புலவி தந்து." [57]

[பொன்பூத்தல்-பசலை படர்தல்; புலவி-ஊடல்]

என்று தாய்ப் பாசுரமாக அருளியுள்ள பகுதியிலும் இத்தன்மையைக் குறிப்பிட்டுள்ளமை கண்டு மகிழத் தக்கது

ஐந்தாவதாக. ஊடல் நிலைக்குப் பிறகு கூடல் நிலை காட்டப் பெறுகின்றது. மகளிர் சிலர் ஊடுங்கால் அவர்களிடம் தோன்றும் வெறுப்புணர்ச்சிக்கு ஒப்பே இல்லை; அவர்கள் ஊடல் நீங்கிப் புன்னகை புரியுங்கால், முல்லையின் அரும்பு போன்ற பற்களின் நகையைத் தாம் அடைந்து விட்டதாக எண்ணும் கணவர் தம்முடைய வாயை அம்மகளிரின் செம்பவள இதழருகே கொணர்ந்து முத்தமிட்டுத் தழுவ நினைக்கின்றனர். இதனால் களிப்பெய்திய மகளிர் தம் கயல் போன்ற கண்களினின்றும் முத்துப்போன்ற ஆனந்தக் கண்ணீர்த் துளிகளைச் சிந்துகின்றனர்.[58] இக்கருத்து

55. கலி-25.
56. குறுந்தொகை-399.
57. திருநெடுந் தாண்டகம்-17.
58. தாழிசை-27.

" ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்." [59]

[ஊடல்-சிறு பிணக்கு; உணர்தல்-பிணக்கினைப் போக்கத் தலைவன் மேற்கொள்ளும் முயற்சியால் தலைவி தெளிதல்; புணர்தல்-கூடல்]

என்ற வள்ளுவப் பெருமானின் கருத்தினை யொட்டி வந்துள்ளதாகக் கொள்ளலாம். அடுத்து, ஊடலும் கூடலும் விழைந்த மகளிரின் இயல்பு இரண்டு பாடல்களில் காட்டப்பெறுகின்றது "மெய்யே கொழுநர்" (தா. 36) எனத் தொடங்கும் பாடலை முன்னரே காட்டி விளக்கினேன். மற்றொரு பாடல்,

" தழுவும் கொழுநர் பிழைநலியத்
தழுவேல் என்னத் தழுவியகை
வழுவ உடனே மயங்கிடுவீர்
மணிப்பொற் கபாடம் திறமினோ." [60]

[கொழுநர்-கணவர்; நலிய-வருத்த ; என்ன-என்ன என்று கணவரை நோக்கிக் கூற; கை-கணவர் கை; வழுவ-நழுவ]

என்பதாகும் களவுப் புணர்ச்சியின்போது 'நின்னைப் பிரியேன், பிரியினும் தரியேன்' என்று கூறிய வாக்கு பொய்த்துப் போர் மேற்சென்ற தம் கணவர் குறித்த பருவத்து வாராததனால், அவர்கள் வந்தவுடன் அவர்கள்மீது ஊடல் கொள்கின்றனர் மகளிர் சிலர். கணவர் தழுவ வருங்கால் 'தழுவேல்' என்று பிணங்குகின்றனர். அவர்கள் கணவரும் அணைத்த கைகளை நழுவ விடுகின்றனர். இதனால், அம்மகளிர் புணர்ச்சி விருப்பால் மயங்கி மனம் வருந்துகின்றனர். இப்படிப் பல ஊடற் காட்சிகள்.

ஆறாவதாக : மகளிரின் பிற இயல்புகளைக் காட்டும் ஒரு சில காட்சிகளைக் காட்டுவேன்.

துயில் நீங்கி எழுந்தாள் ஒரு மங்கை துயிற்பொழுதில் கூந்தல் அவிழ்ந்து கிடந்தது. ஆடை நெகிழ்ந்து நின்றது. துயில் நீங்கி எழுந்தவள் ஒரு கையால் அவிழ்ந்து நின்ற கூந்தலைத் தாங்கினாள். மற்றொரு கையால் நெகிழ்ந்து நின்ற ஆடையைப் பற்றினாள். அந்நிலையில் இரண்டோரடி எடுத்து வைக்கின்றாள்.

59. குறள்-1106
60. தாழிசை-44.

துயில் நீங்கி எழுந்தபோதும் அவள் முகம் மலர்ச்சியுற்று விளங்கு கின்றது. இக்காட்சியை,

"சொருகு கொந்தளகம் ஒருகைமேல் அலைய
ஒருகை கீழ்அலைசெய் துகிலொடே
திருஅ னந்தலினும் முகம லர்ந்துவரு
தெரிவை மீர்கடைகள் திறமினோ." [61]

[கொந்து-பூங்கொத்து; அளகம்-கூந்தல்; அலைசெய்-அலை போல் மடிந்து மடிந்து தோன்றும்; துகில்-உடை; அனந்தல்-தூங்கியெழுந்த மயக்க நிலை; தெரிவை-பெண்]

என்று காட்டுவர் கவிஞர்.

பொருள்களின் இயல்பை உள்ளவாறு எடுத்துக் காட்டும் திறம் மிக அழகியது. எடுத்துக்காட்டாக மகளிரின் நடை அழகினை நயம்பட எடுத்துரைக்கின்றார் கவிஞர் பெருமான். துயிலெழுந்த மங்கையரின் சுருண்ட கூந்தல் மிகுதியாய் அசை கின்றது; அவர்கள் பாதங்களில் அணிந்துள்ள கிண்கிணிகள் இன்னோசையை எழுப்புகின்றன. அவர்கள் துயில் எழுந்த நிலையில் மயில்களின் கூட்டம்போல் காணப்படுகின்றனர்.

"சுரிகுழல் அசைவுற அசைவுறத்
துயிலெழும் மயிலென மயிலெனப்
பரிபுர ஒலியெழ ஒலியெழப்
பனிமொழி யவர்கடை திறமினோ." [62]

[சுரிதல்-நெளிதல்; குழல்-கூந்தல்; துயில்-உறக்கம்; பரிபுரம்-கிண்கிணி]

என்பது கவிஞரின் சொல்லோவியம்

மகளிர் கணவரோடு உறையும் நிலை மிக அழகாகக் காட்டப் பெறுகின்றது. விலைமதிக்க முடியாத தரளமாலைகள் அவர்கள் கொங்கைகளில் அசைந்த வண்ணம் உள்ளன; அவர்களின் கெண்டைமீன் போன்ற கண்விழிகள் புரண்டு புரண்டு காதணி களில் தாக்குகின்றன. இந்நிலையில் மலைபோன்ற தம் கணவரின் தோள்களைத் தழுவி நிற்கின்றனர். இந்நிலை மயில்கள் ஆடி வருவன போல் தோன்றுகின்றது.

61. தாழிசை-46.
62. தாழிசை-23.

" விலையி லாதவட முலையி லாடவிழி
குழையி லாடவிழை கணவர்தோள்
மலையி லாடிவரு மயில்கள் போலவரு
மடந லீர்கடைகள் திறமினோ." [63]

[வடம்-முத்து மாலை; விழி-கண்; குழை-காதணி; விழை-விரும்பும்]

என்று கவிஞர் காட்டும் சொல்லோவியத்தை மனத் திரையில் அமைத்து மகிழத் தக்கது. இங்ஙனம் வரும் காட்சிகள் பலப் பல. அவை யாவும் படிப்போர்க்கு இன்பம் பயப்பவை.

**புறத்தில் அகம்** : இனி, புறப்பொருளாகிய போர், வெற்றி முதலியவற்றைப் பாட வந்த கவிஞர் அகப்பொருள் துறைகளை அமைத்துப் பாடியதன் கருத்து யாது என்பதுபற்றி ஒரு சில கூறி அமைவேன்.

நூலில் கடை திறப்பை அடுத்து வரும் பகுதிகளுள் 'இராச பாரம்பரியம்', 'அவதாரம்' என்ற இரண்டினைத்தவிர ஏனைய பகுதிகள் யாவும் குரூரமான, அச்சத்தை விளைவிக்கும் கூறு களையே வருணித்துச் செல்லுகின்றன. பேயும் பிடாரியும், பிணமும் நிணமும், இடுகாடும் சுடுகாடும், அறுபட்ட தலையும் மிதிபட்ட உடலும், செங்குருதி வெள்ளமும் சின மறவர் வீரமும், போர்க் களத்தில் காணும் பல்வேறு பயங்கரமான நிகழச்சி களும் காட்சிகளும், கேட்போரிடம் அச்சத்தை விளைவிக்கும் பேய்கள் கூழ அட்டு உண்ணும் காட்சிகளும் காணக் கிடக் கின்றன. மாய விளக்கினைக் கொண்ட மந்திரவாதி, அல்லா வுத்தீன் என்ற சிறுவனைக் கூட்டிச் செல்வதைப்போல் கவிஞரும் நம்மை இந்தப் பயங்கர உலகிற்கு அழைத்துச் செல்லுகின்றார். செல்லும்போதே துவரத் துறந்த ஞானியர் உள்ளத்தையும் ஈர்க்க வல்ல சில இன்பக் காட்சிகளையும் காட்ட நினைக்கின்றார்; காட்டி வெற்றியும் பெறுகின்றார்.

புறத்துறைகளைப் பொருத்திப் பாடும் நூலில் அகத்துறை களையும அமைத்துப் பாடினால், வீரச்சுவையும் உவகைச் சுவையும் குழைந்து நின்று, நூலைக் கற்போர்க்குக் கழிபேரின்பம் பயக்கும் என்று கருதியே கவிஞர் அகத்துறைகட்கு இடம் தந்திருக்க வேண்டும். அன்றியும், நிமிர்ந்த செல்வமும் நிறைந்த இளமையும் உள்ள கட்டிளங் காளையர் தம் காதலியரைத் துறந்து போர்க் காதலில் ஈடுபட்டனர் என்றால் அவர்களது வீரம் சொல்லுந்தர

63. தாழிசை-42.

மன்று. இது நாட்டுப் பற்றால் தூண்டப்பெற்ற தியாகம்; நாடாளும் மன்னன் நல்லாட்சியை நிலைபெறச் செய்ய நாட்டு மக்கள் ஒத்துழைப்பு நல்கும் ஓர் அற்புதப் பண்பு. இந்த நிலையைக் காட்டிய பிறகு அவர்களின் வீரத்தையும் காட்டினால் அவர்களுடைய மனப்பான்மையும் உடற்பாங்கும் எளிதில் புலனாகும் என்று கருதியே களப்போர் பாடும் நூலில் கலவிப்போர்க் குறிப்புக்களையும் பெய்து கலந்து வைத்தார் என்று கருதுவதில் தவறு ஒன்றும் இல்லை.

அகத்தையும் புறத்தையும் குழைத்த செயல்பற்றி இன்னொரு விதமாகவும் கருதலாம் எல்லாச் சுவைகளிலும் சிறந்தது காதற் சுவை; சிருங்கார ரஸம். இச் சுவை எல்லா உயிர்களிடமும் வழி வழி வந்துகொண்டிருக்கும் 'வாசனையாய்' அமைந்து கிடக்கின்றது. இந்தத் தூண்டலின் காரணமாக இனப்பெருக்கம் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது ஆண்டவன் படைப்பில் இஃது அற்புதமாக அமைந்து கிடக்கின்றது; படைப்பின் பெரு விசையாகவும் இயங்கி வருகின்றது. இதனை எண்ணியே தொல்காப்பியரும்,

> "எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தான்அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்." [64]

என்று கூறியுள்ளமை ஈண்டு கருதத் தக்கது. எல்லா உயிர்களும் இன்பத்தையே நாடும் விருப்ப முடையவையாகும் என்பது இதன் கருத்து. தவிர, தாவர உலகிலுள்ள ஒரு செய்தியைத் தெளிவாக அறிந்தால் இதை நன்கு உணர்ந்து தெளிவு பெறலாம். தாவரங்களில் சிலவற்றின் இனப்பெருக்கத்திற்குத் துணை புரிபவை வண்டுகளாகும். அவ் வண்டுகளைத் தம்பால் ஈர்ப்பதற்கு அவற்றின் மலர்கள் பல்வேறு வண்ணக் கோலங்களுடனும், மணங்களுடனும் அமைந்துள்ளன; அன்றியும, அம்மலர்கள் அவ்வண்டுகளின் உணவாகிய தேனையும் மணப்பொடிகளையும் (மகரந்தம்) கொண்டுள்ளன இந்த மணப்பொடிகளே இனப் பெருக்கத்திற்குரிய ஆண் உயிரணுக்களாகும். வண்டுகள் மலர்கள்தோறும் உலவும்போது இவ்வணுக்கள் மலர்களிலுள்ள பெண் உயிரணுக்களுடன் கலக்க வாய்ப்பு உண்டாகின்றது. இங்ஙனம் தாவர இனத்தின் உயிர்நாடியாகவுள்ள மணப்பொடிகளே வண்டுகளின் உணவாக அமைந்திருப்பது படைப்பின் விந்தை என்று கருத வேண்டும். படைப்பின் இந்த 'மறை பொருளை' (இரகசியத்தை)

64. தொல். பொருள். நூற்பா 219 (இளம்).

அறிந்த கவிஞர்கள் சிறுமதியினரையும் இன்பச் சுவையால் ஈர்த்து விடலாம் என்று கருதியே தம் நூல்களில் அகப்பொருள் துறைகளையமைத்துப் பாடுகின்றனர் என்று கருதுவதில் உண்மை இல்லாமல் இல்லை. இந்த இன்பத்தைக் கருதி நூலினைப் படிப் போர் நூலில் நுவலப்பெறும் பேருண்மைகளையும் பிறவற்றையும் அறிந்து பெரும் பயன் எய்துகின்றனர். இந்த அடிப்படை யிலேயே சீவான்மா-பரமான்மாவின் உறவினை விளக்கும் தெய்வப் பனுவலாம் "திருக்கோவையாரை" மணிவாசகப் பெரு மான் அருளிச்செய்தார்; அதே தொடர்பினை அருமையாகக் காட்டும் "திருவிருத்தம்" என்ற அற்புதப் பனுவலை நம்மாழ்வார் அருளினார். ஒரு நூலிற்கு அகப்பொருட் சுவையூட்டுவது வேப்பிலை யுருண்டைக்கு வெல்லம் ஊட்டுவது போலாகும்; கொயினா மருந்திற்குச் சருக்கரைப் பாகு ஊட்டி உருண்டைகளாகச் செய்யும் முறையினை ஒக்கும் இத்தகைய ஒரு முறையை மேற் கொண்டே சயங்கொண்டாரும் போரைப் பாடும் தம் நூலில் கலவிப் போரையும் காட்டினார் என்று கொள்வதே ஏற்புடைத் தாகும் என்று கூறி அமைகின்றேன். வணக்கம்.

# 3. பேய்கள் உலகம்

---

மூன்றும் பொழிவு

தமிழன்பர்களே ! தாய்மார்களே !

வணக்கம். இன்று நிகழப்போவது கலிங்கத்துப் பரணி பற்றிய மூன்ருவது சொற்பொழிவு. சென்ற பொழிவில் "கடை திறப்பினைக்" கண்டோம். அது அச்சிறு காவியத்தின் முன் வாயில்போல் அமைந்துள்ளது என்று கூறினேன்; எழிலெல்லாம் திரண்ட ஒரு வனப்பு மிக்க இளமரக்காபோல அது காட்சி அளிப் பதையும் காட்டினேன் இன்று காவிய மாளிகையினுட் புகுந்து கவிஞனின் ஈடும் எடுப்புமற்ற அற்புதப் படைப்பினைக் காணப் போகின்ருேம். தமது அழகிய கற்பனைகளால் கவிஞர் பெருமான் படைத்துக் காட்டும் ஒரு புதிய உலகினையே காணப்போகின்ருேம். நாம் பிறந்து வளர்ந்து வாழ்ந்து வரும் மக்கள் உலகினையும் அங்குக் காண்போம. கவிஞன் காட்டும் புதிய உலகம் பேய்கள் உலகம்; அதனையும் அங்குக் கண்ணுறுவோம். பதின்மூன்று இயல் களைக் கொண்ட அச் சிறுகாப்பியத்தில் 'கடவுள் வாழ்த்து' போக நான்கு பகுதிகளில் மக்கள் உலகினைப்பற்றிய செய்திகள் கூறப் பெறுகின்றன. மூன்று பகுதிகளில் பேய்களின் தலைவியாகிய காளி தேவி, அவள் வாழும சூழ்நிலை, அவளுடைய திருக்கோயிலின் அமைப்பு ஆகிய செய்திகளும் ஏனைய ஐந்து பகுதிகளில் பேய் களின் இயல்புகள், அவைகளின் செயல்கள் முதலியனவும் காட்டப்பெறுகின்றன.இந்த இருவேறு உலகங்களையும் இணைத்துக் காட்டும் கவிஞனின் கறபனை இலக்கியச் சுவைஞர்களை இன்பத் தின் கொடுமுடிக்குக் கொண்டு செலுத்துவதைக் காணலாம்.

இலக்கியத்தில் கற்பனை ' கவிதைகளைக் கனிவித்துக் கற் போரின் மனத்தை அகன்ற பார்வையில் கொண்டுசெலுத்துவது அவனுடைய கற்பனைத் திறன் என்பதை நாம் அறிவோம் கவிதைகளின் பிற பண்புகளுக் கெல்லாம் அடிநிலமாக இருப்பது

இக் கற்பனையே. இன்னும் கூறப்போனால் அதன் கொடுமுடியாக இருப்பதுவும் இக் கற்பனையே என்பதனையும் அறிகின்றோம். உணர்ச்சிகளின் நிலைக்களனாக அமைக்கப்பெறும் எல்லா வகை இலக்கியப் படைப்புக்களும் எழிலுடன் பொலிவுறுவதற்கு இக் கற்பனையாற்றல் மிகமிக இன்றியமையாதது. இக் கற்பனை என் பதுதான் என்ன ? இதனைச் சொற்களால் வரையறை செய்து காட்ட இயலாது. "கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாதது; சொற்களால் உணர்த்த முடியாது; அஃது அதன் பலன்களை மட்டிலும் கொண்டே அறியப்பெறுவதொன்றாகும்"[1] என்று இரஸ்கின் என்ற திறனாய்வாளர் கூறியிருப்பது ஈண்டு எண்ணற்குரியது. கவிஞர்கள் உள்ளதை உள்ளவாறு கூறுவதால் மகிழ்ச்சி அடைவதில்லை. உள்ளம் விரும்புமாறு செய்திகளை அமைத்துக் கூறுவதில் அவர்கள் களிப்படைகின்றனர்; நம்மையும் மகிழ்விக்கின்றனர்.

கவிஞர்களின் உள்ளம் இட்ட இடத்தில் கிடக்கும் கல் போன்றது அன்று. அது கதிரவன் ஒளியையும காற்றையும் நாடி மேல்நோக்கி வளரும் செடி போன்றது : மேன்மேலும் சுற்றி வளரும் கொடிபோன்றது. ஆகவே, பொருள்களின் இருப்பை உள்ளவாறு கண்டு அந்த எழிலில் அவர்களுடைய உள்ளம் அமைதி அடைவதில்லை , பொருள்களை மேலும் வனப்புறச்செய்து தம் உள்ளம் விழையும் சிறந்ததோர் உலகினைப் படைக்க முயல்கின்றது. அந்த முயற்சி இடைவிடாத முயற்சியாக வளர்ந்தோங்குகின்றது. அதுவே அவர்களுடைய அகத் தெழுச்சிக்குக் (Inspiration) காரணம் ஆகின்றது. 'உள்ளது போதும' என்ற மனநிறைவு ஏற்பட்டு விட்டால் அம்மனநிலை புதியன படைக்கும் ஆற்றலுக்கு முற்றுப்புள்ளி வைத்ததுபோல் ஆகிவிடும். இதனை உளங் கொண்டே ஆபர்குரோம்பி என்பார் உள்ளது உள்ளவாறு அமையும் கற்பனையில் கலைஞர்கட்கு ஆர்வம் இல்லை என்றும், உள்ளம் விழையுமாறு அமையும் கற்பனையிலேயே அவர்கட்கு ஆர்வம் மிகுதியாக உள்ளது என்றும் [2] கூறியிருப்பதை ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றேன்.

1. "The essence of imaginative faculty is utterly mysterious and inexplicable and to be recognised in its effects only"—Ruskin.

2. "It is just possible to imagine life exactly as it is; but the exciting thing is to imagine life as it might be; and it is then that imagination becomes an impulse capable of inspiring poetry"—L. Abercrombie (*Principles of Literary Criticism p.* 87.)

கவிஞர் சயங்கொண்டார் ஒரு சிறந்த கலைஞர்; தாம் விரும்பியவாறு பேய்கள் உலகினைப் படைத்துக் காட்டுகின்றார். அந்த உலகில் நடமாடும் கற்பனை மாந்தர்களைக் கொண்டே தாம் கூற விரும்பும் செய்திகளையெல்லாம் உயர்ந்த கலைத் திறனுடன் கூறி நம்மை மகிழ்விக்கின்றார். யதார்த்த உலகில் நிகழும் சில நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டே தம் கற்பனைத்திறனால் படைத்துக் காட்டும் புதிய உலகில் நாம் உலவும்போது பெரு மகிழ்ச்சி கொள்ளுகின்றோம்; பேரின்பத்தில் திளைக்கின்றோம். இனி கவிஞன் காட்டும் பேய் உலகினுள் புகுந்து உலவ முற்படுவோம்.

காட்டின் இயல்பு' முதலாவதாக, பேய்களும் அவற்றின் தலைவி காளி தேவியும் உறையும் காட்டின் இயல்பைக் கூறத்தொடங்குகின்றார். காளிதேவி பாலை நிலத்தின் தெய்வம் என்பதை நாம் அறிவோம். சங்க இலக்கியத்தில் 'கொற்றவை' என்று குறிக்கப் பெறுபவள் இவளே. தமிழ் இலக்கியத்தில், குறிப்பாகச் சங்க நூல்களில், பாலையைக் கூறும் பகுதிகள் மிகச் சிறந்து விளங்குகின்றன. பாலை நிலம் வெம்மை மிக்க வறட்சியுள்ள இடம். உண்ண நீரற்றது; மக்கள் நடந்து கடந்து செல்ல இயலாதது இந்த வெம்மை நிலத்தின் கொடுமையை விளக்கும் சொல்லோவியங்களைச் சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணலாம். ஐந்திணையைக் கூறும் பாடல்களுள் பாலைத்திணைப் பாடல்களே அதிகமாகக் காணப்பெறுகின்றன இவை மிக நயமாகவும் அமைந்துள்ளன. துன்பத்தை நினையுங்கால் மனித தத்துவம் விளங்குமாப்போலே, காட்டின் வெம்மையையும் கொடுமையையும் எண்ணுங்கால் இனிய கவிதைகள் முகிழ்த்தன போலும்!

"மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையோம்பு மூழ்கச் சுருங்கிய புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறுஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு."[3]

[மரை ஆ - மரைமான்; மரை - ஒருவகைத் தாழை; கவர- உண்ண; வரை-மலை; புரையோர்-குற்றத்தையுடைய மறவர்]

என்பது கலித்தொகை காட்டும் பாலை ஓவியமாகும். கானம் மாரி வறப்ப, மரம் வெம்ப, மரையா மரல் கவர காட்சியளிக்கின்றது. இரு புறங்களிலும் மலைகள் ஓங்கி வளர்ந்து நிற்கின்றன. கொள்ளும்

3 பாலைக் கலி-6.

பொருளிலராயினும் கானவரது பகழி உடலில் மூழ்கிய வழிப் போக்கர் சுருங்கி, உண்ண நீரற்று, புலர்ந்து வாடும் நாவினைத் தமது கண்ணீரைக் கொண்டு நனைக்கின்றனர். இத்தகைய கொடுமையைக் காட்டுகின்றது பாலைபாடிய பெருங்கடுங்கோவின் சொல்லோவியம். அகநானூறு என்ற எட்டுத்தொகை நூலில் பாலையைப்பற்றியே இருநூறு பாடல்கள் உள்ளன. ஏனைய நூல் களிலும் பல இனிமையான பாலைத்திணைப் பாடல்கள் உள்ளன.

இங்ஙனம் பண்டையோர் சிறப்பித்த பாலை நிலத்தைச் சயங் கொண்டாரும் தம் சொல்லோவியங்களால் எழிலொழுக, இனிமை சொட்ட, கற்பனை நயம பொதுள வருணித்துள்ளார். பாலை நிலத்தில் எங்கும் ஓரே மணற் பரப்பு ஒரு மணலைக் கடலில் இட்டாலும் அதன் நீரெல்லாம் சுவறிப்போகும. இத்தகைய மணல் இருப்பது தெரியாமல் இராமாயண காலக் குரங்குகள் கடலை அடைப்பதற்கு மலைகளைத் தூக்கி வருந்தின

" அணிகொண்ட குரங்கினங்கள்
அலைகடலுக்(கு) அப்பாலை
மணலொன்று காணமல்
வரைஎடுத்து மயங்கினவே." [4]

[ அணிகொண்ட - போர்செய்ய எழுந்த ; வரை - மலை ; மயங்கின - வருந்தின ]

என்று கூறுவர் கவிஞர் கதிரவனின் வெம்மையைத் தாங்க முடியாமல் பூமியில் ஏராளமான வெடிப்புக்கள் காணப்பெறு கின்றன. அவற்றினுள் பகலவனின் கதிர்கள் பாய்ந்து செல்லு கின்றன. இயல்பான இந் நிகழ்ச்சியைக் கவிஞர்,

" தீய அக்கொடிய கான கத்தரைதி
றந்த வாய்தொறுநு ழைந்துதன்
சாயை புக்கவழி யாதெ னப்பரிதி
தன்க ரங்கொடுதி ளைக்குமே." [5]

[தரை திறந்தவாய்-வெடிப்புக்கள்; சாயை-சூரியன் மனைவி-சாயாதேவி ; கரம் - கை ; திளைத்தல் - தொழிலில் இடைவிடாது பயிலுதல்]

என்று தம் கற்பனை நயம் தோற்றப் புலப்படுத்துவர். வெடிப்புக் களில் சூரியனின் கதிர்கள் பாய்ந்து செல்வது அவன் தன் மனைவி

4. தாழிசை 96.
5. தாழிசை-79.

சாயாதேவியின் பிரிவைப் பொறுமல் தேடித் திரிவதாகக் கூறும் கற்பனை எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியது.

அக் காட்டில் கதிரவனின் வெம்மைக்கு ஆற்ருது பொரி பொரியாய்ப் போன காரை மரங்களும், கரிந்துபோன சூரைமரங் களும், பிற மரங்களும் செடிகளும் காட்சி யளிக்கின்றன. மரங்கள் தண்ணீரின்றி வாடுதலால், தங்கள் நிழலைத் தாமே உட்கொள்ளக் கூடுமெனக் கருதி அவற்றின் நிழல் இல்லாது மறைந்து போயிற்ரும்

" ஆத வம்பருகு மென்று நின்றநிழல்
அங்கு நின்றகுடி போனதப்
பாத வம்புனல்பெ ருது ணங்குவன
பருகு நம்மையெ வெருவியே."[6]

[ஆதவம்-வெயில் ; பாதவம் - மரம் ; உணங்குவன - உலர்வன ]

என்பது கவிஞர் காட்டும் சொல்லோவியம்.மரங்கள் இலையுதிர்த்து நிற்கின்றன என்பதை இவ்வளவு அழகாகக் காட்டுகின்ருர்.

" நிழலுரு இழந்த வேனிற்குன் றத்து
பாலை சான்ற சுரஞ்சேர் தொருசார்."[7]

என்ற மதுரை காஞ்சியின் அடிகளில் வந்துள்ள கருத்துடன் இக்கருத்து ஒப்பு நோக்கத்தக்கது. வெம்மையின் கொடுமையைக் குறித்து மேலும் கூறும் சில கருத்துக்கள் கற்பனையுடன் மிளிர்கின்றன. தேவர்கள் அப்பாலை நிலத்தின் வெம்மையை ஆற்ருது நிலத்தில் அடியிட்டு நடப்பதில்லை.[8] இயல்பாக நிலத்தில் தோயாத தேவர்களின் பாதங்கள் அப் பாலை நிலத்தின் வெம்மையைத் தொடர்புறுத்திக் கற்பனைசெய் திருப்பது நம்மை மகிழ்விக்கின்றது. மேலும், அவர்கள் நிலத்தின் வெம்மையைப் பொறுக்கலாற்ருமையால், மேகமாகிய திரைச் சீலையிட்டுச் சந்திரனுகிய ஆலவட்டத்திஞல் விசிறிக் கொள்வர் என்றும் கூறுகின்ருர்.[9] பகலில் அப் பாலை நிலத்தைக் கடக்கும்போது அந்நிலத்தின் வெம்மையாலுண்டான களைப்பைத் தணித்துக் கொள்ளும்பொருட்டே இரவில் பகலவ னின் குதிரைகள் செல்லுவதில்லை.[10] அந் நிலத்தில் மூங்கில்கள்

6. தாழிசை-81.
7. மதுரைக் காஞ்சி-வரி 313-314.
8. தாழிசை-84.
9. தாழிசை-87.
10. தாழிசை-85.

முத்துக்களை உதிர்த்தல் அந்நிலத்தின் வெம்மையைக் கண்டு மன முருகிச் சொரிகின்ற கண்ணீரையும்,[11] அம் முத்துக்கள் அந்நிலத்தின் உடலில் தோன்றிய வியர்வைத்துளிகள் அல்லது கொப்புளங்களையும்[12] ஒக்கும் என்றுக் கூறும் நயம் இன்பம் தருகின்றது. பாலை நிலத்தின் வெம்மையைப் பொறுக்கலாற்ருமல் கருமுகிலும் வெண்மதியும் மெல்லச் செல்லாமல் ஓடலாயின என்று இயல்பான நிகழ்ச்சியைக் கற்பனை நயம் தோன்றக் கூறுவது படித்து மகிழத் தக்கது.

" காடிதனைக் கடத்துமெனக் கருமுகிலும்
வெண்மதியும் கடக்க அப்பால்
ஓடியிளைத் துடல்வியர்த்த வியர்வன்றே
உகுபுனலும் பனியும் ஐயோ."[13]

[கடத்தும்-கடப்போம; முகில்-மேகம்; மதி-நிலா; புனல்-மழைநீர்]

என்பது கவிஞரின் கற்பனையில் முகிழ்ந்த சொல்லோவியம். கருமுகில் ஓடுகையில் அதன் வேர்வையே மழை நீராகவும், வெண் மதி ஓடுகையில் அதன் வேர்வையே பனி நீராகவும் பெய்யலாயின என்ற கற்பனை நம்மை இன்பத்தின் கொடுமுடிக்கே கொண்டுசெலுத்தி விடுகின்றது.

கவிஞர் பாலை நிலத்தில் வாழும் சில பிராணிகளையும் காட்டுகின்ருர். பருந்துகளும் புருக்களும் மான்களும் அரவுகளும் ஆங்காங்குக் காணப்பெறுகின்றன. சிவந்த நெருப்பைத் தகடாக அடித்துப் பரப்பியதுபோல் பாலைநிலப் பரப்பு செந்நிறமாக உள்ளது. அந் நெருப்பிலிருந்து திரண்ட புகைக் கூட்டத்தையொப்ப ஒரு சில இடங்களில் புருக்கள் தென்படுகின்றன.[14] பருக நீரின்மையால் செந்நாயின் வாயில் ஒழுகும் நீரைத் தண்ணீர் என்று உவந்து மகிழ்ந்து மான்கள் நக்கி நிற்கின்றன. அருந்தத் தகாத அந்நீரை நக்கினமையால் அவற்றிற்கு விக்கல் எடுக்கின்றன.[15] அரவுகள் மரப்பொந்துகளின்றும் வெளிப்படுங் காட்சி அழகாகச் சித்திரிக்கப்பெறுகின்றது.

" வற்றியபேய் வாயுலர்ந்து
வறன்நாக்கை நீட்டுவபோல்

11. தாழிசை-92
12. தாழிசை-93.
13. தாழிசை-86.
14. தாழிசை-82.
15. தாழிசை-83.

முற்றியநீண் மரப்பொதும்பின்
முதுப்பாம்பு புறப்படுமே." [16]

[உலர்தல்-ஈரம் புலர்தல்; வறன் நாக்கு-வறண்டநாக்கு; பொதும்பு-பொந்து]

என்பது கவிஞரின் சொல்லோவியம். பாம்புகள் பொதும்பரினின்று வெளிப்படுவது நீர்வேட்கையால் பேய்கள் நாவை நீட்டுதல்போல் காட்சியளிகின்றதாம்.

**பேய்களின் தோற்றமும் இயல்பும்:** அடுத்து, கவிஞர் சயங்கொண்டார் படைத்துள்ள பேய் உலகிற்குச் செல்லுவோம். பேய்களின் வடிவமைப்பு, சயங்கொண்டார் கூறுவதுபோல் வேறு எந்த நூலிலும் காண்டல் அரிது. கவிஞர் காட்டும் பேய்கள் பன்னெடு நாள் உணவின்றிப் பசிப்பிணியால் வாடும் நிலையில் உள்ளன. அவை வாழ்விலும் தாழ்விலும் தம் தலைவியாகிய காளிதேவியின் திருவடிகளைவிட்டு நீங்காது இருக்கின்றன.

" எவ்வணங்கும் அடிவணங்க
இப்பெருமை படைத்துடைய
அவ்வணங்கை அகலாத
அலகைகளை இனிப்பகர்வாம்." [17]

[அணங்கு-தெய்வ மகள், காளி; அலகை-பேய்]

என்று கவிஞர் பேய்களை நமக்குக் காட்ட முற்படுகின்றார். உணவின்மையால் உயிர் விடுங்காலம் நெருங்கிவிட்டது என்று கூறிக்கொண்டு அன்னையை விட்டு அகலாதிருக்கின்றன அப்பேய்கள் பசியின் கொடுமையைக் கவிஞர்,

" புயல ளிப்பன மேலும ளித்திடும்
பொற்க ரத்தப யன்புலி பின்செலக்
கயலொ ளித்தக டுஞ்சுரம் போலகங்
காந்து வெம்பசி யிற்புறந் தீந்தவும்." [18]

[புயல்—மேகம்; அளிப்பனமேல்—அளிப்பனவற்றிற்கு மேல்; புலி—புலிக்கொடி; கயல்—மீனக்கொடி; சுரம்—பாலை நிலம்; பசியின்—பசியால்: தீதல்—கரிதல்]

16. தாழிசை-89.
17. தாழிசை-134.
18. தாழிசை-143.

என்று காட்டுவர். ஈகையில் மேகத்தையும் வென்ற சோழனுடைய புலிக்கொடி துரத்த அதற்கு ஆற்ருது பாண்டியனுடைய மீனக் கொடி ஒளித்துள்ள பாலை நிலத்தைப்போல, வயிற்றின் உட்பக் கத்தில் வருத்தும் பசியின் வெம்மையால் உடலின் வெளிப்பக்கம் தீய்ந்து கரிந்துள்ளது. ஒவ்வொரு பேயின் வயிறும் பசியென்ற பொருளை நிரப்பி அடைத்துவைத்துள்ள குப்பி போன்றது. இதனை ஒரு பேயின் வாய்மொழியாக மிக அழகாகக் கூறுகின்ருர் கவிஞர்

> " சாவத்தாற் பெறுதுமோ சதுமுகன்ருன்
> கீழ்நாங்கள் மேளுட் செய்த
> பாவத்தால் எம்வயிற்றில் பசியைவைத்தான்
> பாவியேம் பசிக்கொன்(று) இல்லேம்." [19]

[சாவம்—பெரியோர் சாபம் ; சதுமுகன்-நான்முகன்]

என்பதாக, தாங்கள் முற்பிறப்பில் இழைத்த பெரும் பாவத்தால் நான்முகன் தம் வயிற்றில் பசியை வைத்து அதற்கேற்ற உண வில்லாமல் செய்து விட்டான் என்று ஓலமிடுகின்றன அப்பேய்கள்

> " வேகைக்கு விறகானேம் மெலியா நின்றேம்
> மெலிந்தஉடல் தடிப்பதற்கு விரகும் காணேம்." [20] .

[வேகை—பசித்தீ, பற்றி எரிதல் ; விரகு—உபாயம்]

என்று அவை முறையிடுவதைக் கேட்டு நாமும் பரிவு கொள்ளு கின்றேம் ; பச்சாதாபப் படுகின்றேம்.

பேய்களின் தோற்றம் மிகவும் அச்சந்தரும் தன்மையது ; விகார வடிவத்தை உடையது பனங் காடுகள் முழுவதும் அவற்றின் கைகளும் கால்களுமாக ஆயினவோ என்று எண்ணத் தோன்றுகின்றது. வாய் பெரிய குகையைவிட மிகப்பெரியது. " வன் பிலத்தொடு வாதுசெய் வாயின " [21] என்று கூறுகின்ருர் கவிஞர். இத்தகைய பெரிய வாயால் உணவு கொண்டாலும் நிறையாத "மகராசன் கப்பல்" போன்றது அவற்றின் வயிறு. ஒரு நாளைக்கு ஒருநாள் உணவின்மையால் தேய்ந்து போகின்ற உடலைக் கவிஞர்,

> " வெற்றெ லும்பைந ரம்பின்வ லித்துமேல்
> வெந்தி லாவிற கேய்ந்தவு டம்பின." [22]

[வலித்தல்—கட்டுதல் ; ஏய்ந்த—ஒத்த]

19. தாழிசை-216.
20. தாழிசை-215.
21. தாழிசை-136.
22. தாழிசை-137.

என்று காட்டுகின்றார். உடல் மிகவும் இளைத்து எலும்பும் நரம்பு மாய்க் கிடக்கின்றது. அவற்றின் கன்னங்கள் இரண்டும் ஒட்டிக் கிடக்கின்றன; கண்களோ குன்றுகளின் குகைகளில் தோன்றும் கொள்ளிக் கட்டைகள்போல் ஒளிர்கின்றன. அப்பேய்கள் உட்கார்ந்தால் அவற்றின் முகத்திற்குமேல் மூன்று முழம் இருக்கும்; அவற்றின் வற்றலாக உலர்ந்த முதுகிற்கு மரக்கலத்தின் மறிப்புறத்தையே உவமை கூறலாம். 'ஒற்றைவான் தொளைப்புற்று' போலுள்ள அவற்றின் கொப்பூழில் பாம்புகளும் உடும்புகளும் உறங்குகின்றன; அத்துணைப் பெரியவை அவற்றின் கொப்பூழ்கள்.

பேய்களின் உடலின்மீதுள்ள உரோமங்கள் கரிய பாம்புகள் தொங்குவன போலுள்ளன. அவற்றின் மூக்குகளில் பாசிபடர்ந்துள்ளது. அவற்றின் காதுகளில் முன்னதாகவே ஆந்தைகள் புகுந்து பதுங்கிக் கொண்டமையால் நுழைய இடமின்றி வௌவால்கள் வலக்காதுகட்கும் இடக்காதுகட்குமாக உலவுகின்றன. அவற்றின் பற்கள் மண்வெட்டி இலையைப்போல் அகன்றும் கொழுவைப்போல் நீண்டும் காணப்படுகின்றன. அவற்றின் உதடுகள் தடித்து நீண்டு மார்பளவும் தொங்குகின்றன பசிக்கு ஆற்றாது நாக்கில் பாதியும் உதடுகளில் பாதியும் தின்று விட்ட சில பேய்கள் குறைந்த வாயுடையனவாகக் காணப்படுகின்றன. "பசிக் கலைந்து பாதி நாக்கும், உதடுகளில் பாதியுந்தின்(று) ஒறுவாயானோம்"[23] என்ற அவைகளின் முறையீட்டினைக் கேட்கும் நாம் உண்மையிலேயே உள்ளம் குழைகின்றோம். சில பேய்கள் பாம்புகளில் ஓந்திகளைக் கோத்துத் தாலிகளாக அணிந்து கொண்டுள்ளன. இந்த வடிவங்களுடன் காணப்பெறும் பேய்கள் விண்ணை எட்டும் உயரமாக உள்ளன.

உயரமான மூங்கில்கட்கும் உயரமானபேய்கட்கும் வேறுபாடு புலப்படவில்லை. பேய்களின் குழவிகட்கும் ஒட்டகங்கட்கும் வேற்றுமை தெரியவில்லை. இதனைக் கவிஞர்,

> " அட்ட மிட்டநெ டுங்கழை காணில்'என்
> அன்னை அன்னை'என்(று) ஆலுங்கு ழவிய
> ஒட்ட ஒட்டகங் காணில்என் பிள்ளையை
> ஒக்கும் ஒக்கும்'என்(று) ஒக்கலை கொள்வன."[24]

[அட்டம்—அண்மை; கழை—மூங்கில்; ஆலும்—ஒலியிடும்; குழவி—குழந்தை; ஒட்ட—அண்மையில்; ஒக்கலை—இடுப்பு]

23. தாழிசை-217.
24. தாழிசை-142.

என்று மிக அழகாகச் சித்திரித்துக் காட்டுகின்றார். உயர்ந்த மூங்கில்களைக் காணுங்கால் பேய்க் குழவிகள் 'அம்மா, அம்மா' என்று கூவி அழைக்குமாம்; ஒட்டகங்கள் தம்மை நெருங்கி வருங்கால் தாய்ப் பேய்கள் அவற்றைத் தம் இடுப்பில் தூக்கி வைத்துக் கொள்ளுமாம். பேய் உலகில் உறுப்புக் குறையுள்ள சில பேய்களையும் காண்கின்றோம். அவற்றை அடுத்து வரும் பொழிவில் காட்டுவேன்.

**காளிதேவியின் திருக்கோயில்:** இத்தகைய பேய்கள் வாழும் கொடிய காட்டில்தான் பேய்களின் இறைவி காடுகெழு செல்வியாகிய காளிதேவியின் திருக்கோயில் அமைந்துள்ளது. திருக்கோயிலின் அமைப்பு, அங்கு வீற்றிருக்கும் அன்னையின் திருவோலக்கச் சிறப்பு, அன்னை வழிபாடு இவற்றைக் கவிஞர் கூறும் திறன் கற்பனைச்செறிவுடன் மிளிர்வதைக் காட்ட முற்படுகின்றேன். குலோத்துங்கன் தன் மாற்றரசரைக் கொன்று கவர்ந்த அவர்தம் மனைவியர்களின் ஆபரணங்களிலுள்ள இரத்தினங்கள் அன்னையின் கோயிலுக்கு அடித்தளமாக அமைந்துள்ளன.[25] குலோத்துங்கனை எதிர்த்த சேர வீரர்களின் கொழுப்பாகிய சேற்றை அவர்களின் உதிரமாகிய நீரால் குழைத்து அவர்களின் தலைகளைக் கற்களாகக் கொண்டு கோயிலின் சுவர் எழுப்பப்பெற்றுள்ளது.[26] பகை மன்னர்களின் காவற் காடுகளிலுள்ள மரங்கள் தூண்களாகவும் உத்திரங்களாகவும் அமைக்கப்பெற்றுள்ளன.[27] மிதிலை நகரப் போரில் இறந்துவிட்ட யானைகளின் கொம்புகள் துலாமாகவும் (உத்தரத்தின் மேல் முக்கோண வடிவுடன் நிறுத்தப்பெறும் மரம்) அவற்றின் விலா வெலும்புகள் கூரையின் இருபுறக் கைமரங்களாகவும் அமைந்துள்ளன.[28] கூரையின் மேல் முகட்டின் கூடல்வாய்களை அமைப்பதற்கு யானை, யாளி, கேழல், சீயம் இவை எழுதப்பெற்ற மாற்றரசர்களின் கொடிகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.[29] மேற்கூரை எவற்றால் வேயப் பெற்றது? கவிஞர் கூறுவதைக் கேட்போம:

> "துங்க பத்திரைச் செங்க ளத்திடைச்
> சோள சேகரன் வாளெ றிந்தபோர்
> வெங்க தக்களிற் றின்ப டத்தினால்
> வெளிஅ டங்கவே மிசைக விக்கவே."[30]

[செங்களம்-போர்க்களம்; சோளன்-சோழன்; கதம்-சினம்; படம்-முகபடாம்; மிசை-கூரை]

25 தாழிசை-98
26. தாழிசை-99.
27 தாழிசை-100.
28. தாழிசை-101.
29. தாழிசை-102.
30 தாழிசை-103.

துங்கபத்திரை நதிக்கரையில் நடைபெற்ற போரில் கவர்ந்த யானைகளின் முகப்போர்வைகளைக்கொண்டு கோயிலின் கூரை வேயப்பெற்றதாம்.

இனி, திருக்கோயிலின் மதிற் சுவர்களின் அமைப்பைக் காண்போம்.

" கொள்ளிவாய்ப் பேய்காக்கும்
கோபுரமும் நெடுமதிலும்
வெள்ளியால் சமைத்ததென
வெள்ளெலும்பி ருல்சமைத்தே." [31]

[சமைத்தல் - ஆக்கல்]

என்ற தாழிசையால் கோபுரமும் மதிற்சுவர்களும் போரில் இறந்து பட்ட யானை, குதிரை இவற்றின் வெள்ளெலும்புகளால் சமைக்கப் பெற்றுள்ளன. சில கரும் பேய்கள் திருக்கோயிலுக்கு முன்புறம் இரண்டு இரும்புத் தூண்களை நட்டு ஓர் இரும்பினை வளைத்து அதனை ஒரு மகர தோரணமாக அமைத்தன[32] என்று அறிகின்றோம்.

இங்ஙனம் அமைக்கப்பெற்ற திருக்கோயில் பல்வேறு விதமாக அணி செய்யப்பெற்றுள்ளதையும் சயங்கொண்டார் குறிப்பிடுகின்றார். பள்ளி, கல்லூரி விளையாட்டுப் போட்டி விழா, ஆண்டுவிழா இவை நடைபெறுங்கால் ஆடுகளமும் கட்டிடமும் எங்ஙனம் அலங்கரிக்கப்பெறுகின்றனவோ அங்ஙனமே திருக்கோயில் அலங்கரிக்கப்பெற்றிருப்பதாகக் காட்டுகின்றார் கவிஞர்.

" மயிற்கழுத்தும் கழுத்தரிய மலர்ந்தமுகத்
தாமரையும் மருங்கு சூழ்ந்த
எயிற்கழுத்தும் நிணக்கொடியும் இளங்குழவி
பசுந்தலையும் எங்கும் தூக்கி." [33]

[மருங்கு-பக்கம்; எயில்-மதில்; அழுத்துதல்-செருகுதல்; எயிற்கு + அழுத்தும்]

என்ற தாழிசையால் மயில்களின் தலைகள், மலர்ந்த முகத்துடனுள்ள வீரர்களின் தலைகள், நிணத்தாலாகிய கொடிகள்,

31. தாழிசை-104.
32. தாழிசை-105.
33. தாழிசை-106.

பச்சிளங் குழவிகளின் தலைகள் இவை எல்லாவிடங்களிலும் தொங்கவிடப்பெற்றிருந்தன. பாண்டிய மன்னர்களை வென்று போரில் இறந்துபட்ட கடகளிற்றின் காதுகளை மாலையாகத் தொங்கவிட்டு அவர்களின் தலைநகரமாகிய மதுரையிலுள்ள மகரதோரணம் ஊசலாக அமைக்கப்பெற்றிருந்தது.[34]

**அன்னையின் திருவோலக்கம்:** இங்ஙனம் புதிதாகவும் புதிராகவும் அமைக்கப்பெற்ற திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் காளிதேவியின் திருவோலக்கத்தை மிகவும் வியக்கத் தக்க முறையில் காட்டுகின்றார் கவிஞர். அன்னையின் உருவம் அச்சந் தரும் பான்மையில் சித்திரிக்கப்பெறுகின்றது ஆதிசேடன் வாசுகி என்ற அரவுகள் அன்னையின் இணையடிச் சிலம்புகளாகும். அவற்றின் வயிற்றில் முத்துக்கள் பரற்கற்களாகவும், மேற்புறத்தில் விண்மீன்கள் பதிக்கப்பெற்ற இரத்தினங்களாகவும் அமைந்துள்ளன.[35] செப்புக் கிண்ணங்கள் போன்ற கொங்கைகளில் வெண்ணீறு பூசப்பெற்றுள்ளது.[36] யானைத் தோலை ஆடையாக அணிந்து, அதன் குடலையும் பாம்பையும் முறுக்கிக் கச்சாகக் கட்டிக்கொண்டுள்ளாள்.[37] தழல் உமிழ் உரகம் அவளுடைய மேலாடையாக அமைந்துள்ளது. அதற்குமேல் பொன்னணிகளையும், முத்து மாலைகளையும் பவள மாலைகளையும் அணிந்துள்ளாள்[38] நான்முகன், இந்திரன், ஆனைமுகன், கந்தன் இவர்கள் நால்வரையும் கருவுயிர்த்த திருவயிற்றினையுடையவள்.[39] வீரர்களின் குருதியைப் பருகிச் சிவப்புற்ற அவளுடைய திருக்கைகளை யானைகளின் மதநீரால் கழுவியதால அவை கருமை நிறமுடன் தோன்றுகின்றன.[40] அமுதம் கடைந்த காலத்தில் தோன்றிய ஆலத்தையுண்டு நீலகண்டரான சிவபெருமானை விடம் பற்றுமல் தனது அதரபானமாகிய அமுதத்தால் தணிக்கக் கூடியவள்.[41] தன் கடைக்கண் பார்வை படுதலால காமகாலனுக்கு உண்டாகும் காமநோயைத் தணிவிக்கும் இனிய சொற்கள் பிறக்கும் திருவாயினை யுடையவள்.[42] மதியையொத்த அவளுடைய நெற்றியில பகலவனை யொத்த சிந்தூரப்பொட்டு திகழ்கின்றது[43] இதில் குலோத்துங்கனின தந்தையின் வழியையும (சந்திரகுலம்) தாயின் வழியையும் (சூரியகுலம்) இணைத்துப் போற்றப்பெறும நயம உணர்ந்து மகிழத் தக்கது.

34 தாழிசை-107.
35. தாழிசை-122
36. தாழிசை-124.
37. தாழிசை-125.
38. தாழிசை-127.
39 தாழிசை-126.
40. தாழிசை-128
41. தாழிசை 129.
42. தாழிசை-130.
43. தாழிசை-131.

இங்ஙனம் அடியிலிருந்து முடிதோறும் அவயவங்களை வருணித்த கவிஞர் பெருமான் அன்னையின் பேருருவச் சிறப்பினை இரண்டு தாழிசைகளால் கூறுகின்றார். உலகிலுள்ள மலைகளைக் காதணிக ளாகவும் அணிவாள்; விரும்பினால் அவற்றைக் கோத்து இரத்தின மாலையாகவும் சூடுவாள்.[44] சில சமயம் அம்மலைகள் அவளுடைய திருக்கைகளில் அம்மானைக் காய்கள், பந்துகள், கழங்குகள் போன்ற விளையாட்டுக் கருவிகளாகவும் அமையும்.[45] அன்னை விரும்பின் ஆகாதது ஒன்றுண்டோ? மலைகளின் நிலைகளை வைத்து அவளுடைய திருவுருவத்தை நம் மனதில் பேருருவமாக அமைக்கும் கவிஞரின் கலைத்திறம் எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

**அன்னை வழிபாடு:** தேவியின் திருக்கோயில் மக்கள் உலகமும் பேய்கள் உலகமும் சந்திக்கும் பொது இடமாக அமைத்த கவிஞரின் கற்பனைத் திறன் போற்றற்குரியது. தேவியை வழிபடுவோர் அவளுடைய திருக்கோயிலைப் பெருக்கி, பசுங்குருதி நீர்தெளித்து, கொழுப்பாகிய மலர்களைத் தூவி, பிணங்களைச் சுடும் சுடலையிலுள்ள விறகு விளக்குகளை எம்மருங்கும் ஏற்றி வைப்பர். அன்னையை வழிபடும் வீரர்களின் துதிக்கும் ஒலி கடலொலிபோல் எங்கும் முழங்கும். இதனைச் சயங் கொண்டார்,

> "சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
> தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாக
> பலியாக உறுப்பரிந்து தருதும் என்று
> பரவும்ஒலி கடல்ஒலிபோல் பரக்கு மாலோ."[46]

[தறுகண்-அஞ்சாமை; பரவுதல்-துதித்தல்; பரக்கும்-பரவும்]

என்ற தாழிசையால் விளக்குகின்றார். "அன்னையே, எருமைக் கடாவைப் பிளந்துதரும் பசுங்குருதியைப் பலியாக ஏற்றுக்கொள் வாயாக" என்ற வீரர்களின் குரலொலிகள் பேரிடி இடித்தாற் போல எண்திசைகளையும் வான்முகட்டினையும் பிளந்து முழங்கும்; அதனையொட்டி தமருகங்களின் ஒலிகளும் அதிகமாக எழும்.[47] வீரர்கள் புரியும் வேள்வி விநோதமானது. தங்கள் விலாவெலும் புகளை ஒவ்வொன்றாகப் பிடுங்கி அவற்றைச் சமித்தாகவும், குருதியை நெய்யாகவும் ஓமம் வளர்த்து வேள்வி புரிந்து தேவியை

44. தாழிசை-132.
45. தாழிசை-132.
46. தாழிசை-109
47. தாழிசை-114

வழிபடுவர்.[48] அன்னையை வழிபடும் சில வீரர்கள் தங்கள் சிரங்களை அரிந்து அவள் கையில் கொடுப்பர். அத்தலைகள் அவளைப் பரவும் ; தலைகுறைந்த உடலங்கள் அவளைக் கும்பிட்டு நிற்கும்.

" அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ."[49]

[அணங்கு-காளி ; கொற்றவை-காளி ; பரவும்-துதிக்கும்]

என்பது கவிஞரின் சொல்லோவியம். பலிபீடத்தில் அரிந்து வைக்கப்பெற்ற வீரர்களின் தலைகளை ஆண்டலைப் புட்கள் அணுகும்பொழுது அவை அப்புட்களை வெருட்டியோட்டும்.[50] பலிக்கடன் செலுத்துவோர் தங்கள் தலைகளை யரிந்த பின், களிப் பால் துள்ளும் உடல்களைப் பேய்கள் தீண்டுவதற்கு அஞ்சி அவை நிலத்தில் விழும் வரையிலும் அவற்றைத் தொடர்ந்து திரியும்.[51]

திருக்கோயிலருகில் மேலும் சில காட்சிகளைக் காட்ட நினைக் கின்றேன். மூங்கில்களின் நுனியில் தொங்கும் வீரர்களின் தலைகளைக் கண்டு யாவருக்கும் அச்சத்தை விளைவிக்கும் பேய் களும் அவற்றின் அருகில் செல்ல அஞ்சும் ; அவற்றின் எளிய நிலைமையினைக் கண்டு அத்தலைகள் நகைத்து நிற்கும் ; இதனால் பேய்கள் விடியும் வரையிலும் உறங்காம லிருக்கும்[52] பலிக் கடன் செலுத்துவோரால் தொங்க விடப்பெற்ற தலைகளையுடைய சில மூங்கில்கள் பாரம் தாங்கமாட்டாமல் வளைந்து குருதிப் பெருக்கில மூழ்கி யிருக்கும் அவை இறந்து கிடக்கும் வீரர்களின் உடல்களைக் கவர்வதற்குக் காலன் போட்ட தூண்டில்களைப்போல் காட்சியளிக்கும்.

" அரிந்ததலை யுடன்அமர்ந்தே ஆடுகழை
அலைகுருதிப் புனலின் மூழ்கி
இருந்தவுடல் கொளக்காலன் இடுகின்ற
நெடுந்தூண்டில் என்னத் தோன்றும்."[53]

[அமர்ந்து பொருந்தி ; கழை-மூங்கில் ; காலன் யமன்]

என்பது கவிஞரின் சொல்லோவியம்.

48. தாழிசை-110
49. தாழிசை-111
50. தாழிசை-112
51. தாழிசை-113.
52. தாழிசை-117.
53 தாழிசை-118.

பல்வேறு இசைக்கருவிகளின் ஒலிகளைக் கேட்டுப் பல்வேறு திசைகளினின்றும் அன்னையை வழிபடப் பலர் வருவர். சாதகர் என்ற தேவியின் மெய்காப்பாளர்கள் தமருகம் என்ற தோற் கருவிகளின் ஓசை கேட்டு வருவர்.[54] யோகினி மாதர்கள் என்ற தேவியின் பரிவார மகளிர் வாளாயுதத்தை வலக்கையிலும் வீரர் களின் தலைகளை இடக்கையிலும் ஏந்திக்கொண்டு அன்னையை நோக்கி வருவர்.[55] இவர்கள் எழுவர் எனவும், ஒன்பதின்மர் எனவும், பன்னிருவர் எனவும் கூறப்பெறுவர். இவர்களைத் தவிர கோயிலைச் சுற்றிக் காணப்பெறும் வேறு சில காட்சிகளையும் கவிஞர் காட்டுகின்றார். தம்முடைய குழந்தைகட்கென உணவை நாடித் திரியும் சில கொள்ளிவாய்ப் பேய்கள் நரிகளின் வாயிலுள்ள இனிய தசையைப் பறித்துச் செல்லும்.[56] இன்னும், அன்னையின் திருக்கோயிலைச் சுற்றிலும் பிணங்களைப் பிடுங்கித் தின்னும் பருந்து களையும், பிணங்களைச் சுடும் நெருப்பையும், செம்பருத்திச் செடிகளையும், பேய்களையும், சுடுகாட்டையும், சுடலையிலுள்ள பிணங்களைக் கவருவதில் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டிருக்கும் நரிகளையும் மிகுதியாகக் காணலாம்.[57]

**முதுபேயும் இந்திர சாலமும்:** திருக்கோயிலைத் தவிர மக்கள் உலகினையும் பேயின் உலகினையும் இமயத்தினின்றும் போந்த ஒரு முதுபேயின் மூலமும் தொடர்புறுத்துகின்றார் கவிஞர். ஒரு நாள் காளி தனி பிண்டிபாலம் என்னும் ஆயுதம் ஏந்திய நிலையில் எலும்புக் குவியலின்மீது மென்மையான குடல்களால் கட்டப் பெற்ற தீபக்கால் கட்டிலின்மீது பிணங்களாலான பஞ்சசயனத் தின்மீது வீற்றிருக்கின்றாள்.[58] அவள் இருக்கும் இருபுறத்திலும் இடாகினிகள் என வழங்கப்பெறும் சுடலையில பிணம் தின்னும் பேய்கள் 'ஈச்சோப்பி' என்ற கருவியினால் வீசிக் கொண்டிருக் கின்றன.[59] இறந்துபட்ட வீரர்களின் நிணச்சட்டை யணிந்து அவர்களின் குடர்களாகிய மாலையை சூடிக் கொண்டு யானை களின் எலும்புகளை அவற்றின் நரம்புகளால் கட்டியமைந்த தடி யொன்றினை இடைவிடாது ஏந்திய வண்ணம் அன்னையின் சந்நி தியில் ஒரு நெடும் பேய் ஒழுங்கு முறையைக் கண்காணித்து வருகின்றது.[60] திருமால் சந்நிதியில் சேனை முதலியாரும கயிலை நாதன் சந்நிதியில் வேத்திரப்படை கொண்டு நிற்கும் நந்தி யம்பெருமானும் கைங்கரியம் செய்து வருவது போன்ற பணியை

54. தாழிசை-115.
55. தாழிசை-116.
56. தாழிசை-119.
57. தாழிசை-120.
58. தாழிசை-153, 154.
59. தாழிசை 155.
60. தாழிசை-156.

இந்நெடும் பேய் புரிந்து வருகின்றது. இந்த நெடும் பேயின் மூலம் தேவியின் செவ்வியறிந்து இமயத்தினின்றும் போந்த ஒரு முதுபேய் அன்னையை அணுகி அவள் அடிக்கமலங்களை வாழ்த்தித் தன் பிழையைப் பொருத்தருளுமாறு வேண்டுகின்றது. அப் பேய் இழைத்த பிழை என்ன? அஃது இமயம் சென்று வாழ்ந்த தற்குக் காரணம் என்ன? சுரகுரு என்ற சோழ அரசன் ஒரு பேய் மகனை யமன்பால் தூது அனுப்பினான். அத் தூதுவன் தான் உண்பதற்காக அறுத்து வைத்த சிரத்தை ஒரு பேய் களவாடித் தின்று விட்டது சீற்றங்கொண்ட காளி தேவி அத்திருட்டுப் பேயின் சிரத்தை அறுத்து அப்பேய் மகனுக்கு ஈடுசெய்து வைத் தாள். அத்திருட்டுப்பேயின் செயலுக்கு உளவாளிகளாக இருந்த சில பேய்கள் அன்னையின் சீற்றத்துக்கும் சுரகுருவின் சீற்றத் துக்கும் அஞ்சி தலைமறைவாக வாழ்ந்தன.[61] அப்பேய்களுள் ஒன்றுதான் இமயத்தில் ஓடியொளிந்து வாழ்ந்து முதற்குலோத் துங்கன் காலத்தில் காளிதேவியை அடைகின்றது. அதன் வேண்டு கோளின்படி அன்னையும் பிழைபொறுத் தருள் கின்றாள்.[62]

தேவியின் இசைவுபெற்று தான் இமயத்தில் வாழ்ந்த காலத்தில் கற்ற சில இந்திரசால வித்தைகளைக் கண்டோர் வியப்புறுமாறு காட்டுகின்றது முது பேய். முதலில் வலக்கையில் யானையின் சில துதிக்கைகளை வைத்துக்கொண்டு அவற்றை இடக்கையில் மாற்றியவுடன் அவை மதம் பொழியும யானைத் தலைகளாக மாறியதைக் காட்டுகின்றது[63] அடுத்து, இடக் கைகளிலிருக்கும் யானைத தலைகளின் வாயிலிருந்து பெருகும் குருதியைப் பேய்கள் குடித்து இடிமுழக்கம்போல் கொக்கரிப் பதையும், தலையறுப்புண்ட யானைகளின் உடலங்கள் குருதி வெள்ளத்தில் மிதப்பதையும் காட்டுகின்றது[64] அதன்பிறகு அப பேய் குலோத்துங்கனின பரணிப் போரையே காட்டத தொடங்கு கின்றது. அந்த மாயப் போரில் இறந்துபட்ட குதிரைகளும், வெட்டுண்டுகிடக்கும் வீரர்களுடல்களும், வெருவியோடும் யானை களும், பெருகியோடும் குருதி வெள்ளமும் காணப்படுகின்றன.[65] குருதி வெள்ளத்தில் அறுப்புண்ட தோள்கள் அடித்துச் செல்லப் பெறுகின்றன; அறுபடாத குடல்கள் மிதக்கின்றன; முறிந்து வீழ்ந்த கால்களை நரிகள் இழுத்துச் செல்கின்றன; மூளைச் சேற்றில் வீரர்கள் வழுக்கி வீழ்கின்றனர்.[66] இந்தக் காட்சியில் பேயலாத சில புதிய 'ரகப்' பேய்களும் காணப்படுகின்றன.[67]

61. தாழிசை-157.
62. தாழிசை-160.
63. தாழிசை-162.
64. தாழிசை-163.
65. தாழிசை-165.
66. தாழிசை-166.
67. தாழிசை-167.

மாய வித்தையால் தோற்றுவித்த காட்சிகள் யாவும் உண்மை யானவை என்று நம்பிப் பன்னெடு நாட்களாகப் பசியால் வாடுபேய்கள் அப்பிணங்களை உண்பான் வேண்டிக் கால்முறிந்து போகும்படி ஒன்றன்மேல் ஒன்று விழுந்துப் பதறியோடுகின்றன.[68] குருதியும் தசையும் கண்களுககுத் தோன்றிக் கைக்கெட்டாமை யால் அவை வெறுங்கை புகந்து நிலத்தைத் துழாவுகின்றன.[69] இங்ஙனம பேய்களின் செயல்களைக் காணும தேவியின் பரிவார மகளிராகிய யோகினி மாதர்கள் தம விலாவெலும்புகள் முறியு மாறு நகைக்கின்றனர்.[70] இந்நிலையில் இமயப் பேய் அன்னையை நோக்கி,

> "கொற்றவர்கோன் வாளபயன் அறிய வாழும்
> குவலயத்தோர் கலையனைத்தும் கூற ஆங்கே
> கற்றுவந்தார் கற்றஅவன் காணு மபோல்
> கடைபோகக் கண்டருள்என் கல்வி என்றே"[71]

[கொற்றவர்கோன்-அரசர்க்கரசன்; குவலயம-உலகம; கடை போக-முடிய]

என்று மீண்டும் வேண்டியபோது பேய்கள் யாவும் 'போதும்' என்று கூறி வித்தை காட்டலை நிறுத்துமாறு முறையிடுகின்றன; அதுவும் அங்ஙனமே நிறுத்தபபெறுகின்றது.

**பேய்களின் முறையீடு** : பேய்கள் யாவும ஒன்று திரண்டு வந்து அன்னையைய அடிபணிந்து தம் பசிப பிணியைப் போக்கு மாறு வேண்டும் பகுதி மிக்க சுவையுடையது; பன்முறை படித்து இன்புறத் தக்கது பசிககொடுமையால வாடும் அவை தாம பேய் களாகப் பிறந்து கெட்டமைக்கு வருந்துகின்றன. இதனைக் கவிஞர்,

> "ஆர்காப்பார் எங்களைநீ அறிந்தருளிக்
> காப்பதல்லால் அடையப் பாழாம்
> ஊர்காக்க மதில்வேண்டா உயிர்காத்த
> உடம்பினைவிட் டோடிப் போதும்."[72]

[அடைய-முழுவதும் ; ஓடிப் போதும்-இறப்போம்]

என்று காட்டுகின்றுர் பாழான ஊரைக் காக்க மதில் வேண் டாததுபோல, பயனற்ற தங்கள் உயிரைக் காக்க உடம்பு

68. தாழிசை-168.
69. தாழிசை-169.
70. தாழிசை-172.
71. தாழிசை-174.
72. தாழிசை-213.

வேண்டியதில்லை என மொழிகின்றன அப்பேய்கள். குலோத் துங்கனுக்குக் கீழுள்ள சிற்றரசர்கள் முறை தவறாமல் திறைப் பொருள்களைச் செலுத்திவருவதால், அவன் நாட்டில் போர் ஏற்படவில்லை. இதனால் தங்கள் பசிப் பிணி நீங்கவில்லை என்கின்றன பேய்கள்.

" அகளங்கன் நமக்கிரங்கான் அரசர்இடும்
திறைக்கருள்வான் அவன்றன் யானை
நிகளம்பூண் டனவடியேம் நெடும்பசியால்
அறவுலர்ந்து நெற்றுய் அற்றேம்."[73]

[அகளங்கன் - முதற் குலோத்துங்கன் ; அ + களங்கன் - குற்ற மற்றவன் ; திறை - கப்பம் ; நிகளம் - யானை கட்டும் சங்கிலி ; அற்றேம் - அழிந்தேம் ]

என்பது கவிஞர் காட்டும சொல்லோவியம். தம்முடைய மூக்கின் அருகே பிணநீர் நாறுவதாலும, புலால் மணம் வீசுவதாலும், உதடுகள் துடிக்கும்படி ஈக்கள் மொய்ப்பதாலும் அவற்றை நன்னிமித்தங்களாகக் கொண்டு உயிர் வாழ்ந்திருப்பதாக உரைக்கின்றன. அப் பேய்கள்.[74]

அவ்வமயம் இமயத்தினின்றும் போந்த முதுபேயும் தான் கலிங்க நாட்டின் வழியாக வருங்கால் ஆண்டுக் கண்ட தீநிமித் தங்களைக் கூறுகின்றது களிறுகட்குக் கொம்பு முறிதல, பிடிகட்கு மருப்பு முளைத்தல், ஒளி வீசி எரியும விளக்குகள் கறுத்து எரிதல் பருவ முகிலகள் செங்குருதியினைப் பெய்தல்,[75] முரசங்கள் தாமே முழங்குதல், இரவில் வானவில் தோன்றுதல், ஊரிலுள்ள இல் லங்களில் கோட்டான்கள் தோன்றுதல், நரிகள் ஊளையிடுதல், வேள்வித் தீ சுடலைத்தீபோல் நாறுதல்,[76] பூ மாலைகள் புலால் நாற்றம் வீசுதல, இரத்தின மாலைகள் ஒளியிழத்தல், ஓவியங் களில் வியர்வை நீர் தோன்றுதல், தடாகங்களில் சுரக்கும் நீர் செங்குருதிபோல் தோன்றுதல்[77] ஆகியவற்றைத் தான் கண்ட தீநிமித்தங்களாகக் கூறுகின்றன. அவற்றைக் கேட்ட காளி தேவி சோதிடப் பேய் கனவிலும் நனவிலும் கண்டனவற்றைக் கூறி குலோத்துங்கனால் ஒரு பரணிப்போர் நடைபெறப் போவதாக உரைக்கின்றாள். பேய்கள் அவற்றைக் கேட்டு மகிழ்ச்சியால குதித்துக் கூத்தாடுகின்றன.

73. தாழிசை-218.
74. தாழிசை-219.
75. தாழிசை-222.
76. தாழிசை-223.
77. தாழிசை-224.

**கலிங்கப் பேயின் வருகை ;** குலோத்துங்கனால் ஒரு பரணிப் போர் உண்டு என்று கூறிய தேவி அக் குலோத்துங்கனின் பெருமையைக் கூறுகின்றாள். இந்நிலையில் ஒரு பேய் ஓடோடியும் வந்து தான் நேரில் கண்ட கலிங்க நாட்டில் மூண்ட போரை எடுத்துரைக்கின்றது. கலிங்க வீரர்களின் குருதியை 'டானிக்' காகப்பருக்கச் செய்யுமாறு கூவுகின்றது. இந்த இடத்திலுள்ள சில தாழிசைகள் பன்முறை படித்து இன்புறத்தக்கவை.

"உணங்கல் வயிறு குளிர
உவந்து பருக பருக
கணங்கள் எழுக எழுக
கணங்கள் எழுக எழுக."[78]

[உணங்கல்-வற்றுதல்; பருக-பருகும்பொருட்டு; கணங்கள்-பேய்க் கூட்டங்கள் (விளி)]

"வயிறுகள் என்னிற் போதா
வாய்களோ போதா பண்டை
எயிறுகள் என்னிற் போதா
என்னினும் ஈண்டப் போதும்."[79]

[ஈண்டுதல்-விரைதல்; போதும்-செல்வோம்]

"சிரமலை விழுங்கச் செந்நீர்த்
திரைகடல் பருக லாகப்
பிரமனை வேண்டிப் பின்னும்
பெரும்பசி பெறவும் வேண்டும்."[80]

[சிரம்-தலை ; செந்நீர்-குருதி]

என்று கலிங்கப்பேய் தந்த செய்திகள் தம் காதுகளில் பட்டதும் அப்பேய்கள் களிப்பின் மிகுதியால் பிணங்களைத் தின்றனபோல் உடல் பூரித்து, ஒன்றன்மேல் ஒன்று விழுந்து "ஓகை சொன்ன பேயின் வாயை ஓடி முத்தம் உண்ணுமே."[81] சில பேய்கள் தங்கள் கையிலுள்ள குழவிகள் நிலத்தில் விழும்படித் தங்கள் கைகளைத் தட்டித் துணங்கைக் கூத்தாடும் ; வள்ளைப் பாட்டுக் களைப் பாடி ஆடவருமாறு ஏனைய பேய்களை அழைக்கும்.[82]

78. தாழிசை-303.
79. தாழிசை-305.
80. தாழிசை-306.
81. தாழிசை-308.
82. தாழிசை-309.

" எனுஉ ரைத்த தேவி வாழி
வாழி யென்று வாழ்த்தியே
கனுஉ ரைத்த பேயி னைக்க
ழுத்தி னிற்கொ டாடுமே "[83]

[எனு-குலோத்துங்கன் காஞ்சியில் வந்து தங்கின செய்தியை; கொண்டு-(கட்டிக்) கொண்டு (இடைக்குறை)]

என்று கவிஞர் தேவியை வாழ்த்தியதையும் கனுத்திறம் உரைத்த கணிதப்பேய்களின் கழுத்தைக் கட்டிக்கொண்டு களிப்பினுல் விளையாடியதையும் காட்டுகின்றுர்.

**கூளி கூறியவை:** கலிங்கப் போரைக் கூறுமாறு கேட்ட காளி தேவிக்குக் கலிங்க நாட்டினின்றும் வந்த பேய் முதலில் போர்க் காரணத்தை எடுத்துரைக்கின்றது. குலோத்துங்கன் பாலாற்றங் கரைக்குப் பரிவேட்டையாடச் செல்லல், காஞ்சியில் தங்கினமை போன்ற செய்திகளைக் கூறியும், கலிங்கநாட்டை ஆண்ட அனந்த பன்மன் திறை கொடாததால் போர் நிகழ்ந்தமை கூறியும் முதற் பொழிவின் பொழுதே போரின் காரணத்தைக் குறிப்பிட்டேன். அதனை ஈண்டு நினைவுகூர வேண்டுகின்றேன். வேட்டையாடச் சென்ற செய்தி காளியின் வாய்மொழியாகக் கூறப்பெறுகின்றது. ஈண்டு நயமான ஒரு காட்சியை மட்டிலும் கூற விரும்புகின்றேன். வேட்டம்மீது செல்லும் மன்னன் நால்வகைப் படையும் அரசரும் பிறரும் சூழக் களிறூர்ந்து செலலுகின்றுன். இக் காட்சியைத் தெருவின் இருமருங்கும் மகளிர் திரண்டு நின்று காண்கின்றனர். இதனைக் கவிஞர்,

" எங்குமுள மென்கதலி எங்குமுள தண்கமுகம்
எங்குமுள பொங்கும் இளநீர்
எங்குமுள பைங்குமிழ்கள் எங்குமுள செங்குமுதம்
எங்குமுள செங்க யல்களே."[84]

[கதலி-தொடைகளாகிய வாழை; கமுகு-கழுத்துக்களாகிய பாக்கு மரம்; இளநீர்-கொங்கைகள்; குமிழ்-மூக்குகளாகிய குமிழம் பூக்கள், குமுதம-வாயிதழாகிய செவ்வாம்பல; கயல-கண்களாகிய மீன்கள்]

என்று அழகுற எடுத்தோதுவர். யாண்டுத் திரும்பினும் அழகிய மகளிரே காட்சியளித்து நின்றமையின் அவர்களையே கூறுமல,

83. தாழிசை-310.
84. தாழிசை-295.

அவர்களின் எழிலுறுப்புக்களாகிய தொடை, கழுத்து, கொங்கை, வாயிதழ், கண் என்பவற்றையே கூற விரும்பும் கவிஞர் அவற்றையும் எடுத்துரைக்காமல், வாழை, பாக்குமரம், இளநீர், குமிழம்பூ, செவ்வாம்பல் மலர், மீன் என்ற அவற்றின் உவமைப் பொருள்களையே காட்டுகின்றார். இங்ஙனம் மகளிரின் எழிலையும் அவரது மிகுதியையும் புலப்படுத்திய கவிஞரின் கற்பனைத் திறம் மகிழத் தக்கது. கலிங்க நாட்டின்மீது கருணாகரன் தண்டெடுத்துச் சென்ற செய்தியைக் கூளி காளிக்கு எடுத்துரைக்கும் வாயிலாக நாம் அறிகின்றோம். போரின் விவரங்களையும் அதே கூளி விரித் துரைக்கின்றது. இப்பகுதியில் வீரச்சுவை விஞ்சியிருத்தலை அடுத்து நிகழ இருக்கும் பொழிவில் காட்டுவேன்.

**போர்க்களக் காட்சிகள்:** கலிங்கப் பேயின் வேண்டுகோளுக் கிணங்கி காளிதேவி பேய்க்கணங்கள் சூழப் போர்க்களத்திற்கு ஏகுகின்றாள். அங்குள்ள பல்வேறு காட்சிகளைக் காட்டுகின்றாள் அன்னை. இவ்விடத்தில் ஒரு முக்கிய செய்தியை வற்புறுத்த விரும்புகின்றேன். வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத் தன்மையை எடுத்துக் கூறுவதே கவிதையின் நோக்க மாகும். அதன் தலைமைப் பண்பு அஃது உணர்த்தும் உண்மை யில் உள்ளது. மனித அநுபவத்திலும் இயற்கையிலும் நாம் சாதா ரணமாகக் காணாத எழிலையும் ஆழ்ந்த உண்மைகளையும் அது காட்டுகின்றது நம்மில் ஒரு சிலருக்குக் கவிதையுணர்வும் உட் காட்சியும் (Insight) ஓரளவு அமைந்துள்ளன. ஆனால், இவர் களுள் பெரும்பாலோரிடம் இத்தகைய கவிதைத் திறன் சாதா ரண வாழ்க்கையின் இருப்பு நிலைகளால் நெருக்குண்டு அன்றாட வாழ்க்கையின் கூறுகளாகவுள்ள உலோகாயதக் கவர்ச்சிகளால் குன்றச் செய்யப்பெற்று நசுக்கப்பெறுகின்றது. எனினும், உண்மைக் கவிஞனிடம் உலகப் பொருள்களின் அழகினையும் ஆழ்ந்த உண்மையினையும் காணுந்திறன் ஈடு எடுப்பற்ற அளவி லுள்ளது; அன்றியும், அவனிடம் தான் காண்பனவற்றையும் கேட்பனவற்றையும் தெளிவாக வெளியிட்டு விளக்கம் கூறும் திறனும் அமைந்து கிடக்கின்றது இந்த விளக்கத்தைப் படிக் கும் நம்முடைய கற்பனையும் ஒத்துணர்ச்சியும் துடிப்புப் பெற்று அவற்றை அக் கவிஞனுடன் சேர்ந்துக் காணவும் உணரவும் செய்துவிடுகின்றது. இக்கருத்துக்களை அடிப்படையாக அமைத் துக்கொண்டு சயங்கொண்டார் கூறும் ஒரு சில உண்மைகளைக் காண்போம்.

விருந்தினரை உபசரிக்கும் பண்பு தமிழரின் தலையாய பண்பு ஆகும். விரும்பி வந்த விருந்தினரை வெளியில் வைத்து விட்டு

அமுதமாக இருப்பினும் தனித்துண்ணும் வழக்கம் தமிழரிடம் இல்லை என்று கூறுவர் வள்ளுவப் பெருந்தகை. அவரே,

" செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு."[85]

என்று முகமலர்ச்சியையும் விருந்தோம்பும் பண்பினையும் பாராட்டுவர். கலிங்கப் போரில் சில வீரர்கள் கடமையுணர்ச்சியுடன் போர்புரிந்து களிப்புடன் உயிர்துறந்தமையால் அவர்களின் இறந்த உடல்களும் முகமலர்ச்சியுடன் விளங்கின. இதற்குக் கவிஞர் கூறும் புனைந்துரை விருந்தோம்பும் மேலோரின் உயர் பண்பினை விளக்கி நிற்கின்றது. இவர்களின் உடலங்களைப் பருந்துக்களும் கழுகுகளும் கொத்தித் தின்கின்றன. தாம் இறந்த பிறகும் விருந்தோம்பும் பேற்றினைப் பெற்றோமே என்று வீரர்கள் முகமலர்ச்சியுடன் காணப்பெறுவதாகக் கூறுவது கவிஞரின் புனைந்துரை; கற்பனைச் சிறப்பு. இக்காட்சியைச் சயங்கொண்டார்,

" விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண
மேன்மேலும் முகமலரும் மேலோர் போலப்
பருந்தினமும் கழுகினமும் தாமே யுண்ணப்
பதுமமுகம் மலர்ந்தாரைப் பார்மின் பார்மின்."[86]

[வறியவர்-ஏழையர்; மேலோர்-இல்லறத்தில் உயர்ந்தோர்; பதுமம்-தாமரை]

என்று காளியின் வாய்மொழியாகக் கவிஞர் விளக்குவதைக் கண்டு மகிழ்க.

அடுத்து, உலோபிகளின் தன்மையைக் காட்டுகின்றார் கவிஞர். இன்றும் உயிரை விட்டாலும் உடைமையை விடாத உலோபிகளைக் காண்கின்றோமன்றோ? ஒரு சில மூடர்கள் அவர்களைச் சுற்றிக் கொண்டிருப்பதையும் பார்க்கின்றோம். போர்க்களத்தில் குற்றுயிராகக் கிடக்கும் வீரர்களின அருகே நரிக் கூட்டங்கள் தங்கியுள்ளன. தம் உயிர் போகுமளவும் அந்நரிகளுக்குத் தம் உறுப்புக்களை அவ்வீரர்கள் தருவதில்லை.

" சாமளவும் பிறர்க்குதவா தவரை நச்சிச்
சாருநர்போல் வீரருடல் தரிக்கும் ஆவி
போமளவும் அவரருகே இருந்து விட்டுப்
போகாத நரிக்குலத்தின் புணர்ச்சி காண்மின்."[87]

[நச்சி-விரும்பி; சாருநர்-அடைவோர்; தரித்தல்-நிலைபெற்றிருத்தல்; ஆவி-உயிர்; புணர்ச்சி-கூட்டம்]

85. குறள்-86. 86 தாழிசை-477. 87. தாழிசை-478.

என்ற தாழிசையில் இந்நிலை காட்டப்பெற்றிருத்தல் காண்க. இதனைப் புறத்திணை இலக்கணம் 'பேய்நிலை' என்று கூறும். "ஏமச் சுற்ற மின்றிப் புண்ணோர், பேஎயோம்பிய பேஎய்ப் பக்கமும்" என்று தொல்காப்பியத்தில் குறிப்பிட்டிருப்பதையும்,[88] "ஓம்புத லாவது, அவன் உயிர் போந்துணையும் ஓரியும் பேயும் நரியும் கடிந்து அவன் தலையைக் கோடலஞ்சிப் பாதுகாத்தலாம்" என்ற அதன் நச்சினார்க்கினியர் உரையையும் கண்டு மகிழ்க.

விலைமகளிரின் தன்மைகளை விளக்கப் புகுகின்றார் கவிஞர். யானை உயிருடன் இருந்த அளவும் மழைபோல் பொழியும் மதநீர்ப் பெருக்கை நச்சி வண்டுகள் அந்த யானையைச் சூழ்ந்து கொண்டிருந்தன. யானையின் உயிர் நீங்கியதும் அதனை வெறுத்துத் தேவர்கள் பொழிந்த பூமழைமேல் பாய்ந்தன. இந்த வண்டுகளை, பொருளுள்ளவளவும் ஒருவனைப் பற்றியிருந்து அப் பொருள் தீர்ந்தபின் வேறொருவனைப் பற்றும் விலைமகளிருடன் ஒப்ப நோக்குகின்றார் சயங்கொண்டார்

" மாமழைபோல் பொழிகின்ற தான வாரி
மறுத்துவிழும் கடகளிற்றை வெறுத்து வானோர்
பூமழைமேல் பாய்ந்தெழுந்து நிரந்த வண்டு
பொருட்பெண்டிர் போன்றமையும் காண்மின்,
காண்மின்."[89]

[தானம்-மதநீர்; வாரி-பெருக்கு; மறுத்து-ஒழித்து; கடம்-மதம்; நிரந்த-பரவிய]

என்பது கவிஞரின் சொல்லோவியம்.

மேற்காட்டப்பெற்றவை போன்ற காட்சிகளைக் கம்பன் காவி யத்திலும் காணலாம். பிராட்டியைத் தேடிக்கொண்டு சென்ற அநுமன் மகேந்திர மலையினின்றும் இலங்கை நோக்கித் தாவிச் சென்றபொழுது பேருருவம் கொண்டு நின்ற அவனது கால்கள் அழுந்தியதனால் ஏற்பட்ட பல நிகழ்ச்சிகள் இத்தகையவை. எடுத்துக்காட்டாக ஒன்றைக் காட்டுவேன். அநுமனது அடிகள் அழுந்துவதனால் அம்மலைக் குகைகளில் உறங்கிக் கொண்டிருந்த சிங்கங்கள் யாவும் அவற்றினின்றும் வெளியேற மாட்டாதனவாய் நசுங்கிக் குருதியைக் கக்கிக்கொண்டு இறந்தன; அங்குள்ள பறவையினங்கள் அம்மலை நெருங்குவதைக் கண்டு பேரிரைச்ச

88. தொல். பொருள். புறத்திணை-நூற் 24.
89. தாழிசை-479.

விட்டுக் கொண்டு கதிரவன் ஒளி மறையும்படி விசும்பு முழுவதும் பரவிப் பறந்தன. இதனைக் கம்பநாடன்,

> " புகலரும் முழையுள் துஞ்சும்
> பொங்குளைச் சீயம் பொன்றி
> உகலரும் குருதி கக்கி
> உள்ளுற நெரிந்த; ஊழின்
> அகலிரும் பரவை நாண
> அரற்றுறு குரல வாகிப்
> பகலொளி கரப்ப வானை
> மறைத்தன பறவை எல்லாம்."[90]

[புகலரும்-நுழைவதற்கு அரிய; முழை-குகை; பொங்கு உளை-மிகுதியான பிடரி மயிர்; உகலரும்-சிந்துதல் இல்லாத; குருதி-இரத்தம்; நெரிந்த-நொறுங்கின; ஊழின்-பிரளயகாலத்தில்; பரவை-கடல்; அரற்றுறு-கதறுகின்ற; கரப்ப-மறைக்க]

என்று காட்டுவன். இங்ஙனமே சேது கட்டுங்காலத்கில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளினுல் இத்தகைய காட்சிகளைக் காணலாம். காற்றுடி போலத் திரியும் வானரக் கூட்டம் தம் கையினுல் மலைகளைப் பேர்த்து எடுத்துக் கடலில் வீசி எறிகின்றன. அப்போது அம் மலையிலுள்ள பெரும் பாம்புகள் மறங்கிளர் யானைகள் தம் வயிற்றில் கிடக்க உணர்வின்றி வாய்திறந்த வண்ணம் உறங்கிக் கிடக்கின்றன. இதனைக் கவிஞன்,

> " கறங்கெனத் திரியும் வேகக்
> கவிக்குலம் கையின் வாங்கிப்
> பிறங்கிருங் கடலிற் பெய்த
> போழ்தத்தும் பெரிய பாந்தள்
> மறங்கிளர் மான யானை
> வயிற்றின வாக வாய்சோர்ந்(து)
> உறங்கின ; கேடுற் றுலும்
> உணர்வரோ உணர்வி லாதார்."[91]

[கறங்கு-காற்றுடி; கவிக் குலம்-வானரக் கூட்டம்; பாந்தள்-பாம்பு.]

என்ற பாடலில் சித்திரித்துக் காட்டுவன். உணர்ச்சியில்லாதவர்கள் எவ்வளவு கேட்டினை அடைந்தாலும் அவர்களிடம்

---

90. கம்பரா. சுந்தர. கடல்தாவு. 4.
91. கம்பரா. யுத்த. சேதுபந். 20.

உணர்ச்சி எழுமோ என்ற வினவை எழுப்புகின்றான். இத்தகைய உணர்ச்சியற்ற 'வியக்திகளை' இவ்வுலகில் நாம் கண்கூடாகக் காண்கின்றோ மன்றோ?

இனி, பரணிப் போர்க்களத்தில் அடுத்த காட்சியைக் காண்போம். குருதி வெள்ளத்தில் மதயானைகள் கொடிச் சீலைகளுடன் விழுந்து கிடக்கின்றன. இக்காட்சியைக் கற்புடைய பெண்டிர் தம் கணவருடன் உடன் கட்டையேறிக் கனல் அமளியில் கிடக்கும் நிலையுடன் ஒப்பிட்டுக் காட்டுகின்றார் கவிஞர்.

" சாய்ந்துவிழும் கடகளிற்றி னுடனே சாய்ந்து
தடங்குருதி மிசைப்படியும் கொடிகள் தங்கள்
காந்தருடன் கனலமளி யதன்மேல் வைகும்
கற்புடைமா தரையொத்தல் காண்மின்
காண்மின்."[92]

[குருதி-செந்நீர்; மிசை-மேலே; கொடிகள்-அரசர்க்குரிய கொடிகள்; காந்தர்-கணவர்; அமளி-படுக்கை; வைகும்-தங்கும்]

என்பது கவிஞரின் சொல்லோவியம்.

இன்னொரு காட்சி: மற்றொரு கற்புடைய பெண் தன் கணவனைத் தேடிக் களத்திற்கு வருகின்றாள். கணவன் குற்றுயிராகத் தரையில் கிடக்கின்றான். தரை மகளும் ஒரு பெண்ணாதலின் அவள் தன் கணவனின் உடலைத் தாங்கலாகாதெனக் கருதி, அவள் அவனுடைய உடலைத் தன் மடியில் கிடத்திக் கொள்கிறாள். கணவன் உயிர் விண்ணோடு புக்கபோது விண்ணாட்டு அரமகளிர் அவனுயிரைப் புணரக் கூடும் என்று கருதி கணவன் உயிர் போகும்பொழுதே தன்னுயிரையும் ஒரு சேர விடுகின்றாள் அக் குலமகள். இக் காட்சியைச் சயங்கொண்டார்,

" தரைமகள்தன் கொழுநன்றன் உடலந் தன்னைத்
தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்டு
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்."[93]

[தரைமகள்-மண்மகள்; கொழுநன்-கணவன்; தாங்கி-அணைத்து; அர மகள்-தெய்வப் பெண்; ஆவி-உயிர்; ஒக்க-ஒரு சேர]

என்று மிக அழகான சொல்லோவியத்தால் காட்டுகின்றார். இது பன்முறை படித்து இன்புறத்தக்க அற்புதப் பாடலாகும்.

92. தாழிசை-480 93. தாழிசை-483.

**கூழடுதல்:** கூழடுங் காட்சி அற்புதமானது. காளிதேவியின் கட்டளைப்படிக் கூளிகள் குருதி நீரில் குளித்துக் கூழடத் தொடங்கு கின்றன. கூளிகள் காலைக் கடன் கழிப்பதையே அற்புதமாகக் காட்டுகின்றார் கவிஞர். அவை யானைகளின் மருப்பால் பல்லைத் துலக்கி அவற்றின் பழு எலும்பால் நாக்கை வழித்துக் கொள்ளு கின்றன.[94] கூரிய அம்புகளால் நகங்களைக் களைந்து யானையின் மத நீராகிய எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு வெண் மூளை யாகிய களிமண்ணைக் கொண்டு நன்றாகத் தேய்த்துக் குருதித் தடாகத்தில் நீந்தி விளையாடுகின்றன.[95] நீராடிய பின்னர் பிணத்துகில் உடுத்திப் பல்வேறு அணிகலன்களைப் புனைந்து கொள்ளுகின்றன.[96]

கூழடுதல் தொடங்குகின்றது. பருந்து நிழற் பந்தலின் கீழ் யானைப் பிணங்களின்மீது சமயலறை அமைக்கப் பெறு கின்றது.[97] யானையின் மத நீரால் நிலத்தை மெழுகி முத்துத் தூளால் கோலமிட்டு யானைத் தலைகளை அடுப்பாக அமைத்துக் கொள்ளுகின்றன.[98] யானைகளின் வயிறுகளாகிய பானைகளை அடுப்பிலேற்றி[99] அதில் வீரர்களின் இறைச்சி முதலியவற்றைப் பெய்கின்றனர்.[100] பானைகளில் குதிரைகளின் குருதி உலை நீராக வும், அவற்றின் வெண் பற்கள் வெங்காயமாகவும், வீரர்களின் நகங்கள் உப்பாகவும் பயன்படுகின்றன.[101] இறந்துபட்ட வீரர் களின் அம்புகள், வேல்கள், கோல்கள் முதலியவற்றை விற காகக் கொண்டு வீரர்களின் சினத் தீயால் அடுப்பு மூட்டப் பெறுகின்றது.[102] கலிங்க வீரர்களின் பற்களாக அரிசியை வெண் முரசங்களாகிய உரலகளில் சொரிந்து யானைக் கோடு களாகிய உலக்கைகளால நன்கு குற்றி, சல்லவட்டம் என்னும் சுளகால் புடைத்து அம்பருத் தூணியால் அளந்து உலையி லிட்டுக் கூழ் காய்ச்சப்பெறுகின்றது[103] அரிசி தீட்டப் பெறுங் கால் தேவியின் புகழையும் குலோத்துங்கன் புகழையும் வண் டையர்கோனின் புகழையும் வள்ளைப் பாட்டுக்களால் பாடிப் போற்றுகின்றன பேய்கள்.[104] கூழடுங்கால் அது பானையில் பிடித்துக் கொள்ளாதிருக்கும் பொருட்டுப் பேய் மடையர் இறந்து

94 தாழிசை-505.
95. தாழிசை-506, 507
96. தாழிசை-509, 510, 515.
97. தாழிசை-516.
98. தாழிசை-516.
99. தாழிசை—518.
100. தாழிசை-519.
101. தாழிசை-520, 521.
102. தாழிசை-522, 523, 545.
103. தாழிசை-524, 516.
104. தாழிசை-527-544.

பட்ட வீரர்களின் கைகளைத் துடுப்பாகக் கொண்டு நன்கு துழாவு கின்றனர்.[105] நல்ல பதம் வந்ததும் குதிரைகளின் இறைச்சி யாகிய துணியைப் பிடித்து அடுப்பினின்று கூழ்ப்பானை மெது வாக இறக்கப்பெறுகின்றது.[106]

**கூழுண்ணல் :** பேய்கள் கூழுண்ணும் காட்சி மிக அழகாகச் சித்திரிக்கப்பெறுகின்றது. யானைகளின் மத்தகங்களில் குருதிப் பேராற்றில் நீர்முகந்து குளிர வைத்துப் பருகும் நீராகப் பயன் படுத்தப்பெறுகின்றது.[107] வேழங்களின் வால்களைக் கொண்டு தரையைப் பெருக்கி, குருதி நீர் தெளித்து, உண்ணும் இடம் அமைக்கப்பெறுகின்றது[108] மாண்ட மன்னர்களின் கேடகங்கள் மண்டையோடுகள் உண்கலங்களாகவும்,[109] மடிந்து வீழ்ந்த மன்னர்களின் கேடகங்கள் பொற்பாத்திரங்களாகவும், அவர் களின் வெண் கொற்றக் குடைகள் வெள்ளிப் பாத்திரங்களாக வும், வேழச்செவிகள் பரிமாறும் பாத்திரங்களாகவும்[111], வேல் பாய்ந்த வீரர்களின் தலைகள் அகப்பைகளாகவும்[112] பேய் மடை யர்கள் பயன் படுத்துகின்றனர். அன்னையருளால் உயர் பதவி பெறும் வீரர்களின் விழிக்கனல் பகல் விளக்காகவும், நிணம் பாவாடையாகவும் கொள்ளப்பெறுகின்றன.[113]

மணலூர்ப் போர் நடைபெற்றபொழுது சமைத்துப் படைத்துப் பழகிய பேய் மடையர்கள் கலிங்கப்போரில் பரிமாறும் பணியில் ஈடுபடுகின்றனர்[114]. கூழுண்ணுங்கால் பல்வேறு வகைப் பேய் களைச் சந்திக்கின்றோம். பார்ப்பனப் பேய்கள், சமணப் பேய்கள் பௌத்தப் பேய்கள், பார்வைப் பேய்கள், குருட்டுப் பேய்கள், ஊமைப் பேய்கள், செவிட்டுப் பேய்கள், சூற்பேய்கள், மூடப் பேய்கள், நோக்கப் பேய்கள், கூத்திப் பேய்கள், கனுத்திறம் உரைத்த பேய்கள், கணக்கப் பேய்கள் இவை கூழுண்ணும் காட்சி[115] நமக்கு இலக்கியச் சுவையாக அமைகின்றது நகைச் சுவை தரும் ஒருசில காட்சிகளைக் காட்டுவேன்.

ஒரு குருட்டுப் பேயின் கூழ் நிறைந்த கலத்தைக் கள்ளப் பேய் ஒன்று களவாடிக் கொள்ளுகின்றது ; அதனுல் அப்பேய்

---

105. தாழிசை-548.
106. தாழிசை-552.
107. தாழிசை-556.
108. தாழிசை-557.
109. தாழிசை-558.
110. தாழிசை-559.
111. தாழிசை-560.
112. தாழிசை-563.
113. தாழிசை-561.
114. தாழிசை-564.
115. தாழிசை-565-577

கையால் நிலந் தடவிக் கலத்தைக் காணாது கதறியழுகின்றது. இதனைப் பந்தி விசாரிப்போர் கண்டு,

" ஊணு தரிக்கும் கள்ளப்பேய்
ஒளித்துக் கொண்ட கலந்தடவிக்
காணு தரற்றும் குருட்டுப்பேய்
கைக்கே கூழை வாரீரே."[116]

[ஊண்-உணவு; ஆதரிக்கும்-ஆசைப்படும்; கலம்-பாத்திரம்; அறற்றல்-கதறியழல் ]

என்று பேய்க்குக் கையில் கூழை வார்க்குமாறு கூறுகின்றனர். செட்டி நாட்டுப் பகுதிகளில் நகரத்தார் அளிக்கும் விருந்துகளில் பணியாற்றும் பந்தி விசாரிப்போர் போல பேய் விருந்திலும் அத் தகையோர் இருந்தனர் போலும் !

ஓர் ஊமைப்பேய் உண்ணும் காட்சி நகைச்சுவை தருகின்றது. வாய் பேச முடியாத அப்பேய் அதிகப் பசியோடு காணப்படு கின்றது. அது கலத்தில இட்ட கூழ் தனக்குப் போதாதென்றும், மேலும் தன் கைகளில் வார்க்குமாறும் கையால் சைகை காட்டு கின்றது. உடனே,

" பையாப் போடு பசிகாட்டிப்
பசலை நிறைந்த கூழ்காட்டிக்
கையால் உரைக்கும் ஊமைப்பேய்
கைக்கே கூழை வாரீரே."[117]

[பையாப்பு-துன்பம்; பதலை-தாழி]

என்று பந்தி விசாரிப்போரிடமிருந்து கட்டளை பிறக்கின்றது.

ஒரு மூடப்பேயின் அறிவற்ற செயல் நம்மை நகைக்க வைக் கின்றது. இப்பேயின் பாத்திரம் ஓட்டையாக இருந்தது. அதில் வார்க்கப்பெற்ற கூழ் ஒழுகியது. பாத்திரத்தில் ஓட்டையுள்ளதா என்பதைக் காண அப்பாத்திரத்தைத் திருப்பிப் பார்க்கின்றது. இதனால் பாத்திரத்தில் எஞ்சியிருந்த கூழும் கொட்டிப் போகின்றது. இதனைக் கண்டவர்கள்,

" பொல்லா வோட்டைக் கலத்துக்கூழ்
புறத்தே யொழுக மறித்துப் பார்த்து

116. தாழிசை-569.
117. தாழிசை-570.

எல்லாங் கவிழ்த்துத் திகைத்திருக்கும்
இழுதைப் பேய்க்கு வாரீரே."[118]

[பொல்லா-கெட்ட; மறித்தல்-தலை கீழாகத் திருப்பல்; இழுதை-அறிவற்றது]

என்று கட்டளையிடுகின்றனர். இங்ஙனம் பல காட்சிகள். கனவு கண்டுரைத்த பேய்க்கு இரட்டைப் பங்கு கூழ் கிடைக்கின்றது.

விருந்துண்டபிறகு தாம்பூலம் தரிக்கும் பழக்கத்தைப் பேய் களிடமும் காண்கின்றோம். குதிரைகளின் காதுகளாகிய வெற் றிலையையும், அவைகளின் கணைக்கால் பிளவுகளாகிய பாக்கை யும், கலிங்க வீரர்களின் கண்களிலுள்ள வெண்மணியாகிய சுண்ணும்பையும் கலந்து பேய்கள் தாம்பூலம் தரித்துக் கொள்ளு கின்றன.[119] தாம்பூலத்தை அதிகம் தின்று புரையேறின சில பேய்கள் பூதத்தின் தலை மயிரை மோந்து பார்க்கின்றன.[120] இதனால் துன்பம் தொலையும் போலும். பேய்களின் 'முதலுதவி' பாராட்டத்தக்கது.

**உண்ட களிப்பு:** பன்னெடு நாட்கள் பசியினால் வாடிக் கிடந்த பேய்கள் உண்டு வயிறு நிரம்பியதும் மகிழ்ச்சியால் மலைகள் கூத்தாடுவனபோல் கூத்தாடுகின்றன. சில பேய்கள் ஆடைகளை மேலே வீசிப் பாடி விளையாடுகின்றன.[121] இன்னும் சில குலோத்துங்கனின் வெற்றியைப் பாடிக் கொண்டு இரண்டு கைகளையும் வீசிக் கொண்டு ஆடுகின்றன [122] சில யானைகளின் வயிறுகளில் புகுந்தும், குருதி வெள்ளத்தில் வீழ்ந்தும் விளையாடு கின்றன.[123] சில தரையில் வீழ்ந்து புரண்டும் தலைவிரி கோலமாய் ஓடியும் ஆடுகின்றன.[124] சில பேய்கள்,

" பொன்னித் துறைவனை வாழ்த்தினவே
பொருநைக் கரையனை வாழ்த்தினவே
கன்னிக் கொழுநனை வாழ்த்தினவே
கங்கை மணாளனை வாழ்த்தினவே."[125]

[பொன்னி-காவிரி; பொருநை-தாமிரபரணி; கன்னி-கன்னியா குமரி]

118. தாழிசை-572.
119. தாழிசை-583.
120. தாழிசை-584.
121. தாழிசை-586.
122. தாழிசை-587.
123. தாழிசை-588.
124. தாழிசை-589.
125. தாழிசை-592.

எல்லாப் பேய்களும்,

> " யாவ ருங்களி சிறக்கவே; தருமம்
> எங்கு மென்றுமுள தாகவே ;
> தேவ நின்னருள்த ழைக்க வேமுனிவர்
> செய்த வப்பயன்வி ளைக்கவே."[126]

[களி-மகிழ்ச்சி; விளைக்க-உயிர்கட்கு நன்மை செய்வதாக]

> " வேத நன்னெறிப ரக்கவே யபயன்
> வென்ற வெங்கலிக ரக்கவே
> பூத லம்புகழ்ப ரக்க வேபுவி
> நிலைக்க வேபுயல்சு ரக்கவே."[127]

[பரக்க-எங்கும் பரவுக; கலி-துன்பம்; கரக்க-மீண்டும் தலை காட்டாது மறைக; நிலைக்க-நிலைபெறுக; புயல்-மழை]

என்று சொல்லி வாழ்த்துகின்றன.

இறுவாய் : இங்ஙனம் 'இல்லது இனியது நல்லது' என்று புலவரால் படைத்துக் காட்டப்பெறும் அகத்திணை உலகம் போலவே[128] சயங்கொண்டாரும் தம் கற்பனையாற்றலால் புதிய தொரு பேய்கள் உலகத்தைப் படைத்துக் காட்டுகின்றார். மனித உலகினை ஊன்றுகோலாகக் கொண்டு கவிஞர் பேசுவதால் மக்கள் உலகத் தேவைகளே பேய்கள் உலகத் தேவைகளாகக் காணப்பெறுகின்றன. பேய்களின் வாழ்க்கையும் அவைகளின் பழக்க வழக்கங்களும், நடையுடை பாவனைங்களும் நம்முடை யவை போல் காட்டப்பெறுகின்றன. கவிஞர் அருளிய காவி யமும் மக்கள் உலகைச் சார்ந்த நமக்காகவே என்பதையும் அறி கின்றோம். மக்கள் உலகினை ஊன்றுகோலாகக் கொண்டு வாழும் நம்மைத் தவிர யார்தான் அதனைச் சுவைத்துப் பயன் பெற முடியும்? என்று கூறி அமைகின்றேன் வணக்கம்.

126. தாழிசை-595.
127. தாழிசை-596.
128. இறையனுர் 'களவியல்-நூற் 1 இன் உரை.

# 4. வரலாற்றுக் குறிப்புக்கள்

நான்காம் பொழிவு

*தமிழன்பர்களே! தாய்மார்களே!*

வணக்கம். இன்று நடைபெறுவது கலிங்கத்துப் பரணி பற்றிய நான்காம் சொற்பொழிவு. சென்ற சொற்பொழிவில் நாம் பேய்களின் உலகில் உலவினோம். பேய்களின் உலகினையும் மக்கள் உலகினையும் இணைத்துக் காட்டும் கவிஞரின் மதி நுட்பத்தை எடுத்துக் காட்டினேன். காளிதேவியின் திருக்கோயிலே மக்கள் உலகமும் பேய்களின் உலகமும் சந்திக்கும் இடமாக அமைத்துள்ள கவிஞரின் கற்பனைத் திறனை எடுத்து விளக்கினேன். பெரும்பாலும் இங்கு வரலாற்றுக் குறிப்புக்களாகக் கிடைக்கும் செய்திகள் யாவும இமயத்தினின்றும் போந்த முதுபேயின் மூலமாகவும், அன்னை காளி தேவியின் வாயில் வைத்தும் நுவலப்பெறுகின்றன. சில செய்திகளைக் கவிஞரின் கூற்றாலும், கலிங்க வேந்தனின் அமைச்சனும் படைத் தலைவனுமான எங்கராயனின் கூற்றாலும் அறிகின்றோம்.

**வரலாற்றின் இன்றியமையாமை:** அன்பர்களே, இவ்விடத்தில் ஒரு முக்கிய குறிப்பொன்றை வற்புறுத்த விரும்புகின்றேன். வரலாற்று ஆராய்ச்சி ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு மிக மிக இன்றியமையாதது என்பதே அது. முன்னோர் ஒழுகிக் காட்டிய உயர்ந்த நெறிகளையும், அன்னோர் கொண்டிருந்த உயர்ந்த பண்பு களையும், பின்னோர்க்கு எடுத்துக் காட்டுவது வரலாற்று நூல் என்பதை நீங்கள் அறிவீர்கள். 'வையத்துள் வாழ் வாங்கு வாழ் வதற்கு' வழியமைத்துத் தருவது வரலாற்றுத் துறையாகும். இது கருதியே நாகரிகம் எய்தியுள்ள மேற்புல அறிஞர்கள் தம் நாட்டின் உண்மை வரலாறுகளை ஆய்ந்து பல நூல்கள் வாயிலாக வெளி யிட்டு வருகின்றனர்; ஆய்வுக் கட்டுரைகளாக வடித்துப் பருவ இதழ்களின் வாயிலாகப் பல்லோர் அறியச் செய்கின்றனர். இவற்றால் அந்நாடுகள் எய்தும் பயன்கள் வெள்ளிடைமலையாகும்.

மேனாடுகளில் எத்தனையோ விதமான வரலாற்று நூல்கள் நாடோறும் வெளி வந்து கொண்டிருப்பதைக் காணத்தான் செய்கின்றோம். அவை அவர்களுடைய தாய் மொழியில் வெளியிடப்பெறுவதாலும், கல்வியறிவுள்ளவர்கள் அனைவரும் அவற்றைப் படித்து வருவதாலும் அந்நாட்டு மக்களிடையே முன்னேற்றத்தைக் காண முடிகின்றது. எனவே, ஒரு நாட்டு மக்களுடைய வரலாறு அந்நாட்டு மக்களின் தாய் மொழியில் வெளியிடப்பெற்றால், அஃது அன்னோரின் அறிவு வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் பல்லாற்றானும் உறுதுணை புரியும் என்பதற்குச் சிறிதளவும் ஐயம் இல்லை. நாடு விடுதலை பெற்ற பிறகு எம்மருங்கும் மொழிப்பற்று ஓங்கி வரும் இற்றை நாளில் இதனை வற்புறுத்துவது கொல்லத் தெருவில் ஊசி விற்க முயலும் செயலோடொக்கும் என்பதனையும் குறிப்பிட விரும்புகிறேன்.

**வரலாற்று மூலங்கள்** ஒரு நாட்டு வரலாற்றை அறிந்துகொள்வதற்கு அந்நாட்டுக் கல்வெட்டுகள், செப்பேடுகள், கோயில்கள், அங்குக் காணப்பெறும் சிற்பங்கள், நாணயங்கள், இலக்கியங்கள் ஆகியவை மூலங்களாக அமைகின்றன என்பதனை நாம் அறிவோம். அவற்றுள் காணக் கிடக்கும் ஒரு சில குறிப்புக்களைக் கொண்டே வரலாற்று ஆசிரியர்கள் வரலாற்று நூலை வரைவர். அக்கால மக்களின் வாழ்க்கை, நாகரிகம், பண்பாடு, வாணிகம் முதலிய பல்வேறு செய்திகளை அந்நூலின் மூலம் அறியலாம். 'கலிங்கத்துப் பரணி'யிலிருந்து அக்கால சோழர் வரலாறு, மக்கள் வாழ்க்கை ஆகியவற்றை அறிந்துகொள்ளலாம். இச் செய்திகள் கல்வெட்டுக்கள் போன்ற மூலங்களால் அறியப்பெறும் செய்திகளால் வலியுறுகின்றன

"சோழ வளநாடு சோறுடைத்து" என்ற பழமொழியை அறிவோம். சோழ நாட்டில் பசியும் பட்டினியும் இன்றி வசியும் வளனும் பெற்று மகிழ்ந்தனர் மக்கள். அந்நாட்டு வளத்தை,

" ஒருபிடி படியும் சீரிடம்
எழுகளிறு புரக்கும் நாடு."[1]

என்று இலக்கியம் கூறுகின்றது. சைவமும் தமிழும் தழைத்தோங்கியது சோழர்கள் காலத்தில்தான். விண்ணை அளாவும் கோபுரங்கள அமைந்த கோயில்கள் எழுப்பப்பெற்றதும், சிற்பக் கலைகள் செழிப்புற்றதும் அவர்கள் காலத்தில்தான். அரசியல் அமைப்பில் பல்வேறு திருத்தங்கள் அமைக்கப்பெற்றமையும்,

1. புறம் - 40.

சாசனங்கள் எழுதுவதில் மெய்க்கீர்த்திகள் ஏற்பட்டமையும் இக் காலத்தில்தான். கலங்களின்மூலம் கடல் கடந்து கடாரம் முதலிய நாடுகட்குச் சென்று சைவத்தையும் தமிழையும் பரப்பிப் பல் வேறு செல்வங்களை ஈட்டியும், அரசர்களின் வெற்றிக் கொடியை நாட்டியும் ஈடிலாச் சிறப்புடனும் பெருமையுடனும் திகழ்ந்தது சோழர்காலம். வழக்காறற்று மங்கிபபோன தேவாரப் பாடல்கள் திரட்டப் பெற்றுத் திருமுறைகளாக வகுக்கப்பெற்றதும் இக்காலத் தில்தான். தமிழக வரலாற்றைப் படிப்போர் சோழர்காலம் பொற் காலம் எனத் திகழ்ந்தது என்பதனை அறிவர். இங்ஙனம் சோழர் காலம் பல்லாற்றுனும் ஏற்றமுற்று விளங்கியதற்குக் காரணம் என்ன ? கரிகாற் பெருவளத்தான் முதலிய சங்க காலச் சோழர் முதல் பிற்காலச் சோழர்களாகிய இராசராசன், இராசேந்திரன் முதலிய சோழர்வரை வாழ்ந்த மன்னர் பெருமக்களின் போராண் மையும், கலையுணர்ச்சியும், இறையன்பும், அறத்தை நிலைநாட்ட வேண்டும் என்ற ஆர்வமும், நாட்டு முன்னேற்றத்தில் அவர்கள் கொண்ட நாட்டமும் இன்ன பிற பண்புகளுமே இத்தகைய ஏற்றத்தை விளைவித்தன என்பதை நாம் அறிதல் வேண்டும்

**சோழர்காலச் செய்திகள் :** இனி, சோழர் வரலாற்றைப் பற்றிக் கலிங்கத்துப் பரணியால் அறியலாகும் செய்திகளைக் காண் போம். கலிங்கத்துப் பரணியிலுள்ள 'இராச பாரம்பரியம்'[2] என்ற பகுதியில் சோழர் குலமுறை தொடக்கம்முதல் கிளத்தப்பெறு கின்றது. கவிஞர் காவியத்தில் இதனைக் கூறும் முறை கலைத்திறம் மிக்கது. சுரகுரு என்பவன சோழ அரசர்களுள் ஒருவன். ஒரு சமயம் அவன் பேய் மகன் ஒருவனை யமன்பால் தூது அனுப்பி ஞன். அவன் தான் உண்பதற்காகச் சிரம் ஒன்றை அறுத்து வைத்திருந்தான். ஒரு பேய் அத்தலையைக் களவாடி உண்டு விட்டது. பேய்களின் தலைவியாகிய காளி தேவி அக் குற்றத்திற் காக அவனைத் தலையறுத்துத் தண்டித்தாள். அங்ஙனம் களவாடி யதற்குத் துணையாயிருந்தன சில பேய்கள். அவை யாவும் காளி தேவியின் சீற்றத்துக்கும் சுரகுருவின் ஒறுத்தலுக்கும் அஞ்சி ஒளித்துச் சென்றன. அவற்றுள் ஒரு முது பேய் இமயத்திற்கு ஓடிச்சென்று உய்ந்தது.[3] அந்த முது பேய் இமயத்தில் வாழ்ந்து வந்தபோது, கரிகாற் சோழன் வடவரசர்களை வென்று இமயம் வந்து தன் புலிக்கொடியைப் பொறிக்கின்ருன்.[4] அப்பொழுது இதிகாச முனிவர் நாரதர் அவன்முன் தோன்றுகின்ருர். அவர்

2. பாரம்பரியம்-இடைவிடாமல் வரும் முறைமை.
3. தாழிசை-157.
4. தாழிசை-178.

கரிகாலனை நோக்கி, "மன்னனே, பண்டைக்காலத்தில் பராசரர் புத்திரராகிய வியாசமுனிவர் பகர்ந்த பாரதக் கதையைக் கரிமுகக் கடவுள் தன் கொம்பினால் எழுதியதை நீ அறிவாயன்றோ? அங்ஙனமே, நான் சோழர் வரலாற்றை இப்போது உனக்குக் கூறு வேன். அதனை இமயமலையில் எழுதுவிப்பாயாக" என்று உரைக்க, கரிகாலனும் திருமால் முதல் முதற் குலோத்துங்கன் வரை நாரதர் கூறிய வரலாற்றை இமயத்தில் பொறிக்கின்றான்.[5] நாரதரும் தம் இருப்பிடம் ஏகுகின்றார். வரலாற்றுடன் இதிகாசச் செய்திகளும் கலந்து வருவதால் அதிலுள்ள செய்திகள் யாவும் உயர்வு நவிற்சியாகவும் கற்பனையாகவும் அமைந்துள்ளன இந்த வரலாற்றை இமயத்தில் வாழ்ந்த முதுபேய் கூறு வந்து காளிக்கு உரைப்பதாக அமைக்கின்றார் கவிஞர். இதுவே 'இராச பாரம்பரியப் பகுதி'யாகக் காவியத்தில் அமைந்துள்ளது.

'அவதாரம்' என்ற பகுதியில் பாட்டுடைத் தலைவனாகிய முதற் குலோத்துங்கனின் பிறப்பு,[6] வளர்ப்பு,[7] கல்வி கற்றல்,[8] படைக்கலப் பயிற்சி,[9] முடிபுனைதல் முதலிய செய்திகள்[10] விரித்துப் பேசப் பெறுகின்றன. குலோத்துங்கன் திருமாலின் அவதாரமாகவே பேசப்படுகின்றான்

" அன்றிலங்கை பொருதழித்த அவனேஅப்
பாரதப்போர் முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதரன்
எனஉதித்தான் விளம்பக் கேண்மின்."[11]

[ஆழி-சக்கரம்; விசயதரன்-குலோத்துங்கன்]

என்று காளிதேவியின் வாயில் வைத்துக் குலோத்துங்கன் வர லாறு கூறப்பெறுகின்றது. இலக்கியமாதலால், இப்பகுதியிலுள்ள செய்திகள் யாவும் கற்பனை நயம் செறிய உயர்வு நவிற்சிகளாகவே அமைந்துள்ளன. என்றாலும், உண்மையான வரலாற்றுக் குறிப் புக்கள் தெளிவாகவே அமைந்து கிடக்கின்றன இவற்றைத் தவிர 'காளிக்குக் கூளி கூறியது' என்ற பகுதியில் குலோத்துங்கனின் திருவோலக்கச் சிறப்பு, அவன் கலிங்கநாட்டின்மீது தண்டெடுத் துச்சென்ற காரணம், படைகள் கலிங்கவீரர்களுடன் பொருது வென்றமை போன்ற செய்திகள் தெளிவாக எடுத்தோதப்பெறு

5. தாழிசை-180-185.
6. தாழிசை-232-238
7. தாழிசை-240-242.
8. தாழிசை-243, 248.
9. தாழிசை-244-247
10. தாழிசை-2 8-268.
11. தாழிசை-232.

கின்றன. 'பேய்களைப் பாடியது'. 'கோயில் பாடியது' என்ற பகுதிகளில் பேய்களின் குறையுறுப்புக்களைக் கூறுவதுபோல் குலோத்துங்கனின் வென்றி மேம்பாட்டினை விளக்கும் செய்திகள் விரித்துப் பேசப்பெறுகின்றன. 'களம் பாடியது' என்ற பகுதியில் பேய்கள் கூழ் அடுவதற்கு அரிசியைக் குற்றும்போது பாடுவதாக அமைந்த வள்ளைப்பாட்டுக்களிலும், கூழை உண்ட பின்னர் பாடப்பெறும் வாழ்த்துப் பாடல்களிலும் சோழ அரசர்களைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இச்செய்திகள் யாவும் வரலாற்றுச் செய்திகள் போலமையாது கற்பனை நயம் பொதுள அமைந்திருப்பதால் அவை படிப்போருக்குப் பேரின்பம் பயப்பனவாக உள்ளன.

**சோழ அரசர்கள் :** இனி, இந் நூல் குறிப்பிடும் சோழ அரசர்களைப் பற்றிக் கூறுவேன். திருமாலே சோழர் குலத் தோன்றலாக — முதல்வனாகக் — குறிக்கபபெறுகின்றான். திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து நான்முகன் தோன்றின செய்தியும், நான்முகன் மரீசியைப் பெற்றெடுத்ததும், மரீசிக்கு காசிபன் மகனாகப் பிறந்ததும், காசிபனுக்குக் கதிரவன் குமாரனாக உதித்ததும் நிரலே கூறப்பெறுகின்றன [12] அருக்கனுடைய மகனாகத் தோன்றி உலகு புரந்தவன் மனுநீதிச் சோழன் ஆவான். நீதிக்கும், நேர்மைக்கும், அறம் வழுவாச் செங்கோலாட்சிக்கும் எடுத்துக்காட்டாக விளங்கியது சோழர் காலம் என்பதற்கு இவன் பிரதிநிதியாக விளங்குகின்றான். இவன் செயலை,

> "அரிய காதலனை ஆவினது
> கன்று நிகரென்று
> எவ்வ ருக்கமும்வி யப்பமுறை
> செய்த பரிசும்."[13]

[காதலன் - புதல்வன் ; வருக்கம்-உயிர்த் தொகுதி ; பரிசு-தன்மை]

என்று பரணி பாடுகின்றது. இவனுக்குப பிறகு இட்சுவாகு[14] விருச்சி, ககுத்தன்,[15] மாந்தாதா, முசுகுந்தன்,[16] பிருது லாட்சன் சிபி,[17] சுராதிராசன், இராசகேசரி பரகேசரி[18] கிள்ளி வளவன், கவேரன், மிருத்யுசிதது,[19] சித்திரன், சமுத்திரசித்து,

12 தாழிசை-186.
13. தாழிசை-187.
14. தாழிசை-187.
15. தாழிசை-188.
16. தாழிசை 189.
17. தாழிசை-190
18 தாழிசை-191.
19. தாழிசை-192.

பஞ்சபன், திலீபன்,[20] தூங்கெயிலெறிந்த தொடிதோட் செம்பியன், உபரிசரன், பாரதப் போரில் பங்குகொண்ட சோழன், சூரவர்க்கன்[21] ஆகியோர் வாழ்ந்தவர்களாகக் கூறப்பெறுகின்றனர். இவர்கள் யாவரும் இதிகாச உலகைச் சேர்ந்தவர்கள். சோழர்கள் எவ்வுயிரிடத்தும் இரக்கமுடையவர்கள் என்பதற்கும் நேர்மை திறம்பா உள்ளத்தினர் என்பதற்கும், மனுநீதிச் சோழனைப்போல் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்ந்தவர்கள் சிபியும் மாந்தாதாவும் ஆவர். மாந்தாதா புலியும் மானும் ஒரு துறையுள் ஒன்றாக நின்று நீர் பருகச் செய்தான் என்பதை,

"ஒருது றைப்புனல்சி னப்புலியும்
மானும் உடனே
உண்ண வைத்தஉர வோன்."[22]

[துறை - களம ; புனல் - நீர்]

என்று பரணி போற்றுகின்றது அங்ஙனமே, புறவு அடைந்த துன்பத்தை நீககுவதற்காகத் தன தசையைத தராசுத் தட்டில் அரிந்து வைத்த சிபியின வரலாற்றை,

"உடல்க லக்கறவ ரிந்துதடை
யிட்டும் ஒருவன்
ஒருது லைப்புறவொ டொக்கநிறை
புக்க புகழும்."[23]

[கலக்குஅற-மனக்கலக்கம் நீங்க; துலை-துலாத்தட்டு; புறவு-புரு; நிறை-எடையாக]

என்று புகழ்ந்துரைக்கின்றது

மேலும், சோழர்கள் காலத்தில் சிறந்த புலவர்கள் அரசவையை அணி செய்தனர் என்ற செய்தியும் இந்நூலால் அறியக் கிடக்கின்றது. அப்புலவர்கள் பலவேறு சிறந்த நூல்களை யாத்துத் தமக்கும் தம் நாட்டிற்கும் ஈடற்ற புகழைத் தேடிக்கொண்டனர் என்பதனையும் அறிகின்றோம். சோழன் செங்கணானுக்கும், சேரன் கணைக்கா லிரும்பொறைக்கும் ஏற்பட்ட போரில் சோழன் வெற்றி பெறுகின்றான. சேரனைச் சிறைப்படுத்திக் காலில் விலங்கும் பூட்டுகின்றான் சேர வேந்தனின் ஆசிரியராகிய பொய்கையார் 'களவழி நாற்பது' என்ற நூலைபபாடிச் சோழனைச் சிறப்பிககின்றார். இச்செய்தியை,

20. தாழிசை-193.
21. தாழிசை-194.
22. தாழிசை-189.
23. தாழிசை-190.

" களவ ழிக்கவிதை பொய்கைஉரை
செய்ய உதியன்
கால்வ ழித்தளையை வெட்டியர
சிட்ட வவனும்"[24]

[களவழி களவழி-நாற்பது என்னும் நூல்; உதியன்-சேரமான் கணைக்கா லிரும்பொறை; தளை-விலங்கு; இட்ட-வைத்த; அவன்-செங்கணான்.]

என்று பாடிப் பாராட்டுகின்றது பரணி. இதனையே,

" மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளையிட்ட பார்த்திபனும்"[25]

என்று விக்கிரம சோழன் உலாவும்,

—அணங்கு
" படுத்துப் பொறையனை பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்"[26]

என்று குலோத்துங்கன் உலாவும்,

" நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் கால்தளையை விட்டகோன்"[27]

என்று இராசராசன் உலாவும் போற்றியுரைக்கின்றன.

மேலும் சோழ நாட்டின் சிறப்பு, கரிகால் வேந்தனின் வீரம், கொடை, நீதி முதலியவற்றைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் தாம் எழுதிய பட்டினப்பாலையில் சிறப்பித்துள்ளார் என்பதைச் சங்க இலக்கியம் கற்ற நாம் அறிவோம். இச்செய்தியைச் சயங் கொண்டார்,

" தத்து நீர்வரால் குருமி வென்றதும்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்."[28]

[வரால்-மீன்வகை; குருமி-ஓர் ஊர் (கடப்பை மாவட்டத்தில் உள்ளது); பரிசில்வாணர் - உருத்திரங்கண்ணனார்; பத்தொடு ஆறு நூறுயிரம்-பதினாறு இலட்சம்.]

என்று புகழ்ந்து உரைக்கின்றார்.

---

24. தாழிசை-195.
25. விக்கி-உலா. 27-28.
26. குலோத்-உலா. 38-40.
27. இராச-உலா. 35-36.
28. தாழிசை-198.

**வரலாற்றுப் போர்கள் :** இனி, இந் நூல் குறிப்பிடும் சில போர்களைப்பற்றி அறிய முயல்வோம். முதல் இராசராசன் ஆட்சியிலும் அவன் மகன் இராசேந்திரன் ஆட்சியிலும் சோழ நாடு எல்லையில் மிக விரிந்தது; ஆட்சியில் மக்கட்குப் பல நன்மைகள் ஏற்பட்டன. இதிகாச காலத்தைச் சேர்ந்த சோழர்களின் ஆட்சியில் நடைபெற்ற நிகழ்ச்சிகளில் சில கட்டுக் கதைகள் போல் தோன்றினாலும், வரலாற்றுக் காலத்தில் நடைபெற்றதாகக் குறிப்பிடப் பெறுபவை யாவும் உண்மையானவை. முதல் இராசராசன் சேர நாட்டில் திருநந்திக் கரையிலுள்ள சிவாலயத்தில் தான் பிறந்த ஐப்பசித் திங்கள் சதய நாள் திருவிழாவைக் கொண்டாட ஏற்பாடுகள் செய்தான் அந்நாட்டிலுள்ள உதகை என்ற நகரையும் வென்று வாகை சூடியவன். இவற்றைக் கலிங்கத்துப் பரணி 'சதய நாள் விழா உதியர் மண்டலந் தன்னில் வைத்தவன்' என்றும் 'உதகை வென்ற கோன்' என்றும் குறிப்பிடுகின்றது.[29] தஞ்சை மாநாகரிலுள்ள பிரகதீசுவரர் என்ற கோயிலை நிறுவியவன் இவ்விறைவனே யாவன்.

இராசராசனின் மகன் இராசேந்திரன் சிறப்போ சொல்லுந் தரமன்று. இவன் வட நாட்டு அரசர்களை வென்ற போது கங்கைக் கரையில் களிறுகளுக்கு நீரூட்டினான்; பர்மா நாட்டைச் சார்ந்த கடாரத்தை வென்றான். இச்செய்திகளை,

> "களிறு கங்கைநீர் உண்ண மண்ணையிற்
> காய்சி னத்தொடே கலவு செம்பியன்
> குளிறு தெண்டிரைக் குரைக டாரமும்
> கொண்டு மண்டலம் குடையுள் வைத்ததும்"[30]

[மண்ணை-ஓர் ஊர்; கலவு-பொருந்திய; செம்பியன்-சோழன் (இராசேந்திரன்); குளிறு-ஒலிக்கின்ற; குரை-ஆரவாரத்தை யுடைய]

என்ற தாழிசையால அறியலாம் இந்நிகழ்ச்சிகளை மூவருலாவும் முறையறிந்து பேசுகின்றது.[31] வில்லிபாரதமும் குறிப்பிடுகின்றது[32] பேய்களைக் குறிப்பிடுங்கால் சயங்கொண்டாரே இப்போரை மீண்டும் கூறுகின்றார். அக்காலத்தில் பர்மா நாட்டை

29. தாழிசை-201.
30. தாழிசை-202.
31. விக்கி. உலா 34-36; குலோத். உலா 49-50 ; இராச. உலா. 43-44.
32. வில்லிபா. கன்னபர்வம்-66.

சங்கிராம விசயோத்துங்கவர்மன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனை வென்று அந்நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான் கங்கை கொண்ட சோழன். அந்தப் போர்க்களத்தில் பெருகியோடிய குருதி வெள்ளத்தில் அளவுக்குமீறி விளையாடினமையாலும் நீந்தினமையாலும் சில பேய்களின் முதுகுகள் வளைந்து கூனுகின்றன. இச்செய்தி,

> " பரக்கு மோதக்க டாரம ழித்தநாள்
> பாய்ந்த செம்புன லாடியு நீந்தியுங்
> குரக்கு வாதம்பி டித்தவி தத்தினிற்
> குடிய டங்களும் கூன்முது கானவும்." [33]

[ஓதம்-கடற் சார்பு; செம்புனல்-குருதி; விதத்தினில்-விதத்தால்; குரக்கு வாதம்-ஒருவித நோய்; குடி அடங்கலும்-சில பேய்க் கூட்டம் முழுவதும்]

என்ற தாழிசையால் அறியப்பெறுகின்றது. இராசேந்திரன் தன் ஆட்சிக் காலத்தில் எத்தனையோ போர்கள் நிகழ்த்தி வெற்றி பெற்றிருந்த போதிலும் இவன் கங்கையும் கடாரமும் கொண்டமை தான் அக்காலத்தில் மக்கள் மனத்தையும் புலவர்கள் உள்ளத்தையும் ஒருங்கே பிணித்துள்ளன. இதனால் இந்த வெற்றிச் சிறப்பினைச் சயங்கொண்டார் தம் நூலிலும், ஒட்டக்கூத்தர் தம் மூன்று உலாக்களிலும் போற்றிப் புகழ்வாராயினர். மேலும் இவ்வருஞ் செயல்கள் பற்றியே இராசேந்திரனுக்குக் 'கங்கை கொண்ட சோழன்', 'கடாரங் கொண்டான்' என்னும் சிறப்புப் பெயர்களும் வழங்கினதாகக் கல்வெட்டுக்களால் அறிகின்றோம்.

அடுத்து, இராசேந்திரன் மக்களாகிய இராசாதி ராசன், இராசேந்திர தேவன் (இராசேந்திரன்-II); இராசமகேந்திரன் (மும்முடிச் சோழன்), வீர ராசேந்திரன் ஆகிய நால்வர் பெற்ற வெற்றிச் சிறப்புக்கள் போற்றப்பெறுகின்றன இவர்களுள் இராசாதி

33. தாழிசை-151. கடாரத்தில் போர்புரிந்த செய்தி இவனது மெய்க்கீர்த்திகளில் குறிக்கப்பெறாததால் இவனது ஆட்சிக் காலத்தில் இது நிகழவில்லை என்றும், இவனது இளமைப்பருவத்தில் வீர ராசேந்திரன் ஆட்சியில் நிகழ்ந்த கடாரப் படையில் இவனுங் கலந்துகொண்டு அங்குச் சென்று போர் புரிந்திருத்தல் வேண்டும் என்றும் கருதுகின்றார் திரு T. V. சதாசிவ பண்டாரத்தார் (பிற்காலச் சோழர் சரித்திரம்—பகுதி III பக். 5—அடிக் குறிப்பு 2. காண்க.)

சனே மூத்தமகனுவான். இவன் குந்தள நாட்டின்மீது மும்முறை படையெடுத்துச் சென்று நிகழ்த்திய வீரச் செயல்கள்,

" கம்பி லிச்சயத் தம்ப நட்டதும்
கடிய ரண்கொள்கல் யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
கிரிக ளெட்டினும் புலிபொ றித்ததும்"[34]

[கம்பிலி-ஒரு நகரம்; சயத்தம்பம்-வெற்றித்தூண்; கல்யாணர்-சளுக்கியர்; கட்டற-நிலைகுலைய; கிம்புரி-யானைக் கொம்பில் அணியும் பூண்; பணை-யானை கட்டுமிடம்; கிரி-யானை]

என்ற தாழிசையில் குறிப்பிடப்பெறுகின்றன. இதனை ஒட்டக் கூத்தரும தம் உலாவில் "மும்மடி போய்க் கல்யாணி, செற்ற தனியாண்மைச் சேவகனும்"[35] என்று பாராட்டுகின்ருர்.

மீண்டும் ஒருமுறை (கி.பி. 1054 இல்) இராசாதிராசன் தன் தம்பி இராசேந்திர தேவனுடன் மேலைச் சளுக்கிய நாட்டின்மீது படையெடுத்துச் சென்ருன ஆந்திர மாநிலத்தில் கிருஷ்ணை நதிக்கரையிலுள்ள கொப்பத்தில் இருபடைகளும் கைகலந்து கடும் போர் புரிந்தன. அதில் இராசாதிராசன் இறந்தான்.[36] இராசேந்திர தேவன் தனது பட்டக்களிற்றின்மீது இவர்ந்து 'அஞ்சேல், அஞ்சேல்" என்று அபயமளித்துச் சோழப் படைகட்கு வீர உணர்ச்சி ஊட்டிப் போரைத் தொடர்ந்து நடத்தி வெற்றி பெற்ருன் கொப்பத்துப் போர்க்களத்திலேயே விசயாபிடேகமும் சூடிக்கொண்டான்[37] கொபபத்துப் போர் நிகழ்ச்சிகள் யாவும் இவன் பேரிலேற்பட்ட கல்வெட்டுக்களில மிகத் தெளிவாகக் கூறப்பெற்றுள்ளன இராசாதிராசன் போர்க்களத்தில் களிற்றின் மீதிருந்து உயிர்நீத்த செய்தி 'கலயாண புரமும் கொல்லா புரமும் எறிந்து யானைமேற் றுஞ்சின உடையார் விசய ராசேந்திர தேவர்' என்று சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்றுள்ளன. இராசேந்திர தேவன் கொப்பத்துப் போர்க் களத்தில் முடிசூட்டிக் கொண்ட செய்தியை,

" ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்(து)
உலகு யக்கொளப் பொருது கொப்பையிற்

34 தாழிசை-203.
35. விக்கிரம சோழ. உலா 37-38.
36. S.I.I. Vol V. No. 647 ; ibid Vol III No. 39.
37. S.I.I. Vol V. No. 647.

பொருக ளத்திலே முடிக வித்தவன்
புவிக விப்பதோர் குடைக வித்ததும்."[38]

[உயக்கொள - பிழைத்தலைப் பெறுமாறு; கொப்பை - ஓர் ஊர்; பொருது-போர் செய்து; புவி-உலகம்]

என்று சயங்கொண்டார் குறிப்பிடுவர். மேலும், இவ்வேந்தன் அக்கொப்பத்துப் போரில் ஆயிரம் களிறுகளையும் கைப்பற்றிக் கொண்டான். இச் செய்தியை ஒட்டக் கூத்தர் தம் நூல்களில்[39] உறுதி செய்வர்.

அடுத்து, கலிங்கத்துப் பரணியில் குறிப்பிடப்பெறுபவன் இராசமகேந்திரன். இவனை 'மும்முடிச் சோழர்' என்று குறிப்பிடுவர் நம் கவிஞர் பெருமான்.

"பனுவலுக்கு முதலாய வேத நான்கில்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கண்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்
மதிக்குகுடைக்கீ ழறந்தளிர்ப்ப வளர்ந்த வாறும்"[40]

[பனுவல்-நூல்; புதுக்கி-புதுப்பித்து; ஆம்-சிறந்தவன் ஆகிய]

என்ற தாழிசையால் இது பெறப்படும். திருவரங்க நகர் அப்பனுக்குப் பொன்னாலும் மணியாலும் அரவணையொன்று அமைத்தவன் இவனே யாவான்

– அப்பழ நூல்

"பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியால்
ஆடரவப் பாயல் அமைத்தோனும்"[41]

என்று ஒட்டக் கூத்தர் உறுதிப்படுத்துவர். அக்கோயிலில் இராசமகேந்திரன் திருவீதி என்னும் பிராகாரம் ஒன்றும் அவன் எடுப்பித்ததாகக் 'கோயிலொழுகு' என்ற நூலால்[42] அறியக் கிடக்கின்றது: இவன் இராசேந்திர தேவனுக்குத் தம்பியும், வீரராசேந்திரனுக்குத் தமையனும் ஆவான் என்பது திருவல்லம் என்னும் ஊரின் கண் உள்ள கல்வெட்டுக்களால்[43] புலப்படுகின்றது.

---

38. தாழிசை-204.
39. விக்கிரம சோழன் உலா 38-40; இராசராச சோழன் உலா 46-48
40. தாழிசை-205.
41. விக்கிரமசோழன் உலா. (40-42)
42. கோயிலொழுகு-பக். 3.
43. S.I.I. Vol V Nos 489 and 647.

இவன் இளவரசனாக இருந்தபொழுதே இறந்தனன் என்றும் தெரிகின்றது.[44]

அடுத்து, நம் கவிஞர் பெருமான் குறிப்பிடுவது வீரராசேந்திரனை. இவ்வரசரேறும் கங்கை கொண்ட சோழனுடைய மக்களுள் ஒருவனுவான் இவன் குந்தள வேந்தனுகிய ஆகவ மல்லனுடன் மும்முறை போர் தொடுத்தான். மூன்ருவது போர் கிருஷ்ணை, துங்கபத்திரை ஆகிய இரு பேராறுகளும் கூடும் இடமாகிய கூடல் சங்கமத்தில் கி. பி. 1064 இல் நடைபெற்றது. இப்போரில் பெற்ற வெற்றியையே சயங்கொண்டார் "குந்தளரைக் கூடல் சங்கமத்து வென்ற கோனபயன்"[45] என்று குறிப்பிடுவர். ஒட்டக்கூத்தரும்,

—"கூடலார்
சங்கமத்துக் கொள்ளும் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும்"[46]

என்றும்,

"பாட வரிய பரணி பகட்டணிவீழ்
கூடலார் சங்கமத்துக் கொண்டகோன்"[47]

என்றும் குறிப்பிட்டுப் புகழ்வர். இவன் தன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய மண்டலத்தில் மிழலைக் கூற்றத்திலுள்ள பொன்பற்றி என்னும் நகரில் சிற்றரசனுயிருந்த புத்தமித்திரன் என்பான் விரும்பியவாறு ஐந்திலக்கணங்களும் அடங்கிய நூலொன்றெழுதி அதற்கு 'வீரசோழியம்' என்று பெயரிட்டான் என்பது ஈண்டு அறியத்தக்க தாகும்.

இனி, குலோத்துங்கன் நிகழ்த்திய போர்களைப்பற்றிய செய்திகளைக் கூறுவேன். குலோத்துங்கன் இளவரசனுனவுடன் திக்கு விசயம் செய்து வெற்றி கொண்ட நிகழ்ச்சிகள் முதல் பின்னர் அவன் பேரரசனுனவரை அடைந்த வெற்றிகள் யாவும் 'அவதாரம்' என்ற பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளன. குலோத்துங்கன் இளவரசுப்பட்டம் எய்தியதும் போர்வேட்டெழுந்து வட திசை நோக்கிச் சென்று மத்தியமாகாணத்திலுள்ள (Madhya

44. சதாசிவ பண்டாரத்தார்; பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி-1. (1967) பக். 235
45. தாழிசை-206.
46 விக்கிரமசோழன் உலா-(42-44).
47. இராசராச சோழன் உலா-(49-50).

Pradesh) வத்தவ நாடாகிய சக்கரக் கோட்டத்தை வயிராகரம் என்ற இடத்தில் பொருது வெற்றி கொண்டதுதான் இவனது கன்னிப் போராகும்.[48] அப்பொழுது அந்நாட்டை தாராவர்ஷன் என்னும் வேந்தன் ஆண்டுவந்தான். இருவருக்கும் சக்கரக் கோட்டம் என்னும் ஊரிலுள்ள போர்க்களத்தில் கடும்போர் நிகழ்ந்தது. இறுதியில் குலோத்துங்கன் வெற்றி எய்தி வாகை சூடினான். இதனைக் கவிஞர்,

> " மனுக்கோட்டம் அழித்தபிரான்
> வளவர்பிரான் திருப்புருவத்
> தனுக்கோட்டம் நமன்கோட்டம்
> பட்டதுசக் கரக்கோட்டம்."[49]

[மனு-மனிதர்கள்; கோட்டம்-தீநெறி; புருவத் தனு-புருவ வில்; கோட்ட-வளைக்க (கோபக் குறி); நமன் கோட்டம்-எமனுடைய ஊர்; பட்டது-சேர்ந்தது]

என்று குறிப்பிடுவர். இதிலுள்ள 'திரிபு' என்ற சொல்லணி பாவின் சுவையை மிகுவிக்கின்றது.[50] இப்போரில் குலோத்துங்கன் வயிராகரம் என்னும் ஊரில் பல களிறுகளைக் கவர்ந்தான். அந்த ஊரையும் வேறு பல ஊர்களையும் எரிகொளுயி அழித்தான். வயிராகரத்தை எரியூட்டியதைத் 'திகிரி புகைஎரி குவிப்ப வயிரா, கரம் எரி மடுத்து'[51] என்ற அடியால் பெறவைக்கின்றார். பகைவர் ஊரை எரிமூட்டி அழித்தலை 'உழபுலவஞ்சி' என்று புறப்பொருள் இலக்கணம் பேசும்.[52] இதனையே அனந்தபன் மனுக்கு அறிவு கொளுத்திய எங்கவ ராயன் வாயில் வைத்தும்,

> " மாறு பட்டெழு தண்டெழ வத்தவர்
> ஏறு பட்டதும் இம்முறை யேயன்றோ ?"[53]

[தண்டு-சேனை; வத்தவர்-வத்தவ நாட்டவர் ; ஏறு-அரசன்]

---

48. தாழிசை-252 49. தாழிசை-254.

50. திரிபு-எல்லா அடிகளிலும் இரண்டாம் எழுத்து முதலிய பல எழுத்துக்கள் ஒன்றி நின்று பொருள் வேறுபடுவதைத் 'திரிபு' என்று கூறுவர் இலக்கண நூலார். இத்தாழிசையில் முதலடியிலுள்ள 'மனுக்கோட்டம்' இரண்டாம் அடியிலுள்ள 'தனுக் கோட்டம்' ஆகிய இரண்டு சொற்களிலும் முதல் எழுத்தைத் தவிர ஏனைய எழுத்துக்கள் ஒன்றி நின்று பொருள் வேற்றுமையைப் புலப்படுத்தியமை காண்க.

51. தாழிசை-252.

52. புறப்பொருள் வெண்பா மாலை-49.

53. தாழிசை-384.

என்று 'அபயற்கன்றித், தண்டினுக்கும் எளியனோ'[54] எனச் செருக்குடன் மொழிந்தபோது இதனைக் கூறினன். 'உன்னைப் போலவே அவ்வேந்தனும் சிறிதும் ஆராயாமல் போர்புரிந்து துன்பம் எய்தினன்' என்பதை 'இம் முறையே' என்ற தொடரால் குறிப்பாகப் புலப்படுத்துகின்றான். 'பேய்கள் உலகம்'பற்றிய பொழிவில் உறுப்புக் குறையுள்ள பேய்களைக் குறிப்பிட்டேன் அல்லவா? குருட்டுப் பேய்களைப்பற்றிக் கூறும் கவிஞர் சக்கரக் கோட்டப் போரைக் குறிப்பிடுகின்றார். இந்தப் போர் நிகழ்ந்து குலோத்துங்கன் வெற்றி பிறகு போர்க்களத்தில் பேய்கள் கூழ் அடுகின்றன. குருதியையும் கொழுங்குடரையும் சேர்த்துச் சமைக்கும்பொழுது ஆவலுடன் அருகிலிருந்துகொண்டு தாழியை எட்டி எட்டிச் சில பேய்கள் பார்க்கின்றன. வெப்பம் மிக்க கூழ் தெறித்தலால் அவை சில பேய்களின் கண்களில் விழுந்து அப்பேய்களைக் குருடுகளாகச் செய்கின்றன. இதனைக் கவிஞர்,

"விருத ராசப யங்கரன் முன்னோர்நாள்
வென்ற சக்கரக் கோட்டத்தி டைக்கொழுங்
குருதி யுங்குட ருங்கலந் தட்டவெங்
கூழ்தெ றித்தொரு கண்குரு டானவும்"[55]

[விருதராச பயங்கரன்-குலோத்துங்கன்; விருது-வெற்றிச் சின்னம்; குருதி-செந்நீர்; அட்ட-சமைத்த]

என்ற தாழிசையில் குறிப்பிடுகின்றார். வெற்றிச் சின்னங்களை அணிந்து கொண்டிருந்த ஆரும் விக்கிரமாதித்தன், சயசிங்கன் முதலிய வேந்தர்களை வென்றமையால் குலோத்துங்கனுக்கு இப் பெயர் ஏற்பட்டது. முதற் குலோத்துங்கன் சக்கரக் கோட்டத்தை அழித்ததை இன்னொரு விதமாகவும் அழகாக விளங்குகின்றார் கவிஞர். மாற்றரசர்களின் செல்வ மகளாக வளர்ந்து வந்த வீர மகளைக் குலோத்துங்கன் மணம் புணர்ந்தனன் என்றும், அவர்கள் தம் மகளுக்குச் சீதனப்பொருள் கொடுப்பார் போல யானை, குதிரை முதலிய பல வகைப் பொருள்களை வழங்கினர் என்றும் குறிப்பிடுகின்றார். இதனை,

"சரிக ளந்தொறுந் தங்கள்ச யமகள்
தன்னை மன்னப யன்கைப் பிடித்தலும்

54. தாழிசை-376.
55. தாழிசை-147.

பரிக ளுங்களி றுந்தன ராசியும்
பாரி போகங்கொ டுத்தனர் பார்த்திபர்"[56]

[சரிதல்-குலைந்து பின்னிடுதல்; சயமகள்-வெற்றித் திருமகள்; பரி-குதிரை; களிறு-யானை; தனராசி-பொருட்குவியல்; பாரி போகம்-சீதனம் (பாரி-மனைவி; போகம்-இன்ப நுகர்ச்சிப் பொருள்) பார்த்திபர்-அரசர்]

என்ற தாழிசையில் கண்டு மகிழலாம். மேலும், வென்ற அரசனின் நிலையையும் கவிஞர் விளக்குந் திறன் பன்முறை படித்து இன்புறத் தக்கது.

"பொருத ராதிபர் கண்கள்சி வந்தில
போரி லோடிய கால்கள்சி வந்தன
விருத ராசப யங்கரன் செங்கையில்
வேல்சி வந்தது கீர்த்திவெ ளுத்ததே."[57]

[தராதிபர்-தரா + அதிபர்-அரசர்; கீர்த்தி-புகழ்]

என்பது கவிஞரின் சொல்லோவியம் 'தராதிபர் கண்கள் சிவந்தில' என்பதால் மாற்றரசர்கள் வீரமிழந்ததும், 'கால்கள் சிவந்தன' என்பதனால் அவர்கள் புறமுதுகிட்டோடிய நிலையும் நயமாகக் குறிப்பிடப்பெறுகின்றன. 'வேல் சிவந்து' என்பதனால் குலோத்துங்கன் பகைவர் சேனையை அழித்தமையும், 'கீர்த்தி வெளுத்தது' என்பதனால் அவனுடைய புகழ் எங்கும் பரவியது என்பதும் தெளிவாகப் புலப்படுகின்றன. முரண் தொடை அமைந்த இத்தாழிசை பன்முறை படித்து இன்புறத் தக்கது.

பாண்டியர்களுடன் குலோத்துங்கன் நிகழ்த்திய போர் ஒன்று குறிப்பிடப்பெறுகின்றதைக் காண்கின்றோம். ஊமைப் பேய்களைக் காட்டும்பொழுது இப்போரைக் குறிப்பிடுகின்றார் கவிஞர். போருக்குப் பிறகு பேய்கள் கூழ் அடுகின்றன. பசி மிகுதியாலும் கூழின்மீதுள்ள ஆர்வத்தாலும் கூழின் வெப்பம் குறைவதற்கு முன்னரே அவசர அவசரமாகச் சில பேய்கள் கூழை உண்கின்றன. இதனால் அப்பேய்களின் நாக்கும் உள் நாக்கும் சுருண்டு கழுத்துக்குள்ளே இழுத்துக் கொண்டதனால் சில பேய்கள் பேச்சின்றி ஊமைகளாயின. இதனைக் கவிஞர்,

"வண்டல் பாய்பொன்னி நாடனை வாழ்த்திமா
மதுரை வெங்களத் தேமது ரிக்கஅட்

56. தாழிசை-255.
57. தாழிசை-256

டுண்ட கூழொடு நாவுஞ்சு ருண்டுபுக்(கு)
உள்வி ழுந்தற வூமைகள் ஆனவும்'' [58]

[பொன்னி-காவிரி; மதுரிக்க-இனிக்க; அட்டு-சமைத்து]

என்ற தாழிசையில் காட்டுகின்றார். இந்தப் போரில் பாண்டியர் அழிய, அவர்கட்குக் குற்றேவல் புரிந்து வந்த பெண் பூதகணங்கள் அனைத்தையும் பிடித்து வந்த ஆண் பேய்கள் அவற்றைப் புணர்ந்ததனால் குறுகிய வடிவமுள்ள பேய்கள் பிறக்கின்றன. இதனை,

'' பண்டு தென்னவர் சாயஅ தற்குமுன்
பணிசெய் பூதக ணங்கள னைத்தையுங்
கொண்டு வந்தபேய் கூடிய போதில்அக்
குமரி மாதர்பெ றக்குற ளானவும்'' [59]

[தென்னவர்-பாண்டியர் ; சாய-அழிய ; குமரி மாதர்-இளைய குறட் பெண் பூதங்கள்]

என்ற தாழிசையில் குறிப்பிடப்பெற்றுள்ளதைக் காணலாம். குலோத்துங்கன் பாண்டியரை எதிர்த்தபொழுது, பாண்டி நாடு ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவையும் ஒவ்வோரரசன் ஆண்டு வந்தான். அவர்களவனைரும் ஒன்று சேர்ந்து குலோத்துங்கனை எதிர்த்தனர். குலோத்துங்கன் அவர்களனைவரையும் வென்று அவர்களுடைய நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டான் இதனை எங்கராயன் வாய் மொழியாக,

'' விட்ட தண்டினின் மீனவர் ஐவரும்
கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலும்நீ'' [60]

[தண்டு-சேனை; மீனவர்-பாண்டியர்; கேடு-அழிவு]

என்று காட்டுவர் கவிஞர் அதன் பிறகு குலோத்துங்கன் தன் வெற்றிக்கு அறிகுறியாகக் கன்னியா குமரி, அதற்கு வடக்கே பத்துக் கல் தொலைவிலுள்ள கோட்டாறு ஆகிய இடங்களில் வெற்றித் தூண்களை நிறுவினான். இச் செய்தி,

58. தாழிசை-148.
59. தாழிசை-150.
60. தாழிசை-381.

" முள்ளாறும் கல்லாறும் தென்னர் ஓட
முன்ஞெருநாள் வாளபயன் முனிந்த போரின்
வெள்ளாறும் கோட்டாறும் புகையான் மூட" [61]

[ஆறு - வழி ; தென்னர் - பாண்டியர் ; அபயன் - குலோத்துங்கன் ]

என்ற தாழிசைப் பகுதியினுல் புலனுகும். பாண்டி நாட்டின் மீது படையெடுத்தபொழுது முத்துக்கள் மிகுதியாகக் கிடைக்கும் மன்னூர்குடாக் கடலைச் சார்ந்த நாட்டையும், பொதியிற் கூற்றத்தையும், கன்னியா குமரியையும், கோட்டாற்றையும் தனக்கு உரிமையாக்கிக் கொண்டான் இவற்றைப் பாண்டியர் மீண்டும் கவருதவாறு கோட்டாற்றில் 'கோட்டாற்று நிலைப்படை' என்ற ஒரு படையை ஏற்படுத்தினுன். [62]

குலோத்துங்கன் சேரரை வென்று வாகை சூடிய செய்தியையும் குறிப்பிடுகின்றுர் சயங்கொண்டார். பாண்டி நாட்டை வென்ற பின்னர் இவனது கவனம மலைநாட்டின்மீது சென்றது. சேர வேந்தரை எதிர்த்து வெற்றி கொண்டு திருவனந்தபுரத்துக்குத் தெற்கில் பத்து மைல் தொலைவிலுள்ள விழிஞம் என்ற ஊரையும், திருவனந்தபுரத்தைச் சார்ந்த காந்தளூர்ச்சாலையையும் கைப்பற்றிக் கொண்டான். இச்செய்தி எங்கராயன் வாய்மொழியாக,

" வேலை கொண்டு விழிஞம் அழித்ததும்
சாலை கொண்டதும் தண்டுகோண் டேயன்றே." [63]

[வேலை-கடல்; சாலை-காந்தளூர்ச் சாலை]

என்ற தாழிசையில் குறிப்பிடப்பெறுகின்றது. விழிஞம், காந்தளூர்ச்சாலை என்ற இரண்டும் அக்காலத்தில் சேர வேந்தரின் மரக்கலங்கள் தங்கும் துறைமுகங்களாகத் திகழ்ந்தவையாகும். குலோத்துங்கன் மெய்க்கீர்த்தியை நோக்குங்கால் இவன் பாண்டியரோடும் சேரரோடும் நிகழ்த்திய போர்கள் ஓராண்டிலேயே தொடர்ந்து நடைபெற்றிருத்தல் வேண்டும் என்பது நன்கு புலனுகின்றது.

குலோத்துங்கன் இளமைப் பருவத்தில் நிகழ்ந்திய போர் ஒன்றில் குதிரைமீது இவர்ந்து கடுமையாகப் போர் புரிகின்றுன்.

61. தாழிசை-95.
62. Travancore Archaelogical series, Vol I p. 247
63. தாழிசை-383.

அவனுடைய சேனை வீரர்களும் பகைவர் சேனைக்கு அஞ்சாமல் உற்சாகமாகப் பேரிரைச்சலுடன் போர் புரிகின்றனர். அந்தப் பேரொலியைத் தாங்க முடியாமல் சில பேய்களின் காதுகளிலுள்ள மெல்லிய சவ்வு பிய்ந்துபோய் அவை செவிடுகளாகின்றன. இதனைச் சயங்கொண்டார்,

> " ஆனை சாயவ டுபரி ஒன்றுகைக்கு
> ஐம்படைப்பரு வத்தப யன்பொருஞ்
> சேனை வீரர்நின் ருர்த்திடும் ஆர்ப்பினில்
> திமிரி வெங்களத் திற்செவி டானவும்"[64]

[ஆனை-யானை; பரி-குதிரை; உகைத்து-செலுத்தி; ஐம்படைப் பருவம்-ஐம்படைத்தாலி அணிந்துள்ள இளமைப் பருவம்; ஆர்ப்பு-பேரொலி]

என்று சித்திரித்துக் காட்டுவர். 'திமிரி' என்ற இடம் எங்குள்ளது என்பது தெரியவில்லை.

இங்ஙனம் குலோத்துங்கன் பல போர்களை நிகழ்த்தி வருங்கால் துங்கபத்திரை நதிக்கரையில் போர் ஒன்று நிகழ்கின்றது. **ஆறும் விக்கிரமாதித்தன்** என்பவன் அப்பொழுது குந்தள நாட்டை ஆண்ட அரசன் ஆவான். குலோத்துங்கன் அவன்மீது படை எடுத்துச் சென்று, அவனையும் அவனுடைய தம்பியாகிய **சயசிங்கனையும்** வென்று அவர்களைத் துங்கபத்திரை நதிக்கப்பால் துரத்தி, அவர்களுடைய தலைநகரமாகிய கலியாணபுரத்தைத் தனக்குரிமையாக்கிக் கொள்ளுகின்ருன். இதனைக் கவிஞர்.

> " துங்க பத்திரைச் செங்க ளத்திடைச்
> சோள சேகரன் வாளெ றிந்தயோர்
> வெங்க தக்களிற் றின்ப டத்திருல்
> வெளிஅ டங்கவே மிசைக விக்கவே"[65]

[செங்களம்-போர்க் களம்; சோளன்-சோழன்; கதம்-சினம்; படம்-முகபடாம்; மிசை-கூரை]

என்று குறிப்பிடுகின்ருர். குலோத்துங்கன் யானைகளின் முகப் போர்வையால் காளி கோயிலின் முகட்டை மூடின செய்தி இதில் குறிப்பிடப்பெறுகின்றது. மீண்டும் மைசூர் நாட்டைச் சார்ந்த அளத்திப் போரில் குந்தள அரசனை வென்ற செய்தியையும் கூறுகின்ருர் கவிஞர். இதனை,

64. தாழிசை-149.
65. தாழிசை-103.

" தளத்தொ டும்பொரு
தண்டெழப் பண்டொர்நாள்
அளத்தி பட்டத
நிந்திலை ஐயநீ"[66]

[தளம்-அணிவகுப்பு ; அளத்தி-ஓர் ஊர்]

என்ற தாழிசையில் காணலாம். தன் பிரதிநிதியாய் வனவாசியை ஆண்டு வந்த தன் தம்பியைக் குலோத்துங்கன் வென்ற செய்தியைக் கேட்டு விக்கிரமாதித்தன் பெரும் படையுடன் குலோத்துங்கனை எதிர்க்கின்றான். இருவருக்கும் கோலார் மாவட்டத்தைச் சேர்ந்த நங்கிலி என்னும் இடத்தில் பெரும் போர் நிகழ்கின்றது. இப்போரில் விக்கிரமாதித்தன் தோல்வியுறுகின்றான். அப்போது தான் அவன் துங்கபத்திரை நதிக்கப்பால் துரத்திச் செல்லுகின்றான். துரத்திச்சென்றது மணலூர் வழியாக. இதனை,

" கிடைக்கப் பொருது மணலூரில்
கீழ்நா ளட்ட பரணிக்கூழ்
படைத்துப் பயின்ற மடைப்பேய்கள்
பந்தி தோறும் வாரீரே."[67]

[கிடைக்க-போர் கிடைக்க; கீழ்நாள்-முன்னாள்; அட்ட-சமைத்த; படைத்தல்-பரிமாறுதல்; பயின்ற-பழகிய]

என்ற தாழிசையில் காணலாம் கலிங்கத்தில் பரணிக் கூழைப் பரிமாற மடைப்பேய்கள் அழைக்கப்பெறுகின்றன. மீண்டும் மைசூர் நாட்டைச் சார்ந்த நவிலையில் பல சிற்றரசர்களை வென்று பல யானைகளைக் கைப்பற்றின செய்தியை,

" தண்ட நாயகர் காக்கும்ந விலையில்
கொண்ட தாயிரம் குஞ்சரம் அல்லவோ"[68]

[நவிலை-ஓர் ஊர்; குஞ்சரம்-யானை]

என்ற தாழிசையால் அறிகின்றோம்.

கால் முடப்பேய்களையும் கை முடப்பேய்களையும் காட்டுவது போல் குலோத்துங்கனின் வெற்றிச் சிறப்பினைக் கூறும் திறம் சுவைத்து இன்புறத்தக்கதாகும். குலோத்துங்கன் சினங்கொண்டு

66. தாழிசை-385.
67. தாழிசை-564.
68. தாழிசை-386.

போர் புரியுங்கால் பகை வேந்தர்களின் தலைகளிலிருந்து மூளைச் சேறு சொரிகின்றது. போர்க்களத்தில் அலைந்து திரியும் சில பேய்கள் அச்சேற்றில் கால் வழுவி விழுவதனால் கால்களிலுள்ள மூட்டுக்கள் புரண்டு ஒருகால் நொண்டியாகின்றது. இதனை,

" ஆளைச் சீறுக ளிற்றப யன்பொருஉம்
அக்களத்தில்அ ரசர்சி ரஞ்சொரி
மூளைச் சேற்றில்வ ழுக்கிவி ழுந்திட
மொழிபெ யர்ந்தொரு கான்முட மானவும்"[69]

[ஆள்-ஆண்மை வீரர்கள்; களம்-போர்க் களம்; சிரம்-தலை; மொழி-மூட்டு]

என்ற தாழிசையால் அறியலாம். போர்க்களத்தில் கூழடுங்கால் சில பேய்கள் வெண்பற்களாகிய அரிசியை உரலில் போட்டுத் தீட்டும்போது யானைக் கொம்பாகிய உலக்கைபட்டு சில பேய் களின் வலக்கைகள் குறைந்து முடமாகின்றன.

" அந்த நாளக்க ளத்திடு கூழினுக்
காய்ந்த வெண்பல்ல ரிசியு ரற்புக
உந்து போதினிற் போதகக் கொம்பெனும்
உலக்கை பட்டுவ லக்கைசொற் றுனவும்."[70]

[அடுதல்-சமைத்தல்; கூழ்-நிணக்கூழ்; உந்துதல்-குற்றுதல்; போதகக் கொம்பு-யானைத் தந்தம்; சொற்று-முடம்]

என்ற தாழிசையில் இதனைக் குறிப்பிடுகின்றார் கவிஞர்.

மேற்கூறிய போர்களில் சக்கரக்கோட்டம், வயிராகரம் ஆகிய இடங்களில் நடைபெற்ற போர்கள் இவனது இளங்கோப் பருவத்தில் நடைபெற்றவையாகும். ஏனையவை யாவும் இவனது ஐம்பது ஆண்டு கால ஆட்சியின் முற்பகுதியில் நிகழ்ந்தவை என்பது திரு. சதாசிவ பண்டாரத்தாரின் கருத்தாகும் இவற்றின் விவரங்களை அவருடைய "பிற்காலச் சோழர் சரித்திரம்" என்ற நூலை நோக்கி அறிக.

**அரசர் இயல்புகள் ;** இனி, அக்கால அரசர் இயல்புகளைப் பற்றி இந்நூல் குறிப்பிடும் செய்திகளைக் கூற விரும்புகின்றேன். இளவரசாகும் முன்பு அரச குமாரர்கள் படைக்கலப் பயிற்சி

69. தாழிசை-145.
70. தாழிசை-146.

பெறுதல் வேண்டும். படைக்கலப் பயிற்சி பெற்ற பின்னர் அவர்கள், இக்கால சீக்கிய இளைஞரைப் போல், உடைவாளைத் தம் அரையில் பூண்டிருப்பர். படைக்கலப் பயிற்சி பெற்ற குலோத்துங்கனைக் குறிப்பிடுமிடத்து "உடைவாளைத், திரு அரையில் ஒளிர வைத்தே"[71] என்று கவிஞர் கூறுவதைக் காண்மின். அரசர்கள் அரசு வீற்றிருக்கும்பொழுது அவர்கள் தேவிமார்களும் உடன் இருத்தலும் அக்கால வழக்கமாக இருந்து வந்துள்ளது. குலோத்துங்கன் காஞ்சியில் வனப்புடன் செய்தமைத்த சித்திர மண்டபத்தில் அரசரும் அமைச்சரும் சூழ வீற்றிருந்த காலையில் "தேவியர் சேவித்திருக்கவே"[72] என வரும் கவிஞர் கூற்றினால் இதனை அறியலாம்.

அரசனுடைய அணுக்கிமார் நாடகம், நிருத்தம் முதலியவற்றிலும், பாலை குறிஞ்சி மருதம் செவ்வழி என்ற நால்வகைப் பண்களிலும் வல்லவர்களாய் அரசனைச் சூழ இருந்து குற்றேவல் புரிவர்.[73] வீணை, யாழ், குழல், மத்தளம் முதலிய இசைக் கருவி வல்லார்களும் ஒரு பக்கத்திலிருந்து கொண்டு ஏவல் கேட்டு நிற்பர்.[74] அரசர்களுடைய புகழ்பாடுவதற்கு நின்றேத்தும் சூதர், இருந்தேத்தும் மாகதர், மங்கலப் பாடகர், வந்தியர், வைதாளிகர் என்போர் இருப்பர்.[75] வேந்தனின் கட்டளைகளைப் பிறருக்கு அறிவித்தற்கும், பிறருடைய விருப்பங்களையும் வேண்டுகோள்களையும் மன்னனுக்குத் தெரிவித்தற்கும் 'திருமந்திர ஓலையாள்' என்ற பெயர் பெற்ற அலுவலன் அரசவையில் இருப்பான்.[76]

அரசர்கள் ஏதாவது ஒரு நிமித்தத்தின் பொருட்டு வெளிச் செல்ல நேரிடுங்கால் மறையோர்க்குத் தான தருமங்கள் செய்தும், கவிவாணர்கட்குப் பரிசளித்தும் புறப்படுவது அக்கால வழக்கமாகும்.[77] பேரரசர் புறப்படுங்கால் சிற்றரசர்கள் சயஒலி முழங்குவர். மறையவர் மறைமொழி இயம்புவர்[78]. அப்பொழுது சங்கொலிகளும், பல்லிய ஒலிகளும் எழுப்பப்பெறும்.[79] யானை மீது முரசதிர்ந்து செல்லும். இவை யாவும் மங்கல ஒலிகளாகக் கருதப்பெற்றன. அரசர்களுடன் பயணஞ் செய்வார் யானை, தேர், சிவிகை ஆகிய துற்றில் ஏறிச் செல்வர். அரசர்கள் களிறூர்ந்து செல்லலும் அவர்கள் தேவிமார் பிடியூர்ந்து செல்வதும் அக்கால வழக்கமாகும்.[80]

---

71. தாழிசை-244.
72. தாழிசை-320.
73. தாழிசை-321.
74. தாழிசை-323.
75. தாழிசை-322.
76. தாழிசை-328.
77. தாழிசை-281.
78. தாழிசை-284.
79. தாழிசை-283.
80. தாழிசை-285, 286.

பேரசர்கட்குச் சிற்றரசர்கள் திறைப்பொருள் கொடுக்கும் வழக்கம் நடைமுறையிலிருந்து வந்தது. மணி மாலை, பொன்னணி, முடி, பொற்பெட்டி, முத்துமாலை, மணிகள் இழைத்த ஒற்றைச் சரடு, மணிக்குவியல், மகரக்குழை முதலியவையும், யானை, குதிரை, ஒட்டகம் முதலியவையும் அவர்கள் தரும் திறைப் பொருள்களாகும்.[81] திறைப்பொருள்கள் எருதுகளின்மீது ஏற்றி வந்தாகத் தெரிகின்றது. "பகடு சுமந்தன திறைகள்"[82] என்ற தொடரால் இதனை அறியலாம். சிற்றரசர்கள் பேரசர்கட்கு இளமகளிரைத் திறைப்பொருளாகத் தருவதுண்டு.[83] அம் மகளிர் தனியாக வாழும் இடத்தை 'வேளம்' என்று குறிப்பிடுவர்.[84] இவர்கள் அரசர்களின் அந்தப்புரத்தில் சேடியராகப் பணியாற்றுவர்.[85] இது போலவே சிற்றரசர்கள் பேரரசர்கட்குக் குற்றேவல் புரிவர்.[86] கரிகாலன் காலத்தில் இங்ஙனம் சிறையாகப் பிடித்துவரப்பெற்ற மகளிர் அம்பலம் அல்லது கோயில்களில் திருப்பணி செய்வோராக அமர்த்தப்பெற்றனர்[87] என்பது ஈண்டு நினைவு கொள்ளத் தக்கது.

பேரரசர்கள் தம்மையடைந்த சிற்றரசர்கட்கு அஞ்சல் அளிக்கும் வழக்கத்தையும் அறிகின்றோம் அதற்கு அறிகுறியாக அவர்கள் தம் அடியிணைகளை அந்தச் சிற்றரசர்களின் முடி மீது வைத்து அருள் செய்வர். இதனை,

> " அரசர் அஞ்சலென அடியி ரண்டுமவர்
> முடியின் வைத்தருளி"[88]

என்று கவிஞர் கூறுவதைக் காண்க காஞ்சியில் திறைபெற்ற குலோத்துங்கனைக் குறிப்பிடுங்கால் இவ்வழக்கம் காட்டப்பெறுகின்றது மேலும், பேய்கள் கூழடுங்கால் அரிசி குற்றும்போது பாடும்,

> " வணங்கிய சேரர் மணிமுடியும்
> வழுதியர் தங்கள் மணிமுடியும்

81. தாழிசை 334, 335. 336.
82. தாழிசை-272.
83. தாழிசை-41.
84. தாழிசை-40.
85. தாழிசை-326.
86. தாழிசை-325.
87. பட்டினப்பாலை - வரி (246-49)
38. தாழிசை-337.

பிணங்கிய சேவடி பாடீரே
பெருமான் திருவடி பாடீரே"[89]

[வழுதியர்-பாண்டியர்; பிணங்கிய-ஒன்று சேர்ந்த; அடி-பாதம்]

என்ற வள்ளைப் பாட்டாலும் இஃது அறியப்படும்.

சிற்றரசர்கள் பேரரசர்களின் அமைச்சர்களைப் பெரிதும் சிறப்பாக மதித்தனர் என்ற செய்தியும், அங்ஙனமே அவர்கள் அந்த அமைச்சர்களிடம் பணிவுடன் ஒழுகி வந்தனர் என்ற செய்தியும் இந்நூல்களால் அறியக் கிடக்கின்றன. கவிஞர் இதனை,

" தார்வேய்ந்த புயத்தபயன்
தன்னமைச்சர் கடைத்தலையில்
பார்வேந்தர் படுகின்ற
பரிபவம்நூ ருயிரமே"[90]

[தார் - மாலை; கடைத்தலை - வாயில்; பரிபவம் - பெருமைக் குறைவு]

என்ற தாழிசையில் குடுப்பிடுகின்றார். போரில் தோல்வியுற்ற மன்னர் சமாதானத்தை நாடியும், பகைவேந்தரை எதிர்க்க வேண்டுவோர் முதற் குலோத்துங்கன் உதவியை விழைந்தும் அவர்களுடைய அமைச்சர்கள்பால் சென்று குறையிரத்தலை இதில் குறிப்பிடுகின்றார் கவிஞர்.

**போர் முறைகள்** ' கலிங்கத்துப் பரணியால் அறியலாகும் அக் காலப்போர் முறைகளையும் குறிப்பிடுவேன். அரசர்கள் போர் செய் வதற்குப் புறப்படுங்கால், சங்கு முழக்கியும், முரசதிர்ந்தும், இய மரம் இரட்டியும், கொம்புகளை ஒலித்தும் செல்வது வழக்கமாக இருந்தது. இதனை,

" வளைக லிப்பவும் முரசொ லிப்பவும்
மரமி ரட்டவும் வயிரமாத்
தொளையி சைப்பவும் திசையி பச்செவித்
தொலைய டைத்தலைத் தொடரவே"[91]

[வளை-சங்கு; மரம்-இயமரம் (ஒருவித போர்ப்பறை); வயிர்-ஊதுகொம்பு; வயிர-ஆறனுருபேற்றது; இபம்-யானை]

89. தாழிசை-530
90. தாழிசை-539.
91. தாழிசை-344.

என்ற தாழிசையால் அறியலாம். பகையரசர்களுடைய நாட்டினைப் படைகள் தாக்குங்கால் அவர் ஊரினை எரி கொளு வியும் சூறையாடியும் அழித்தல் இயல்பாக இருந்தது. கருணா கரனின் படை கலிங்க நாட்டினை அழித்த செய்தியை,

“ அடையப் படர்எரி கொளுவிப் பதிகளை
அழியச் சூறைகொள் பொழுதத்தே”[92]

என்று கவிஞர் கூறுவதைக் காண்க.

போர்க்களத்தில் இருதிறத்துப் படைகள் ஒன்றோடொன்று பொருங்கால் நால்வகைப் படையுள் ஒவ்வொரு வகைப் படையும் அவ்வகைப் படையுடனேயே போரிடுவது மரபாக இருந்து வந்தது. போர்க்களங்களில் உலக்கை, சக்கரம், குந்தம், பகழி, கோல், வேல் முதலியவை அக்காலப் போர்க்கருவிகளாகப் பயன் பட்டனவாக அறிகின்றோம் இன்று அத்தகைய போர்க் கருவி களில் சில சென்னை, ஐதராபாத் நகர்களில் உள்ள பழம் பொருட் காட்சிகளில் வைக்கப்பெற்றுள்ளன இரவில் போரிடும் வழக்கம் அக்காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. கலிங்கப்போரின் மேல் சென்றபடை “உதயத்து, ஏகுந்திசை கண்டு அது மீள விழும்பொழுது ஏகல் ஒழிந்து”[93] என்று கூறப்படுதலாலும், கலிங்க மன்னன் படை சூழப்பெற்றிருந்த மலைக் குவட்டைக் கதிரவன் மறையும் நேரத்தில் அணுகிய படை,

“ வேலாலும் வில்லாலும் வேலி கோலி
வெற்பதனை விடியளவும் காத்து நின்றே”[94]
[கோலி-வளைத்து]

என்று கூறப்பெறுதலாலும இதனை அறியலாம்.

போர்க்களத்தில் தோற்றோடிய அரசர் விட்டுப்போன குடை, சாமரம் முதலியவற்றை வென்ற வேந்தர் கைப்பற்றி அவற்றைப பெருமையுடன் பயன்படுத்துவர் என்பதனை இந்நூலால் அறிகின் றோம். குலோத்துங்கன் காஞ்சியில் அமைக்கப்பெற்ற சித்திர மண்டபத்தில் வீற்றிருந்தபொழுது,

“ வீழ்ந்த மன்னவர் வெந்நிடு முன்இடு
தங்கள் பொற்குடை சாமரை என்றிவை
தாங்கள் தங்கரத் தாற்பணி மாறவே”[95]

[வெந்நிடுதல்-புறமுதுகிடுதல்; இடு-போர்க்களத்தில் விட்டுச் சென்ற; பணிமாற-குற்றேவல் புரிய]

92. தாழிசை-370
93. தாழிசை-362.
94. தாழிசை-464.
95. தாழிசை-325.

என்று கவிஞர் கூறுவதைக் காண்க. தோற்றோடிய அரசர்கள் மலைக்குகைகளிலும், மலைப்பள்ளத்தாக்குகளிலும் மறைவது அக்கால இயல்பாக இருந்தது.[96] காடு, மலை, கடல் முதலியவை சிறந்த அரண்களாக மதிக்கப்பெற்றிருந்தன.

"கானரணும் மலையரணும் கடலரணும்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தான்அரணம் உடைத்தென்று கருதாது
வருவதும்அத் தண்டு போலும்."[97]

[கான்-காடு; அரண்-பாதுகாப்பு; அரணம்-பாதுகாப்பு; தண்டு-சேனை]

என்ற தாழிசையால் இதனை அறியலாம். தக்க அரண்கள் அமைந்துள்ள கலிங்கநாட்டை எளிதில் வெல்லக் கருதி கருணாகரனின் படை வருகின்றது போலும் என்று அனந்தபன்மன் இகழ்ந்து உரைக்கின்றான்.

சினங்கொண்ட படை வீரர்கள் பகையரசர்களின் நாட்டினுள் எதிர்ப்பட்ட ஆடவரையெல்லாம் அழிப்பது அக்கால வழக்கமாகும். இதனை,

"எழுகலிங்கத் தோவியர்கள் எழுதிவைத்த
சுவர்கள்மேல் உடல்அன்றி உடல்கள் எங்கும்
தொடர்ந்துபிடித்(து) அறுத்தார்முன் அடைய ஆங்கே"[98]

[அடைய-முற்றும்]

என்ற தாழிசையால் அறியலாம். கலிங்க நாட்டுச் சுவர்களில் ஓவியர் தீட்டிய உடல்களைத் தவிர ஏனைய வீரர்களின் உடல்களையெல்லாம் சோழ வீரர்கள் அழித்தொழித்தனர் என்று கூறுகின்றார் கவிஞர்பிரான். போரில் பிடித்த அரசர்களை விலங்கிடலும் அக்கால இயல்பாக இருந்தது. இதனை,

"கதங்க ளிற்பொருதி றைஞ்சி டாவரசர்
கால்க ளில்தளையும்"[99]

[கதம்-சினம்; இறைஞ்சுதல்-வணங்கும்; தளை-விலங்கு]

96. தாழிசை-449, 451.
97. தாழிசை-377.
98. தாழிசை-470.
99. தாழிசை-274.

என்ற தாழிசைப் பகுதியால் அறியலாம். குலோத்துங்கனின் புகழ் மேம்பாட்டைக் கூறுங்கால் பகை வேந்தர்களின் கால்களின் தளைகளும் செய்யுட்களின் யாப்புத் தளைகளும் அன்றி வேறு எவ்விதத் தளைகளும் இல்லை என்று கவிஞர் நயம்பட உரைப்பது இக்கூற்று வெற்றிகொண்ட அரசர்கள் தாம் வென்ற இடத்தில் வெற்றித் தூண் நாட்டலும் அக்கால வழக்கமாக இருந்தது. கலிங்கநாட்டில் கருணாகரன் இவ்வாறு செய்தமை,

> " கடற்கலிங்கம் எறிந்துசயத்
> தம்பம் நாட்டி"[100]

என்ற தாழிசைப் பகுதியால் அறியலாம். அங்ஙனமே, கடவுள் வாழ்த்துப் பகுதியில் குலோத்துங்கனைக் கூறுமிடத்தும்,

> " தனித்தனியே திசையானைத் தறிகளாகச்
> சயத்தம்பம் பலநாட்டி"[101]
>
> [தறி-கட்டுத் தறி]

என்று கூறுவதனாலும இவவழககம் அறியப்பெறும்.

**சில வழக்காறுகள் :** 'வாழ்க்கையின் திறனாய்வே இலக்கியம்' என்று கூறுவர் ஆங்கில இலக்கியத் திறனாய்வாளர் மாத்யூ ஆர்னால்டு. மக்கள் வாழ்க்கையில் எத்தனையோ பழக்க வழக்கங்கள் உள்ளன; காலத்திற்கேற்றவாறு அப்பழக்கங்கள் மாறக் கூடியவை. கலிங்கத்துப் பரணியின் மூலம் அறிந்து கொள்ளக் கூடிய ஒரு சில பழக்க வழக்கங்களைப்பற்றி ஈண்டு நோக்குவோம்.

அக்காலத்தில் அரசர் பிறந்த நாளை மக்கள் சிறப்பாகக் கொண்டாடும் வழக்கம் இருந்தது. குழந்தைகள் தினம் (நேரு பிறந்த நாள்), ஆசிரியர் தினம் (டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் பிறந்த நாள்), பிச்சைகாரர் தினம் (கலைஞர், டாக்டர் தமிழவேள் கருணாநிதி பிறந்த நாள்) இவற்றைக் கொண்டாடும் நமக்கு இது நன்கு தெளிவாகும். இத் தினங்களில் பல இடங்களில் மகிழ்ச்சி பொங்கக் கூடிய பல்வேறு நிகழ்ச்சிகட்கு ஏற்பாடு செய்யப்பெறுவதை நாம் அறிகின்றோம். அங்ஙனமே அக்

100. தாழிசை-471.
101. தாழிசை-10.

காலத்தில் அரசன் மக்கள் மகிழ்ச்சி பெருகுவதற்கு பல நற் செயல்களைப் புரிவான். அந்நாள் "வெள்ளணி நாள்" என்றும் "நாண் மங்கலம்"[102] என்றும் வழங்கப்பெறும். குலோத்துங் கன் ஆட்சியில் ஒரு நாள்போல் எந்நாளும் மக்கள் மகிழ்ச்சி பெருக வாழ்ந்து வந்தனர் என்பதைக் கூற விரும்பும் ஆசிரியர் சயங்கொண்டார்,

" எற்றைப் பகலினும் வெள்ளணிநாள்
இருநிலம் பாவை நிழலுற்ற
கொற்றக் குடையினைப் பாடீரே
குலோத்துங்கச் சோழனைப் பாடீரே."[103]

[பகல்-நாள்; வெள்ளணி நாள்-அரசர் பிறந்த நாள்; நிலப் பாவை-மண்மகள்; நிழல்-துன்பம் நீங்கி இன்பம் தருதல்]

என்று பேய்களின் வள்ளைப் பாட்டாகக் கூறுவதைக் காணலாம். அரசன் பிறந்தநாள் கொண்டாட்டத்தில் மக்கள் மகிழ்ந்திருப்பது போல எந்நாளும் மகிழ்ந்திருந்தனர் என்பதைக் குறிப்பிடும் கவிஞர் திறம் போற்றி மகிழத்தக்க தாகும்.

நிமித்தங்கள் காணலில் அக்கால மக்கள் நம்பிக்கை கொண் டிருந்தனர் என்பதை இந்நூலால் அறிகின்றோம். கண் துடித்தல் போன்ற நற்குறி, தீக்குறி கண்டு பயன் உணர்தலும், ஆந்தை கூவல் முதலிய தீநிமித்தம் கண்டு பயன் உணர்தலும், கனுப்பயன் உணர்தலும் அக்கால வழக்கங்களாக இருந்தன.[104] இவற்றை யெல்லாம் கவிஞர் பேயின் வாயில் வைத்துப் பேசும் திறம் பெரிதும் போற்றத் தக்கது.

அக்கால வீரர்கள் தெய்வத்தினிடம் வரம் வேண்டுங்கால், அதற்கு மாறுகத் தம் உறுப்புக்களை யரிந்து கொடுத்து வழிபாடு செய்தனர் என்பதை,

" சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பபரிந்து தருதும் என்று
பரவும்ஒலி கடல்ஒலிபோல் பரக்கு மாலோ"[105]

[ தறுகண்-அஞ்சாமை; பரவுதல்-துதித்தல்; பரக்கும்-பரவும்.]

102. புறப்பொருள் வெண்பா மாலை-212.
103. தாழிசை-533.
104. தாழிசை-222-226.
105. தாழிசை-109.

என்ற தாழிசையால் அறியலாம். இதனை இக்காலத்தில் காவடி எடுப்போர் நாக்கிலும் உடலிலும் அம்புகளைக் குத்திக் கொள்வதுடன் ஒப்பிட்டு உணரலாம். தெய்வத்திற்கு எருமைக் கடாவைப் பலியிடுங்கால் உடுக்கை முழங்குவர்.[106] மணவினை முதலிய மங்கலச் செயல்களில் அறுகம்புல்லை நெல்லுடன் இடல் மங்கலமாகக் கருதப்பெற்றது. குலோத்துங்கனுக்கு மறையவர் முடிசூட்டியபோது இவ்வழக்கம் மேற்கொள்ளப் பெற்றதனால் இதனை அறியலாம்.[107] கோயில், அரண்மனை முதலியவற்றிற்குக் கடைகால் பறித்த உடன் அதில் பொன் மணி முதலியவற்றை இட்டுப் பின்னர் அடித்தளம் அமைத்தல் வழக்கமாக இருந்தது.[108]

அரசர் போன்ற உயர்ந்தோருக்கு விருந்து அளிக்குங்கால் பகல் விளக்கு வைத்தலும், பரப்பிய ஆடையின்மீது பொற்கலத்தை வைத்து அதில் உணவிடுதலும் அக்கால வழக்கங்களாகும்.[109] இன்றும் கோயிலில் கடவுளர்க்குப் 'பாவாடை போடுதல்' என்ற வழக்கம் இருந்து வருதல் ஈண்டு கருதத்தக்கது. வெறு நிலத்தில் உண்கலம் பரப்ப வேண்டின் நிலத்தில் நீர் தெளித்துப் பின் கலம் வைத்தல் வழக்கமாக இருந்தது.[110] கூழுக்கு வெங்காயத்தைக் கறித்துண்ணும் வழக்கம் இருந்தது.[111] அக்கால உண்கலங்களில் புளகச் சின்னம் எனப்படும் சோற்றுத் தட்டு, மண்டை என்பன சில.[112]

மகளிர்பால் வழங்கிய சில வழக்கங்களும் இந்நூலால் அறியப்பெறுகின்றன. கணவரைப் பிரிந்த மகளிர் கூடற் சுழி இழைத்து, அச்சுழிகூடின் கணவர் விரைந்து வருவ ரென்றும், அது கூடாதாயின் அவர் வரக் காலம் நீட்டிருக்கும் என்றும் கருதும் வழக்கம் இருந்ததாகத் தெரிகின்றது.[113] கணவர் இறந்த பின் கற்புடைப் பெண்டிர் அக் கணவருடன் தீக்குளிக்கும் வழக்கமும் அக்காலத்தி லிருந்தது. இதனைப் போர்களக் காட்சியுள் ஒன்றனுக்கு உவமை கூறுங்கால்,

"காந்தருடன் கனல்அமளி அதன்மேல் வைகும்
கற்புடைமா தரைஒத்தல் காண்மின் காண்மின்.[114]

[காந்தர்-கணவர்; கனல்-தீ; அமளி-படுக்கை; வைகும்-தங்கும்]

106. தாழிசை-114.
107. தாழிசை-264.
108. தாழிசை- 98
109. தாழிசை-561.
110. தாழிசை-557.
111. தாழிசை-579.
112. தாழிசை-558.
113. தாழிசை- 51.
114. தாழிசை-480.

எனவரும் தாழிசைப் பகுதியால் அறியலாம். சூல் மகளிர் சுவை யுணர்ச்சி மிக்கவர் என்பதனைப் பேய்கள் மேல் வைத்து,

" ............கடை வாயைத்
துடைத்து நக்கிச் சுவைகாணும்
சூற்பேய்க் கின்னும் சொரியீரே"[115]

[சூல்-கருப்பம்; சொரியீர்-வாருங்கள்]

எனக் கூறி உணரத்தப்பெற்றமையால் அறியலாம். நெல் முதலியன குற்றுங்கால் அக்கால மகளிர் 'வள்ளைப்பாட்டு' பாடிக் கொண்டு குற்றும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர்.[116]

அக்காலத்தில் சமணர்களிடம் நாள்தோறும் நீராடும் வழக்கம் இல்லை; அவர்கள் ஆடையும் உடுப்பதில்லை; தலையை மழித் திருக்கும் அவர்கள் ஒரு வேளைதான் உண்பர்.[117] புத்தர்கள் தலையை முண்டித்துக் கொண்டு செவ்வாடை போர்த்திருப்பர். அவர்களுள் ஒரு சாரார் தோலைப் போர்க்கும் வழக்கத்தையும் மேற்கொண்டிருந்தனர்[118]

மைகொண்டும் மந்திரம் கற்றும் புதையல் காண்போராகவும், நோய் தீர்ப்போராகவும் இருப்பவர் 'பார்வைக்காரர்' என்று பெயர் பெற்றிருந்தனர். "பார்வைப் பேய்"[119] என்ற தொடரால் இதனை அறியலாம்; இக்காலத்தில் நாட்டுப் புறத்தில் 'பில்லி சூனியக்காரர்' என்று வழங்கப்படுபவர்களை அவர் களுடன் ஒப்பிடலாம். 'நோக்கர்' என்று வழங்கப்பெறும் ஒரு வகையினர் இறந்தார் வீட்டின் முன்னர் நீண்ட தாரையைக் கொண்டு ஊதும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர்.[120] நீண்ட குழல் வடிவமான, நீரைச்சொரியும் துருத்தி என்னும் கருவியினைத் தோளில் சுமந்து கொண்டு தொழில் புரிவோர் 'துருத்தியாளர்' எனப்பட்டனர்.[121]

காட்டில் வேட்டையாடுங்கால் பிடித்துக் கொணர்ந்த காட்டுப் பன்றியைத் தொழுவில் அடைத்துக் காத்து நிற்கும் வழக்கம் அக்காலத்தில் நிலவியது. படைசூழ மலைக்குவடு பற்றியிருந்த கலிங்க மன்னனைப் படைகள் விடியளவும் காத்து ்ன்றன என்பதை உணர்த்தும் கவிஞர்,

---

155. தாழிசை-571.
116. தாழிசை-525—544.
117. தாழிசை-466, 566.
118. தாழிசை-468, 567.
119. தாழிசை-568.
120. தாழிசை-573.
121. தாழிசை-435.

"தோலாத களிற்றபயன் வேட்டைப் பன்றி
தொழுவடைத்துத் தொழுவதனைக் காப்பார் போல"[122]

[தோலாத-தோல்வியுறாத ; தொழு-விலங்குகளை அடைக்கும் பெரிய கூடு]

என்று இதனை உவமையால் பெறவைத்தமை காண்க.

**ஆடை, அணி முதலியன** இனி, அக்கால மக்கள் அணிந்த ஆடை, அணி முதலியவற்றைக் காண்போம். மகளிர் மென்மையான ஆடைகளை அணிந்திருந்தனர். இது,

"கலவிக் களியின் மயக்கத்தால்
கலைபோய் அகலக் கலைமதியின்
நிலவைத் துகிலென்(று) எடுத்துடுப்பீர்"[123]

என்ற தாழிசையால் புலனாகின்றது. குழந்தை நடை பயின்று மழலை மொழியும் பருவத்தில் காப்புக் கடவுளாகிய திருமாலின் ஐம்படையாகிய திருவாழி, திருச்சங்கு, தண்டு, வாள், வில் என்னும் ஐந்தன் உருவைப் பொன்னால் இயற்றி, அவற்றைக் கோத்து அணியும் வழக்கத்தையும் காண்கின்றோம். குலோத்துங்கன் பிறந்து தளர்நடை பயின்றபொழுது,

"தண்டுதனு வாள்பணிலம் நேமியெனும் நாமத்
தன்படைக ளானதிரு ஐம்படைத ரித்தே"[124]

[தனு-வில்; பணிலம்-சங்கு; நேமி-சக்கரம்; தன்-திருமாலின்; ஐம்படை-ஐம்படைத் தாலி]

எனக் கூறப்பெறுவதனால் இதனை அறியலாம். இஃது ஐம்படைத் தாலி எனக் குறிப்பிடப்பெறுவதால், இவ்வைந் துருவான் இயன்ற அணியைக் கோத்துக் கழுத்தில் அணிவதே மரபாகும் என்பது அறியக்கிடக்கின்றது. வளை, பாடகம், விடுகம்பி, இரட்டைவாளி என்னும் காதணி, தோளில் அணியும் வாகு வலயம், ஒற்றைச் சரடு, பல நிறமணிகள் கோத்த வன்னசரம், மணிமாலை, முத்து மாலை, பதக்கம், மகரக்குழை என்னும் காதணி, நெற்றிப்பட்டம் முதலியவை மகளிரின் அணிகளாகத் திகழ்ந்தன. இவைகளைப் பேய்கள் அணிந்தவையாகக் கூறுகின்றார் கவிஞர்.[125]

122. தாழிசை-464.
123. தாழிசை-34.
124. தாழிசை-239.
125. தாழிசை-510-514.

அக்காலத்தில் உறங்குவதற்கான மெத்தைகள் ஐந்து பொருள் களால் இயற்றப்பெற்றிருந்தன. வெண்பஞ்சு, செம்பஞ்சு, இலவம் பஞ்சு, மயிர், அன்னத்தின் தூவி ஆகிய ஐந்து பொருள்களே மெத்தைகளில் பயன்படுத்தப்பெற்றன. அரசன் முதலியோர் படுக்கையில் இந்த ஐவகை மெத்தைகளும் ஒன்றன்மேல் ஒன்ருக இடப்பெறும். இதனுல்தான் இப்படுக்கை 'பஞ்ச சயனம்' என்று வழங்கப்பெற்றது போலும். காளி தேவி பேய்கள் சூழப் பஞ்ச சயனத்தின்மீது வீற்றிருந்தாளாகக் கூறப்பெறுவ தனுல்[126] இதனை அறியலாம். 'தீபக்கால் கட்டில்' என்ற ஒரு வகைக் கட்டில் பயன்படுத்தப்பெற்றது.[127] கட்டிலின் கால்கள் தீபக்கால் வடிவில் வளைந்திருந்தன போலும்.

மகிழ்ச்சி மிகுதியால் ஆடையை மேல் நோக்கி எறிந்து விளையாடல் பண்டை மக்களின் விளையாட்டுக்களுள் ஒன்ருகும். பேய்கள் பரணிக் கூழ் அட்டு உண்டு மகிழ்ந்த விடத்து அவை அவ்வாறு ஆடினதை,

"தூசியும் இட்டுநின்று ஆடினவே."[128]

[தூசி-மேலாடை]

என்று கவிஞர் குறிப்பிடுவதனுல் இதனை அறியலாம். எண்ணெ தேய்த்துக் குளிக்கும்போது எண்ணெப் பசையைக் களிமண் இட்டுத் தேய்த்துப் போக்கும் இயல்பினையும் குறிப்பிடுகின்ருர்.[129]

**பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் :** இனி, அக்கால மக்கள் பொழுது போக்காக மேற்கொண்டிருந்த செயல்களைக் கூறு வேன். அரசர்கள் புலவர்களுடன் இலக்கியச் சுவையில் ஈடுபட்டு இன்புறுதல் வழக்கமாக இருந்தது. குலோத்துங்கன் இவ்வாறு மகிழ்ந்திருந்ததைக் கவிஞர்,

"கலையினெடும் கலைவாணர் கவியினெடும்
இசையினெடும் காதன் மாதர்
முலையினெடும் மனுநீதி முறையினெடும்
மறையினெடும் பொழுது போக்கி."[130]

[கலை-பலகலை நூல்கள் ; கவி-செஞ்சொற் கவிகள் ; இசை-பண்]

126. தாழிசை-154.
127. தாழிசை-153.
128. தாழிசை-586.
129. தாழிசை-507.
130. தாழிசை-277.

என்று காட்டுவதனுல் இதனை அறியலாம். இசையும், ஏனைய கலைகளும் ஏற்றம் பெற்றிருந்தன என்ற குறிப்பும் இதனுல் அறியப் பெறுகின்றது. இதனைத் தவிர, மக்கள் கோழிச் சண்டை, யானைப் போர், மற்போர், வாதப்போர் முதலியவற்றையும் பொழுது போக்காகக் கொண்டிருந்தனர்.

"வருசெருவொன் றின்மையினுன் மற்போரும்
சொற்புலவோர் வாதப் போரும்
இருசிறைவா ரணப்போரும் இகன்மதவா
ரணப்போரும் இனைய கண்டே"[131]

[செரு-போர்; சிறை வாரணம்-கோழி; மதவாரணம்-யானை]

என்ற தாழிசையால் இவை அறியப்பெறும். இக் காலத்தில் எங்கும் பெருவழக்காக இருக்கும் 'கவியரங்கம்', 'பட்டி மன்றம்' போன்ற நிகழ்ச்சிகளை இவற்றுடன் ஒப்பிட்டு அறியலாம்.

இறுவாய்: இதுகாறும் கூறியவற்ருல் 'கலிங்கத்துப்பரணி' என்னும் அழகிய நூலை ஊன்றிப் பயிலுங்கால் சோழர்கால நாட்டுநிலை, மக்கள் வாழ்க்கை நிலை, அவர்களிடம் நிலவின பழக்க வழக்கங்கள் முதலிய செய்திகளை அறிகின்ருேம். அரசர் வழி வரலாற்றை மட்டிலும் அறிவது உண்மையான வரலாறு அன்று என்பதையும், நாட்டில் நடைபெறும் எல்லாச் செய்திகளும் அடங்கிய தொகுப்பே உண்மையான வரலாறு ஆகும் என்பதையும் நாம் உணர்தல் வேண்டும். 'கலிங்கத்துப் பரணி' இவற்றையெல்லாம் காட்டும் இலக்கியக் கண்ணுடியாக, வரலாற்றுக் கருவூலமாக, கலைச் செல்வமாகத் திகழ்கின்றது என்று கூறி அமைகின்றேன். வணக்கம்.

131. தாழிசை-276.

# 5. பரணி காட்டும் சுவைகள்

ஐந்தாம் பொழிவு

தமிழன்பர்களே ! தாய்மார்களே !

வணக்கம். இன்று நடைபெறுவது கலிங்கத்துப் பரணிபற்றிய ஐந்தாம் பொழிவு என்பதை நீங்கள் அறிவீர்கள். சென்ற சொற் பொழிவில் இந்நூலில் காணக் கிடக்கும் பல்வேறு வரலாற்றுக் குறிப்புக்களை எடுத்துக் காட்டினேன். நாம் எல்லோரும் அக் குறிப்புக்களில் சுவைபடக் காட்டும் கவிஞரின் கற்பனைத் திறனைக் கண்டு மகிழ்ந்தோம். இன்று புதியதொரு உலகில் புகப்போகின் றோம். படிப்போரை மகிழ்வித்து அவர்களின் மனமாசுகளை நீக்கக் கூடிய 'சுவைகளை'ப்பற்றி அறிந்து கொள்ளப் போகின் றோம். இறையநுபவத்திற்கு அடுத்த நிலையில் வைத்தெண்ணக் கூடியது இலக்கியச் சுவையே என்று கூறின் அஃது எள்ளளவும் மிகையாகாது. இலக்கியச் சுவையில் ஈடுபட்டு மனத்தை அதில் பறிகொடுத்த புலவர் ஒருவர்,

" இருந்தமிழே உன்னால் இருந்தேன்; இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்"[1]

என்று பேசுகின்றார். நம்முடைய புதுவைப் புரட்சிக் கவிஞர் "தமிழே நீ என்றன் ஆவி"[2] என்று தமிழையும் தன் உயிரை யும் ஒன்றாக வைத்துப் போற்றுகின்றார். தம் வாழ்நாள் முழு வதும் தமிழ் இலக்கியத் தேனை மாந்திய அக்கவிஞர்,

" கன்னற்,
பொருள்தரும் தமிழே நீஓர்
பூக்காடு; நானோர் தும்பி"[3]

என்று தம் அநுபவத்தை வெளியிடுகின்றார்.

---

1. தமிழ்விடு தூது - கண்ணி - 151.
2. அழகின் சிரிப்பு-தமிழ். செய்-4.
3. ஷை செய்-10.

நாம் ஆழ்ந்து சிந்தித்தால் 'சுவை' என்பது ஒரு புதிய கருத் தன்று என்பது தெளிவாகும். வண்ணப்படத்தில் வரையப் பெற்ற பன்றி ஒன்று சேற்றில் மூழ்கி வெளியேறிய தோற்றத்தை அப்படியே ஓவியர் காட்டுவதாக வைத்துக் கொள்வோம் அதைப் பார்க்கும் நாம் அதனையே பன்முறை உற்று நோக்கி ஒரு வித இன்பத்தை அடைவோம் அல்லவா? ஆயினும், பன்றி ஒன்று சேற்றில் புரண்டு எழுந்து சேறும் அழுக்குமாக நம் எதிரில் தோன்றினால் நாம் அக்காட்சியைக் கண்டு இன்பம் அடைகின் றோமா? இல்லையன்றோ? சில சமயம் அக் காட்சியைக் காணச் சகியாமல் அருவருப்புடன் முகத்தைக் கூட வேறு பக்கமாகத் திருப்பிக் கொள்ளுகின்றோமன்றோ? அதுவும் சேற்று நாற்றமும் சேர்ந்து வீசத் தொடங்கினால் சொல்ல வேண்டியதில்லை. இதி லிருந்து பெறப்படுவது என்ன? கலை நமக்கு ஊட்டுவது ஓர் இன்ப உணர்ச்சியின் விளைவு என்பதை நாம் அறிகின்றோ மன்றோ? இதனையே இலக்கண நூலார் 'சுவை' (ரஸம்) என்று பெயரிட்டுள்ளனர். சுவையை ஒன்பது வகையாகப் பிரித்தும் காட்டியுள்ளனர் அவர்கள். இந்த ஒன்பதிலும் அவர்கள் எல்லா வித உணர்ச்சி விளைவுகளையுமே அடக்கியிருப்பதுதான் வியப் பினும் வியப்பே யாகும் நம்மவர்கட்கு இதில் சிறிதேனும் சிரமம் இல்லை. ஏனெனில், இசையினை ஏழே சுரத்தின் சேர்க்கையாக உணர்த்திய அதிசயத்தை வேறு எந்த நாட்டில் காண முடியும்? ஆயினும், அன்பர்களே, சுவையைப்பற்றிப் பேசுவதும் (எழுது வதும்) எளிதான செயலன்று என்பதை உங்கட்குத் தெரிவிக்க விரும்புகின்றேன் முதலில் கேட்போருக்குக் கருத்துக்களின் போக்கு சுவையாய் அமைதல் வேண்டும் ஆங்காங்கே சுவை களின் நுட்பங்களை விளக்கத் தகுந்த எடுத்துக்காட்டுகள் எளி தாகக் கிடைத்தல் வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக யான் கையாளும் மொழியும் நடையின் போக்கும் கேட்போரைப் பொருளினுள் இழுத்துச் செல்லுதல் வேண்டும்.

இன்றைய பொழிவில் 'கலிங்கத்துப்பரணி' காட்டும் சுவைகளை உங்கட்கு எடுத்துக்காட்ட முன்வந்திருக்கின்றேன். நூலுக்குள் நுழைந்து சுவை காண்பதற்கு முன்னதாகச் சுவைகளைப்பற்றிய சில அடிப்படைக் கருத்துக்களை உங்கள் முன் வைக்க எண்ணு கின்றேன் இவைகளைத் தெளிவாகப் புரிந்து கொண்டால்தான் நூலில் காட்டப்பெறும் நிகழ்ச்சியின் சுவைகளில் நன்கு ஈடுபட்டு அநுபவிக்க முடியும் என்று கருதுகின்றேன். சுவைகளின் நுட்ப மனைத்தும் கண்ணாலும் செவியாலும் திட்பமாக அறியவல்ல நுண்ணறிவுடைய பெருமக்களுக்கே புலப்படும் என்றும், ஏனை

யோர்க்கு அஃது ஆராய்ந்தறிதற்கரியது என்றும் தொல்காப்பியரும் குறிப்பிட்டுள்ளார்.

"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே."[4]

என்ற நூற்பாவில் அஃது அறியப்பெறும்.

**சுவை விளக்கம் :** சுவை என்பது என்ன? அது காணப்படு பொருளால் காண்போர் அகத்தின் வருவதோர் விகாரம் என்பர் இளம்பூரணர். 'இருவகை நிலத்தின் இயல்வது சுவையே' என்ற செயிற்றிய நூற்பாவினை எடுத்துக் காட்டி, 'உய்ப்போன் செய்தது காண்போர்க்கு எய்துதல்'என்ற வேறொரு செயிற்றிய நூற்பாவால் விளக்குவர். ஈண்டு உய்ப்போன் என்றது நடிகனை. நடிகன் செய்யும் அபிநயம் முதலியவற்றால் அச்சுவை காண்போரிடம் உண்டாதல் கூடும் இதனை வேறொருவகையில் மேலும் விளக்க முயல்கின்றேன். இனிப்பு, கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு என்பன 'அறு சுவைகள்' என்பதை நாம் அறிவோம். இவை நாவாகிய பொறி வழியே ஒருவரது உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளாகும். இவ் வுணர்ச்சிகளைத் தரும் பொருள்கள் முறையே கரும்பு, வேம்பு, புளி, உப்பு, கடுக்காய், மிளகு போன்றவைகளாகும் என்பதை நாம் அறிவோம். இவை 'சுவைப் பொருள்கள்' என்று வழங்கப்பெறும். கரும்பினை நாவாகிய பொறியால் சுவை உணருமிடத்து இனிப்புச் சுவையுணர்ச்சி தோன்றுகின்றது. அங்ஙனம் தோன்றுங்கால் அது காரணமாக விருப்புத் தோன்றுகின்றது இங்ஙனமே, வேம்பினைச் சுவைத்து உணருங்கால் கைப்புணர்ச்சி தோன்றுகின்றது என்பது நமக்குத் தெரியும், அது தோன்றுங்கால் வெறுப்புத் தோன்றுகின்றது என்பதையும் நாம் உணர்கின்றோம். இங்ஙனம் உள்ளத்தே தோன்றும் விருப்பு வெறுப்புக்களே 'உள்ளக் குறிப்புக்கள்' என்று வழங்கப்பெறுகின்றன. இத்தகைய உள்ளக் குறிப்புக்களைக் கொண்டு இச்சுவையுணர்ச்சிகள் வெளிப்படுங்கால் முகமலர்ச்சி, முகச்சுளிப்பு முதலிய மெய்க்குறிகளைக் கொண்டு பிறர் அறியுமாறு வெளிப்படுகின்றன. இந்த மெய்க் குறிகளையே 'விறல்'[5] அல்லது

4. தொல். பொருள்-மெய்ப்-நூற். 27.

5. விறல், பத்து வகைப்படும். அவை மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்கமெய்தல், வியர்த்தல், தேற்றம், (தொடர்ச்சி அடுத்த பக்கம்)

'சத்துவம்' என்று வழங்குவர் இலக்கண நூலார். எனவே, சுவையின் இயல்பினை அறியுமிடத்து, காரண காரிய முறையாக சுவைக்கு நிலைக்களனாய பொருள், சுவை, குறிப்பு, விறல் என நான்கு வகைப் பொருள்களை அறிகின்றோம்.[6] நாம் ஒரு காவியத்தைப் படிக்குங்கால் நம்மிடையே உண்டாகும் இன்ப உணர்ச்சியே சுவையாகும். மனம் உணர்ச்சியால் பூரித்திருக்கும்பொழுது அதில் ஓர் ஒளி விசும். அதுவே இன்பம்; அதுவே ஆன்ம ஒளி. ஆன்மா அங்குத்தான் பிரதிபலிக்கின்றது. அந்நிலையினை அடைவதற்கு மனம் சலனமற்றிருக்க வேண்டும். அந்த அசைவற்ற நிலை மனத்திற்குப் பல விதங்களில் உண்டாகலாம். யோகியர் தம் மனத்தை வசப்படுத்தி நிலைநிறுத்திச் சமாதி நிலையில் ஆன்ம ஒளியைப் பெறுகின்றனர். உறக்கத்திலும் மனம் சோர்ந்து அசைவற்றுக் கிடக்கும்பொழுது அங்கும் ஆன்மா தோற்றமளிக்கின்றது; இன்பமும் தலைக்காட்டுகின்றது. காவியங்களைப் படித்து உணர்ச்சிப் பெருக்கால் மனம் பூரிக்கும்பொழுது ஆன்ம ஒளி வீசும்; மனத்திற்கும் மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படும். எனவே, காவியத்தைப் படித்து அதில் மனத்தை ஈடுபடுத்துபவர்களிடம் சுவையின் தன்மை தெளிவாகப் புலனாகும் என்பதனை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகின்றேன்.

**சுவைகளின் தொகை :** இனி சுவைகளின் தொகையை இன்னதெனக் காட்டுவேன். தொல்காப்பியர் சுவைகளை எட்டு என்று வரையறைப்படுத்திப் பேசுவர். அவை : நகை, அழுகை, இளிவரல், வியப்பு, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பனவாகும். இவற்றை,

(முன் பக்கத் தொடர்ச்சி)
களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரல் சிதைவு என்பனவாகும். அவ்விறல், சுவைகளிலே மனக்குறிப்பு உளதாய வழி உடம்பிலே தோற்றும்; உடம்பினும் முகத்து மிகத் தோற்றும்; முகத்தின் மிகத் தோற்றும் கண்களில்; கண்ணின் மிகத்தோற்றும் கண்ணின் கடையகத்து. இவை எட்டென்பது வடநூலார் மதம். (சிலப். பக். 84. உ. வே. சா. அய்யர் பதிப்பு).

6. இங்ஙனம் இலக்கண நூலார் கூறும் சுவைக்கப்படும் பொருள், சுவை, குறிப்பு, விறல் என்பவற்றையே உளவியலார் முறையே பொருள் (Object) புலன் காட்சி (Perception) பொது உணர்வு (அநுபவம்), உடல்நிலை மாறுபாடுகள் (Organic states) என்று கூறுவர்.

" நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டாம் மெய்ப்பா டென்ப."[7]

என்ற அவர் கூறும் நூற்பாவால் அறியலாம். இந்த எட்டுச் சுவைகளும் சுவைக்கப்படும் பொருள், சுவை, குறிப்பு, விறல் என்ற வகைகளால் எண்ணான்கு முப்பத்திரண்டு ஆகும் என்று உரையாசிரியர்கள் விளக்கியுள்ளனர். அவர்கள் கூறும் விளக்கத்தையும் உங்கட்குக் காட்ட விரும்புகின்றேன்.

**இளம்பூரணர் கூறுவது :** முதலில் இளம்பூரணர் கூறுவதைக் குறிப்பிடுகின்றேன். "பேயானும் புலியானும் கண்டானொருவன் அஞ்சிய வழி, மயக்கமும், கரத்தலும், நடுக்கமும் வியர்ப்பும் உளவாகின்றே. அவற்றுள் அச்சத்திற் கேதுவாகிய புலியும் பேயும் சுவைப்படு பொருள். அவற்றைக் கண்ட காலந் தொட்டு நீங்காது நின்ற அச்சம் சுவை. அதன்கண் மயக்கமும் கரத்தலும் குறிப்பு. நடுக்கமும் வியர்ப்பும் சத்துவம். இவற்றுள் நடுக்கமும் வியர்ப்பும் பிறர்க்குப் புலனாவது என்று கொள்க; ஏனைய மனநிகழ்ச்சி. பிறவும் அன்ன." என்பது.

**பேராசிரியர் கூறுவது :** அடுத்து, பேராசிரியர் கூறுவதையும் குறிப்பிடுகின்றேன்."சுவைக்கப்படும் பொருளும், அதனை நுகர்ந்த பொறியுணர்வும், அது மனத்துட் பட்டவழி உள்ளத்து நிகழும் குறிப்பும், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தாற் கண்ணீர் அரும்பலும் மெய்ம்மயிர் சிலிர்த்தலும் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய சத்துவங்களுமென நான்காக்கி, அச்சுவை எட்டோடும் கூட்டி ஒன்று நான்கு செய்து உறழ, முப்பத்திரண்டாம் என்பது. எனவே, சுவைப் பொருளும், சுவையுணர்வும், குறிப்பும், விறலுமென நான்காயின. விறல் எனினும் சத்துவம் எனினும் ஒக்கும். பொறியுணர்வுகள் அவ்வச் சுவையெனப் படும்."

ஈண்டுக் காணும் முப்பத்திரண்டும் ஒருவகை.

7. தொல். பொருள். மெய்ப். 3 "சுவையெனினும் மெய்ப்பாடெனினும் ஒக்கும். அச்சமுற்றான்மாட்டு நிகழும் அச்சம் அவன்மாட்டுச் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடெனக் கொள்ளப்படும். மெய்யின்கண் தோன்றலின் மெய்ப்பாடாயிற்று" (இளம்பூரணர்.)

இனி, மற்றொரு வகையிலும் இச் சுவைகள் முப்பத்திரண்டாகிய வகையினைப்பெறும். அது வருமாறு :

| சுவைகள் | சுவைதோன்றும் நிலைக்களன்கள் (பொருள்கள்) |
|---|---|
| 1. நகை | எள்ளல், இளமை, பேதமை, மடன். |
| 2. அழுகை | இளிவு, இழவு, அசைவு, வறுமை. |
| 3. இளிவரல் | மூப்பு, பிணி, வருத்தம், மென்மை. |
| 4. மருட்கை | புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம். |
| 5. அச்சம் | அணங்கு, விலங்கு, கள்வர், இறை. |
| 6. பெருமிதம் | கல்வி, தறுகண், இளமை, கொடை |
| 7. வெகுளி | உறுப்பறை, குடிகோள், அலை, கொலை. |
| 8. உவகை | செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு. |

இங்குக் காணும் முப்பத்திரண்டும்[8] மற்றொரு வகை

**சுவைகளின் தோற்றம் :** இனி, சுவைகளின் தோற்றத்தைப் பற்றியும் ஈண்டு விளக்க முற்படுகின்றேன். சுவைகளின் தோற்றத்தினையும் அவற்றின் தொகையினையும் தொல்காப்பியர்,

> " பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
> கண்ணிய புறனே நானான்கு என்ப"[9]
>
> [பண்ணை—விளையாட்டு ஆயம்]

என்ற நூற்பாவால் குறிப்பிடுவர், மெய்ப்பாடு என்பது 'பண்ணை' என்பதன் வழியாகத் தோன்றும் (பண்ணினையுடையது 'பண்ணை'); அவை முப்பத்திரண்டு பொருளாம். அவற்றால் கருதப்பெறும் பொருட்பகுதி பதினாறாக அடங்கும் என்பது இந் நூற்பாவில் குறிக்கப்பெறும் பொருட்சுருக்கமாகும். இது நாடக வியலார் கொள்கை என்பதும், தொல்காப்பியர் இக்கொள்கையினை முதலில் எடுத்துக்காட்டி மேலே தம் கொள்கையினைக் கூறுகின்றார் என்பதும் உரையாசிரியர்களின் கருத்தாகும், இக் கருத்தினை டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் மறுத்திடுவர்.[10]

8. இவை மெய்ப். நூற் 4 முதல் 11 முடிய உள்ள நூற்பாக்களில் கூறப்பெற்றவை.

9. மெய்ப்-நூற். 1

10. அவர் உரை நோக்கி அறிக. ச. சோ. பாரதியார். மெய்ப்பாட்டியல் உரை. பக். 221.

**இளம்பூரணர் கூறுவது:** முதலில் இளம்பூரணர் இத் தொகைபற்றிக் கூறுவதை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன். "இங்குக் கூறிய பண்ணை என்பது விளையாட்டு; இஃது ஆகுபெயராகி விளையாடும் ஆயத்தினைக் குறிக்கும்; இந்த ஆயம் கற்று வல்ல வராய் நல்லொழுக்கம் மேற்கொண்ட அறிவுடையார் கூட்டம் அன்று; இந்த ஆயத்தாரிடைத் தோன்றுவனவாய், மேற் கூறி யாங்கு சுவை தோன்றும் எள்ளல் முதல் விளையாட்டு ஈருக வுள்ள (இரண்டாம் வகை) முப்பத்திரண்டு பொருள்களின் புறத்தே தோன்றுவனவாய் உள்ளன பதினாறு மெய்ப்பாடுகள்; அவை சுவை எட்டு, சுவைகளின் குறிப்பு எட்டு எனப் பதினா றாகும்" என்பது.

**பேராசிரியர் கூறுவது:** அடுத்து, பேராசிரியர் கூறுவதைக் குறிப்பிடுகின்றேன். "பண்ணை என்பது முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் முதலாயினோர், நாடக மகளிர் ஆடலும் பாட லும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டு. அதனைக் கூறும் நாடக வழக்கிற்கு உரிய பகுதிகள் முற்கூறி யாங்கு பொருள், சுவை, குறிப்பு, விறல் என்ற நான்கு வகை களால் ஆன முப்பத்திரண்டு (முதல் வகை) ஆகும். "வேம்பு முதலாயின பொருளும் அதனோடு நா முதலாயின பொறியும் வேறு வேறு நின்றவழிச் சுவை என்று சொல்வதே பிறவாமை யானும், இவ்விரண்டும் கூடியவழிச் சுவை என்பது பிறத்த லானும் அவை பதினாறும் எட்டு எனப்படும். இனிக் குறிப்பும் சத்துவமும் என்பனவும் உள்ள நிகழ்ச்சியும் உடம்பின் வேறு பாடும் என்பராதலின் அவ்வுள்ள நிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவமாகலின் அவை பதினாறும் எட்டாய் அடங்குமாகலின் அவை ஈரெட்டுப் பதினாறாகும்" என்பது.

எனவே, இவ்விரு உரையாசிரியர்களும் ஈண்டுக் கூறிய பண்ணை என்பது இன்னது, முப்பத்திரண்டு ஆவன இன்னவை என்பதில் பெரிதும் கருத்து மாறுபடினும் அவை பதினாறாக முடியும் பொருள் இன்னவை என்பதில் ஒன்றிய கருத்தினராக உள்ளனர் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

**சுவைபற்றிய வடநூலார் கொள்கை:** இவ்விடத்தில் சுவை களின் இயல்பினையும், அவை உண்டாகும் முறையினையும் அவற் றின் வகைகளையும்பற்றி வடமொழி இலக்கண நூலாரின் கருத்துக் களையும் குறிப்பிட விரும்புகின்றேன்.

**சுவைகளின் இயல்பும் அவை உண்டாகும் முறையும்:** முதலில் சுவைகளின் இயல்பினையும் அவை உண்டாகும் முறையினையும்

நோக்குவோம். மக்கள் உள்ளத்தில் ஒவ்வொருகால் எழும் உளவேறுபாடு பாவம் எனப்படும். பாவங்களுள் சில நிலைபெற்றிருக்கும்; பல சிறிது நேரம் நின்று மறையும். தனக்கு ஒற்றுமையுடையனவும், வேற்றுமையுடையனவுமான பிற பாவங்களால் கேடுறுமல்[11] ரசமாகிச் (சுவை) சமையும் அளவும் நிலைநிற்கும் பாவம் ஸ்தாயி பாவம் (நிலையான பாவம்) எனப்படும். அது காதல், சோகம் முதலாக ஒன்பது வகைப்படும். அதனைப் பின்னர் விளக்குவேன். உலகியலில் உண்டாகும் காதல் முதலியவற்றிற்குக் காரணமாயும், காரியமாயும், துணைக்காரணமாயும் இருப்பவை கவிஞனின் வாக்கிலும் நடிகனின் அபிநயத்திலும் அறிவிக்கப்படும் போது முறையே விபாவம் (நன்கு தோன்றச் செய்வது) என்றும், அனுபாவம் (விபாவத்துடன் இயைந்துள்ளது) என்றும், சஞ்சாரி பாவம்(துணை செய்யும் உணர்வுகள்—இது நிலைபேறில்லாத பாவம்) என்றும் வழங்கப்பெறும். அஃதாவது

காரணம்—விபாவம்
காரியம்—அனுபாவம்
துணைக் காரியம்—சஞ்சாரி பாவம்

என்று வழங்கும். இந்த விபாவ அனுபாவங்களால் வெளிப்படுகின்ற ஸ்தாயி பாவமே 'ரஸம்' அல்லது 'சுவை' என்று பெயர் பெறும்.

மேற்கூறிய விபாவம் இரு வகைப்படும். அவை 'ஆலம்பன விபாவம்'[12] என்றும், 'உத்தீபன விபாவம்'[13] என்றும் பெயர்

11. ஒற்றுமையுடைய பாவத்தால் கேடுறுமல் நிலைபெறுதலாவது: ஓர் அழகிய மாதினைக் கண்டு அவளிடம் காதல் கொண்டானொருவன், பின்னர் அவளைவிட அழகினையுடைய வேறொரு மாதினைக் காணும்போது பின்னவள்பால காதல் செலுத்தாமல், முன்னைய மாதின் நினைவுண்டாகி, அவள்பால் காதல் கொள்வது. வேற்றுமையுடைய பாவத்தால் கேடுறுமல் நிலைபெறுதலாவது: ஒரு மகள்பால் காதலித்தான் ஒருவன் பின்னர் இளமகள் ஒருத்தியின் சாவு, பிரிவு முதலியவற்றைக் கண்டவிடத்தும், 'காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா' என்றவாறு அவற்றால் சோகமும் வெறுப்பும் உண்டாகி, முன்காதலிக்கப்பெற்றவளிடத்து முன்னைய காதல் கெடாதிருப்பது.

12. ஆலம்பன விபாவம்; ஆலம்பனம் - பற்றுக் கோடு, விபாவம்-தூண்டல்; அதாவது, பற்றுக்கோடாய தூண்டல்.

13. உத்தீபன விபாவம்; உத்தீபனம்-கிளர்த்தல்; விபாவம்-தூண்டல்; அதாவது, கிளர்த்தும் தூண்டல்.

களைப் பெறும். ஒருவரின் காதல் முதலிய உள்ள நிகழ்ச்சிக்கு எப்பொருளின் சார்பு காரணமோ அப்பொருள் அதற்கு ஆலம்பனம் எனப்படும். எவ்வாறெனின், தலைவியின் உள்ளத்துள்ள காதலுக்குத் தலைவனும், தலைவனுள்ளத்துள்ள காதலுக்குத் தலைவியும் ஆலம்பன விபாவம் ஆகும். அங்ஙனமே, தலைவியுள்ளத்துள்ள சோகத்திற்குத் தலைவன் மரணமும், தலைவனுள்ளத்துள்ள சோகத்திற்குத் தலைவியின் மரணமும் ஆலம்பன விபாவம் ஆகும் என அறிதல் வேண்டும். மேற்கூறியவாறு தோன்றிய காதல் முதலியவற்றை வளர்த்து விளங்கச் செய்வது உத்தீபன விபாவம் எனப்படும். அவர்களுடைய உருவின் சிறப்பு குணநலன் செயல் அணிகலன் முதலியனவும், தென்றல் நிலா கடலொலி முதலியனவும் உத்தீபன விபாவம் ஆகும். இவற்றையே தொல்காப்பியர் செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு முதலியனவாகக் குறிப்பிடுகின்றார்.[14]

இனி, காரியமாகிய அனுபாவமும் இரண்டு வகைப்படும். ஒன்று, அகத்தது; மற்றொன்று, புறத்தது. அந்தக்கரணத்தைச் சார்ந்தனவாகிய ஸ்தம்பம், பிரளயம் முதலியவை முதற் பிரிவிற்குரியவை; அவை சாத்விக பாவம் எனப்படும்.[15] கடைக்கண் நோக்குதல் முதலிய செய்கைகள் இரண்டாம் பிரிவைச் சேர்ந்தவை. காதல் முதலிய ஸ்தாயி பாவங்களைத் துணைக்காரணமாய் நின்று வளர்க்கின்ற நலிவு, நினைவு, விரைவு முதலியன சஞ்சாரி பாவம் எனப்படும்; இதனை வியபிசாரி பாவம் என்று கூறுதலும் உண்டு. இஃது அரசனைப் பின் தொடரும் ஏவலர் போலவும், கடலில் பிறக்கும் அலைகள் போலவும் ஸ்தாயி பாவங்களைப் புலப்படுத்தி நிற்கும். தொல்காப்பியர் கூறும் புதுமுகம் புரிதல்[16] முதலியனவும், கூழைவிரித்தல் முதலியனவும்[17] அனுபாவம் என்ற வகையினுள் அடங்கும்.

14. மெய்ப்-நூற். 3 முதல் 11 முடிய நந்நான்காகப் பிரித்துக் கூறியவை. ஆசிரியர் தொல்காப்பியனார் கூறும் முதற் பொருளும் கருப்பொருளும் உத்தீபன விபாவம் ஆகும். இவை வரும் சங்கப் பாடல்களை நோக்கி இதனை அறியலாம்.

15. இது எட்டுவகைப்படும்: 1-ஸ்தம்பம்-செயலற்று நிற்றல்; 2. பிரளயம்-மூர்ச்சித்தல் ; 3. ரோமாஞ்சம்-மயிர்க்கூச்செறிதல் ; 4. சுவேதம்-வியர்த்தல்; 5. வைவர்ண்யம்-நிற மாற்றம்; 6. வேபது-உடல் நடுக்கம்; 7. அஸ்ரு-கண்ணீர் உகுத்தல்; 8. வைஸ்வர்யம்-குரல் மாறுபாடு. (5-வது அடிக் குறிப்புடன் ஒப்பிடுக.)

16. மெய்ப்-நூற். 13. 17. மெய்ப்-நூற். 14.

ஒரு நாடகம் நடிக்கும்போது அவையிலுள்ளோர் தலைவன் தலைவியரின் செயல்கள் யாவற்றையும் கண்டுகளித்து மெய்ம் மறந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்குவர். அதற்குக் காரணம், அவையோர் அந்நடிப்பில் உண்டான சுவையை உணர்ந்ததனால் ஆகும் என்பது அறியத்தக்கது. அவ்வாறே கவிஞன் ஒருவன் தன் காவியத்தில் தலைவன் தலைவியரை வருணிக்க, அவற்றை உணர்ந்து படிப்போர் சுவையை உட்கொண்டு மகிழ்வர். ஆதலின், சுவையை அநுபவிக்க விபாவம் அனுபாவம் முதலியன இன்றியமையாதவை என்பது பெறப்படுகின்றது

இவ்வாறு தோன்றி, தெளிவாகி, வளர்ந்து வருகின்ற காதல் முதலாகிய பாவங்கட்கு நல்லறிஞர் உள்ளத்தில் உண்டாகும் பிரதிபிம்பமே 'ரஸம்' அல்லது 'சுவை' எனப்படும் என்று கொள்ளல் வேண்டும் தூய வெண்ணிறத்தனவாகிய ஞாயிற்றின் கதிர்கள் செந்நிறக் கண்ணாடியில் படும்போது அவற்றிற்குச் செந்நிறம் உண்டாதல் போன்று, காரணம் முதலியவற்றிற்கும் காதல் முதலியவற்றிற்கும் பிரதி பலிக்கச் செய்யும் பொருளின் தன்மையை அனுசரித்துச் சில சிறப்பான வேறுபாடுகள் உண்டாகின்றன, அதனால் காரணம் முதலியவை விபாவம் முதலாய நிலையில் இன்ன மனிதர், இன்ன நேரம், இன்ன இடம் இவை போன்ற சிறப்பியல்புகளை விட்டுப் பொதுவாய வடிவில் அமைகின்றன. அவ்வாறே ஸ்தாயி பாவங்களுள் சோகம், இளி வரல் முதலிய மாறுபட்ட உளவேறுபாடுகளும் அனுகூல பாவங் களாக அமைகின்றன. அதனாலே, கருணம் (சோகத்தால் உண்டாவது), பீபத்ஸம் (இழிவரலால் உண்டாவது) முதலிய ரஸங்களிலும் (சுவைகளிலும்) நமக்குச் சுவையும் ஈடுபாடும் உண்டாகின்றன. மகா கவி நீலகண்ட தீட்சிதர் "நிர்வேதம் (விரக்தி), பயம், சோகம், ஜுகுப்ஸை (அருவருப்பு) முதலியவை களும் இலக்கியங்களில் ரஸத் தன்மையன ஆகின்றன" என்று கூறியிருப்பது ஈண்டு அறியத்தக்கது.

நல்லறிவாளன் தன் தூய உள்ளத்தில் இந்த விபாவம் முதலியவைகளை மீட்டும் மீட்டும் நினைக்கும் செயலுக்குச் சுவைத் தல் (சர்வணம்) என்று பெயர். அவ்வாறு சுவைக்கும் நிலையில் கரும்பின் துண்டிலிருந்து இனிப்புச் சுவை உண்டாதல் போன்று விபாவம் முதலியவற்றிலிருந்து 'சிருங்காரம்' முதலிய 'ரஸங்கள்' தோன்றுகின்றன. காதல் முதலிய உளவேறுபாடுகள் நல்லறி

வாளருள்ளத்தில் ஆதிகால முதலே வாஸனு ரூபமாய்ப்[18] படிந் துள்ளன. அவற்றை விபாவம் முதலியன எழுப்பி விடுகின்றன. என்போலவோ எனின், பொருள்களில் அமைந்து கிடக்கின்ற நிலையியல் மின்சாரத்தை (Static electricity) தேய்த்தல் வெளிப் படுத்துவது போல என்று கூறலாம். இவ் விபாவம் முதலியவை ஒருங்கு சேர்ந்து உண்டான சிறப்பியல் செயலால் பூர்வ வாஸ னைக்கு எழுச்சி வருவதனோடு உள்ளம் இராஜஸ, தாமஸ குணங் கள் அகலப்பெற்று, சுத்த சத்துவமாய்ச் சமைகின்றது. ஆன்மா அஞ்ஞானத் திரையினின்று நீங்கிச் சித்பிரகாச ஆனந்த ரூபமாய் விளங்குகின்றது. இத்தகைய சத்துவநிலை அடைந்த உள்ளத் திற்கு இத்தகைய ஆத்தும சாட்சியாய்ப் பொருளாகின்ற அநாதி வாஸனு ரூபமாகிய காதல் முதலிய பாவமே 'ரஸம்' என்று அறுதி யிடப்பெற்றுள்ளது.

சுவைப் பாகுபாடு : சுவைகளின் பாகுபாட்டைப்பற்றிச் சிறிது விளக்கம் கூற எண்ணுகிறேன். நம்முடைய பேச்சும் எழுத்தும் உணர்ச்சியுடன் நின்று விடுகின்றன. ஆகவே, ரஸத்தைப் (சுவையைப்) பாகுபாடு செய்வது இயலாததாகின்றது. சுவை நிறைந்த மாம்பழத்தைத் தின்ற ஒருவன் அதன் சுவையைப் பற்றிப் பலவாறு வருணிக்கலாம். ஆனால், அதன் சுவையை அவன் பிறரால் உணரும்படி செய்தல் இயலாது. பிறரும் அம் மாம்பழத்தைத் தின்று சுவைத்தாலன்றி அதன் சுவையை உணர முடியாது. ரஸமும் அந்த வகையைச் சார்ந்ததாகவே கொள்ள வேண்டும். ரஸம் ஒருவருடைய அநுபவம். அதைப் பிறருக்கு எடுத்துக் கூற எவராலும் இயலாது. எனவே, சுவை இலக்கண நூலார் ரஸ நிலையை வைத்துக்கொண்டு அதனை வகுத்துக் காட்ட முற்படாமல், ரஸத்திற்கு முன்னிலையாகின்ற உணர்ச்சி களை வைத்து ரஸங்களையும் பாகுபாடு செய்தனர். நம் மனத்தில் தோன்றக் கூடிய எண்ணற்ற உணர்ச்சிகளை ஒன்பதாகப் பிரித் துள்ளனர்; அனைத்தும் இந்த ஒன்பது பிரிவுக்குள்ளேயே அடங் கும் என்பது அவர்கள் கருத்தாகும். இந்த ஒன்பதிற்குப் புறம் பான மனநிலையே இல்லை என்பது அவர்களுடைய துணிபு. உலகப் பொருள்கள் எந்த விதமான மனோ பாவங்களை எழுப்பி

18. மனம் தொன்று தொட்டுப் பொருள்களின் நிலையைப் புறக்கணித்து இன்ப துன்பங்களை அநுபவிக்கின்றபொழுது மனத்தில் செதுக்கிவிட்டுப் போன உணர்ச்சி, மீண்டும் அப் பொருள்களைக் காண நேரிடுங்கால் தட்டி எழுப்பப்பெறுகின்றது. இங்ஙனம் செதுக்குண்டிருக்கும் உணர்ச்சியையே அறிஞர்கள் 'வாஸனை' என்று பெயரிட்டு வழங்குவர்.

னுலும் அவற்றை இந்த ஒன்பதுக்குள் ஒன்ருகவே பாகுபாடு செய்துவிடலாம். இந்த ஒன்பது சுவைகட்கும் அவர்கள் தனித் தனி பெயர்களிட்டுள்ளனர். அவை :

| | வடமொழி | தமிழ் |
|---|---|---|
| 1. | சிருங்காரம் | உவகை |
| 2. | கருணம் | அழுகை |
| 3. | வீரம் | பெருமிதம் |
| 4. | ரெளத்திரம் | வெகுளி |
| 5. | ஹாஸ்யம் | நகை |
| 6. | பயானகம் | அச்சம் |
| 7. | பீபத்ஸம் | இழிவரல் |
| 8. | அற்புதம் | மருட்கை |
| 9. | சாந்தம் | (நடுவுநிலை) |

என்பனவாகும். இவற்றுள் சாந்த ரஸம் உலகியலின் நீங்கினுர் பெற்றியாகலின் அதனை யொழித்து ஏனைய எட்டனையுமே பரத முனிவர் தமது நூலில் கூறியுள்ளார். ஆசிரியர் தொல்காப்பி யனுரும் அவ்வாறே எண் சுவைகளையே கூறியுள்ளதை மேலே கண்டோம்.

**ரஸம் சமையும முறை :** இனி, ரஸம் சமையும் முறைபற்றியும் வடமொழியாளர் கருத்தினை விளக்க முற்படுகின்றேன். மேற் கூறிய ஒன்பது ரஸங்களும் ஒவ்வொரு ஸ்தாயி பாவத்தால் சமை கின்றன.

| | | |
|---|---|---|
| 1. சிருங்காரத்திற்கு | ஸ்தாயி பாவம் | ரதி (காதல்) |
| 2. கருணத்திற்கு | ,, | சோகம் |
| 3. வீரத்திற்கு | ,, | உற்சாகம் |
| 4. ரெளத்திரத்திற்கு | ,, | குரோதம் |
| 5. ஹாஸ்யத்திற்கு | ,, | ஹாஸம் (நகை) |
| 6. பயானகத்திற்கு | ,, | பயம் |
| 7. பீபத்ஸத்திற்கு | ,, | ஜுகுப்ஸை (அருவருப்பு) |
| 8. அற்புதத்திற்கு | ,, | விஸ்மயம் (வியப்பு) |
| 9. சாந்தத்திற்கு | ,, | நிர்வேதம் (விரக்தி) |

இந்நிலைபெற்ற பாவமே ரஸமாகும். உணர்ச்சிப் பெருக்கால் உள்ளம் பூரித்து மனம் அசைவற்று நிற்கும்போது அதில் ஆன்மா தெளிவாகப் பிரகாசிக்கின்றது உடனே மட்டற்ற

9

மகிழ்ச்சி ஏற்படுகின்றது. உள்ளம் உணர்ச்சி ததும்பிப் பூரித்து நிற்கும் நிலையில் இன்பம் பிறக்கும் என்பதற்கு வால்மீகிமுனிவரின் நிலை சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். அப்பொழுதுதான் இராமாயணத்தின் மூலசுலோகமும் பிறந்ததாக வரலாறு. அந்த வரலாறு இதுதான்: மிதுனங்களான கிரவுஞ்சப் பறவைகளுள் பெண் பறவையின் பிரிவு தனக்கு உண்டாகுமோ என்று எப் பொழுதும் அஞ்சும் தன்மையையுடைய ஆண் பறவையை வேடன் அடித்துக் கீழே தள்ளிவிட்டான். அது குருதியில் தோய்ந்து மண்ணில் பரிதவிக்கும் நிலை கல் நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது. இந்நிலையைப் பெண் பறவை கண்ணுற்றது. அச்சிறு உள்ளம் அத்துயரத்தை எவ்வாறு தாங்கும்? அது தன் துணைவனின் பிரிவினைத் தாங்க முடியாமல் கதறியது. துடித்துத் தவித்துப் புலம்பும் காட்சியை முனிவர் கண்டார். துக்கத்தால் மனம் நிரம்பி அசைவற்று நின்றது. சோகம் அவரை ஆட்கொண்டு விட்டது. அந்நிலையில் அவரது ஆன்மா பளிச் சென்று தெரிந்தது. உடனே துன்ப வேகமெல்லாம் இன்பப் பெருக்காய் மாறிவிட்டது. அது கருண ரஸமாய்ப் பரிணமித்தது. அந்நிலையில் முனிவர் தம்மை மறந்து நின்றார். பிறகு விழித்துக் கொண்ட பொழுது, மனத்துண்டான சோகம் ஒரு சுலோகமாக அளவற்ற இன்பத்தின் மணம் கமழ, வெளிக்கிளம்பி வந்தது. அதுவே கவிதா தேவியின் அருளோதயம். சுலோகத்தின் பொருள் இது "வேடனே, மிதுனங்களான கிரவுஞ்சப பறவை களுள் காமமோகங் கொண்ட ஆணினைக் கொன்றமையால் பல நாள் இவ்வுலகில் நீ நிலைத்திராய்" என்பது. இங்கு அடித்துக் கொல்லப்பெற்ற ஆண் பறவை ஆலம்பன விபாவம், பெண் பறவையின் கதறுகை உத்தீபன விபாவம், சோகம் ஸ்தாயி பாவம், உணரப்படும் சுவை 'கருணம்' ஆகும். முனிவர் துக்க கரமான நிகழ்ச்சியை ஏற்றிருப்பாராயின அவர் வாயினின்று கவிதை வெளிவராது என்பது திண்ணம கவிதை ஆனந்தக் களிப்படைந்த உள்ளத்திலே உருவெடுக்கும் என்பதை நாம் நன்கு அறிவோம்.

ரஸங்களின பரிணாமம: ரஸங்களின் பரிணாமத்தைப்பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது. அதைப் பற்றியும் குறிப்பிட விரும்புகின்றேன். மேற்கூறிய ஒன்பது சுவை களுள் கருணம் ஒன்றுதான் பல்வேறு ரஸங்களாகப் பரிணமிக் கின்றது என்பர் ஒருசாரார் அவர் கூறுவது கருணம் ஒன்றுமே உலகின் அடிப்படை உண்மை நிலையில் அடங்கிக் கிடக்கின்றது. ஆன்மாவும் உலகும் பின்னிக் கிடக்கின்றது. ஆன்மாவின் கூறு இன்பமாகவும், உலகின் கூறு துன்பமாகவும் உள்ளன.

மனத்தின் உருக்கம் மட்டிலும் இல்லாவிடில் அங்கு ரஸத்திற்கே இடம் இல்லை உருக்கம் கருணத்தில்தான் தலையெடுக்கும்; ஆதலின் கருணமே சிறந்த ரஸம். ஆகவே, ஏதாவது ரஸம் நமது அநுபவத்தில் தோற்றமளிக்க வேண்டுமாகில் நம் மனம் உருக வேண்டும். மனத்தை உருக்க வைக்கும் சாதனத்தையே கருணத்தின் உறுப்பாக நாம் ஏற்கின்றோம் ஆகவே, கருணம் ஒன்று தான் ரஸம் என்றும், அது பற்பல காரணங்களின் சேர்க்கையால் பல்வேறு ரஸங்களாகக் காட்சி அளிக்கலாம் என்றும் பவபூதி என்னும் வடமொழிக் கவிஞர் தம் 'உத்தர ராம சரிதம்' என்னும நாடகத்தில் குறிப்பிடுவர். மற்றொரு சாரார் 'சிருங்காரம்' ஒன்றே சிறந்தது என்றும், அதிலிருந்தே ஏனையவை தோன்றின என்றும் கூறுவர். இலக்கியத்தில் இதுவே முதல் ரஸமாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது. இலக்கியங்களையும் இதுவே அதிகமாக ஆட்கொண்டுள்ளது. அதன் காரணமாகவே அது 'ரஸங்களின் மன்னன்' என்றும் வழங்கப்பெறுகின்றது என்று வாதிடுவர் இன்னும் சிலர் மிக நுணுக்கமாய் ஆய்ந்து சிருங்காரம் ஒன்றுதான் ரஸம் என்றும், மற்றவை அதன் வேற்றுருவங்களே என்றும், ஊன்றிக் கவனித்தால் அதுவே எல்லா ரஸத்திலும் அடிப்படையாய்க் கிடப்பதை எவரும எளிதாக உணரலாம என்றும் கூறுவர். 'சிருங்கார சாவஸவம்' என்ற நூலின் ஆசிரியர் இப்படியே ஆய்ந்து வெளியிட்டுள்ளார் பிறிதொரு சாரார் அற்புத ரஸத்திற்கு முதலிடம் தந்து அதிலிருந்துதான் ஏனையவை தோன்றுகின்றன எனறு பகர்வர். இங்ஙனம் அறிஞர்கள் 'ரஸம் ஒன்றுதான், பல அன்று' என்று நம்ப வைக்க அருமபாடு பட்டுள்ளதை நாம் அறிகின்றோம இதில் உண்மை இல்லாமல் இல்லை பல வகையான நீர்களில் தோன்றும பகலவனின் பிம்பமபோல பல விதமான நிலைகளில் தோன்றும ஆன்ம ஒளியாகிய ரஸத்திற்கும் வேற்றுமை இல்லை. உணர்ச்சிப் பெருக்கால் மனம் பூரித்திருக்குமபொழுது அதில் தோன்றும ஒளிக்கு வேற்றுமை இல்லை. அநுபவ நிலையை வைத்துப் பார்த்தால் ரஸத்திற்கு வேற்றுமை இல்லாமை புலனாகும்

**ஒற்றுமையில் வேற்றுமை** சுவைகளுக்குக் காரணமாக இருக்கும் உணர்ச்சிகள் ஒன்பதாக வகுக்கபபெற்றுள்ளதை மேலே கூறினோம் அல்லவா ? ஓர் உணர்ச்சியில் பிற உணர்ச்சிகள் கலக்காமல் இருப்பது அரிது; பிறஉணர்ச்சிகளின் கூறுகள் அதில் இருக்கத்தான் செய்கின்றன. பூமியை எடுத்துக் கொண்டால அதில் நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்னும் நான்கும் கலந்து தான் இருக்கும். மற்றவை இருந்தபோதிலும் பூமியின் கூறு அதில் அதிகமாக இருப்பதால் அதனைப் பூமி என்று வழங்கு

கின்றோம். அவ்விதமே, நாம் சுவைகளின் வேறுபாட்டை உணர வேண்டும். பல இடையூறுகள் இருந்தபோதிலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் ஒரே நோக்கமாகத் துஷ்யந்தனையே நாடிய சகுந்தலையின் மன உறுதியை வீரத்தின் கூறுகக் கொள்ளலாம். ஆனால், கவிஞன் அதைக் காதலின் கூறுகக் கொண்டுள்ளான். அவ்வாறே சிறை இருந்த செல்வியின் மன உறுதியை வீரமாகக் கொள்ளளாமேனும், காதலாகக் கொள்வதே மரபு. இவ்வாறே, இசைக் கலையிலுள்ள ஏழு சுரங்கள் ஒவ்வொன்றிலும் மற்ற ஆறு சுரங்கள் கலந்திருப்பது நமக்குத் தெரியாவிட்டாலும் இசையறிஞர்கள் அறிந்து நமக்கும் எடுத்துக் காட்டுவர். கதிரவன் ஒளியிலுள்ள வெண்மை நிறத்தில் ஏழு நிறங்கள் கலந்திருப்பதை பௌதிக அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். எனவே, எதனையும் ஆராய்ந்து பார்ப்பவர்கட்கு ஒற்றுமையும் தோன்றும்; வேற்றுமையும் புலனுகும். சுவைகளின் அடிப்படையாகவுள்ள உணர்ச்சிகளை ஆராயும்போது ஒற்றுமையும் காணப்பெறும்; வேற்றுமையும் காட்சி அளிக்கும். வேற்றுமையைக் கொண்டுதான் உணர்ச்சிகள் ஒன்பதாகப் பிரிக்கப் பெற்றன என்பதை நாம் அறிதல் வேண்டும்.

மேற்கூறப்பெற்ற ஒன்பது பாவங்களும் எல்லா உயிர்களிடத்தும் பற்றியிருக்கும். ஆனால், சிலருடைய மனோ விருத்திகள் பல பிறப்புக்களிலுள்ள வாஸனை மிகுதியால் சில பாவங்களில் மிக்குச் செல்லும்; சிலவற்றில் குறைந்து காணப்பெறும் அதனால் இவை அறவே இல்லாதிருக்கும் என்று எண்ணுதல் கூடாது. வீரத்திற்குக் காரணமாகவுள்ள உற்சாகம், பயானகத்திற்குக் காரணமாகிய அச்சம், ரௌத்திரத்திற்குக் காரணமாகிய குரோதம் ஆகியவை எல்லா உயிர்களிடத்தும் மிகுதியாகக் காணப்பெறுமைக்குக் காரணம் வழிவழி வரும் வாஸனைகளின் குறைவே என்று கருதவேண்டும். சிருங்காரத்திற்குக் காரணமாகிய காதல் எல்லா உயிர்களிடத்தும் மிக்குக் காணப்படுவதற்குக் காரணம், வழிவழி வரும் வாஸனையின் மிகுதியே என்று கொள்ள வேண்டும். ஆதலின், இவ்வெல்லாச் சுவைகளையும் எல்லா உயிர்களும் ஒரே பிறப்பில் அநுபவித்தல் அரிதாக உள்ளது.

இன்னும் ஒரு சிலர் பக்தி,வாத்சல்யம் முதலியவற்றையும் சுவைகளாகக் கருதுகின்றனர். ஜகந்நாத பண்டிதர் என்ற அறிஞர் பக்தியை மிகவும் பெருமைப் படுத்திப் பேசுகின்றார்; "கிருஷ்ண" என்ற இரண்டு எழுத்துக்களின்[19] இனிமையைக் கண்ட

19. வடமொழியில் 'க்ரு' ஓர் எழுத்தாகவும் 'ஸ்ண' மற்றோர் எழுத்தாகவும் அமையும்.

துண்டா ?'' என்று வினவுகின்றார். பக்தி என்பது சிறந்த ரஸம் அல்லது மனோநிலை. அதற்கு உறுப்பாகவே மற்ற ரஸங்கள் நிற்கின்றன என்று ஜயதேவர், லீலாசுகர் முதலிய மாமுனிவர்களாகிய கவிஞர்கள் காவியம் எழுதி மெய்ப்பித்துள்ளனர். இவர்களிடம் ஈடுபட்டோர் சிறிது மனமிரங்கி 'பத்தாவது உணர்ச்சியாகப் பக்தியை ஏன் கொள்ளக் கூடாது ?' என்று பிடிவாதமும் செய்வர். இலக்கண ஆசிரியர்கள் நன்கு ஆய்ந்து பக்தி, வாத்சல்யம் போன்றவற்றை பாவமே என்று அறுதியிட்டுள்ளனர். 'பக்தி ரஸம்' என்று வழங்குவது உபசாரமேயன்றிக் காப்பியச் சுவை பற்றிச் சிறந்த நூல்களில் வழங்குதல் இல்லை. 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ !''[20] என்று சேக்கிழார் பெருமானைப் புலவர்கள் குறிப்பிடுவதையும் உபசார வழக்காகவே கொள்ளுதல் வேண்டும். பக்தி என்ற பாவம் சிருங்காரத்தில் அடங்கும். பகவானிடத்தில் செலுத்தும் அன்பு, பக்தி; குழந்தைகளிடம் செலுத்தும் அன்பு, வாத்சல்யம்; மனைவியிடத்தில் செலுத்தும் அன்பு, காதல். இவ்வாறு அன்பு இட வேறுபாட்டிற் கேற்பப் புதுப் பெயர்களைப் பெறுகின்றது என்பதை நாம் அறிதல் வேண்டும். இப் பாவங்கள் யாவும் சிருங்காரச் சுவையுள் அடங்கும்.

**உலகியல் நிகழ்ச்சிகள் சுவையன்று :** இவ்விடத்தில் ஒரு முக்கிய உண்மையை மனத்திலிருத்துதல் வேண்டும். உலகியலில் நிகழும் செயல்களால் உண்டாகும் இன்பத்தை ரஸம் என்று கொள்ளுதல் பொருந்தாது. காரணம், ஒரு சுவைக்குக் கூறும் இலக்கணம் எல்லாவற்றிற்கும் பொருந்துவதில்லை. உலகியற் செயல்களுள் நகை,காதல் போன்றவற்றில் இன்பம் உண்டாதல் போல் அழுகை, இழிவரல், அச்சம், வெகுளி முதலியவற்றில் இன்பம் உளதாதல் இல்லை என்பது அனைவரும் அறிந்தஉண்மையாகும். இதனால்தான் சுவை இலக்கண நூலார் உலகியலின் பத்தைச் சுவை என்று கொள்ளாமல் நாடகத்திலாவது காவியத்திலாவது அச்செயல் நிகழும்பொழுது அவற்றைக் காண்டலும் கேட்டலும் செய்யும் நல்லறிவாளருள்ளத்தில் விபாவம் முதலியவற்றால் உண்டாகும் சுவையையே'ரஸம்' என்று அறுதியிட்டனர் உலகில் ஒரு தாய் தன் இளமகன் இறந்ததைக்குறித்து அழுதலைக் கேட்குங்கால் நமக்குத் துயரம் உண்டாகின்றது. ஆனால், மேகநாதன் இறந்துபட்டபோது இராவணன், மண்டோதரி புலம்புவதாக உள்ள பாக்களைப் படிக்கக் கேட்குமிடத்து அளவிலா மகிழ்ச்சியுண்டாகின்றது. அவலத்திலும் இனபத்தைக் காண்ப

20. சேக்கிழார் பிள்ளைத்தமிழ் - தாலப் பருவம்-8.

தால்தான் அப்பாக்களைப் பன்முறை கேட்டும் படித்தும் இன்புறு கின்றோம். ஆகவே, இலக்கியத்தில் காணப்பெறும் எல்லாவித உணர்ச்சிகளும் படிப்போருக்கு இன்பம் அளிப்பதால் அவை யாவும் "சுவைகள்" என்று வழங்கப் பெற்றன என்றும், உலகியல் நிகழ்ச்சிகளின் உணர்ச்சிகள் அங்ஙனம் இன்பம் அளிப்பதில்லை என்றும் ஈண்டு அறிதல் வேண்டும்.

**பரணிச் சுவைகள் :** இதுகாறும் சுவைகளைப்பற்றி அறிந்த கருத்துக்களின் அடிப்படையில் 'கலிங்கத்துப் பரணியில்' சித்திரிக்கப்பெற்றுள்ள சுவை வேறுபாடுகளை அறிந்து கண்டு மகிழ்வோம். எல்லாச் சுவைகளுமே நம் உள்ளத்தைக் கனிவுபெறச் செய்கின்றன என்பதனை நாம் உணர்வோம். நூலைக் கையிலெடுத்தவர்கள் யாவரும் சுவையில் ஈடுபட முடியும் என்று கருதுதல் தவறு. நன்றாக மனத்தைச் செலுத்திப் படித்து அடிக்கடிச் சுவைக்கும் இயல்புடையோர்கட்குமட்டிலுமே சுவை சிறிதளவு புலனாகத் தொடங்கும். இரத்தினம் ஓர் உயர்ந்த பொருள் என்பதை நாம் அறிவோம் அதன் பெருமையை, தரத்தினை, எல்லோரும் அறுதியிட்டு அறிய முடிகின்றதா? இல்லையன்றோ? அதனைச் சோதித்து அறிந்து பழகியவர்கட்கு மட்டிலுமே அதன் பெருமை புலனாகும். இரங்கூன் கமலம், புஷ்பராகம், வைரம் இந்த மூன்றுக்கும் உள்ள வேற்றுமையை அவர்களே நன்கு அறிதல் முடியும். இத்தகைய கற்களை அறியும் 'வாஸனை' உள்ளிருப்பவர்கட்கே பல தடவைப் பார்ப்பதால் அதனை அறியும் திறம் பெருகும். 'வாஸனை' இல்லாதவர்கள் பல நாட்கள் பல்லாயிரம் இரத்தினங்களைப் பார்த்தாலும் அவர்கள் மனத்தில் யாதொரு மாறுபாடும் உண்டாக மாட்டாது. காவியத்தில் சுவை காண்பதும் அப்படித்தான். அதிலுள்ள சுவைகளை அறிந்து சுவைப்பதற்கு வழிவழி வரும் 'வாஸனை' வேண்டும். இனி, 'கலிங்கத்துப் பரணி'யிலுள்ள சுவைகளை ஒவ்வொன்றாகக் காண்போம்.

**நகைச் சுவை :** இயற்கைக்கு மாறாக எதையாகிலும் நாம் உணர நேர்ந்தால் அது நம்மிடம் நகைப்பினை விளைவிக்கும். கலிங்கத்துப் பரணியில் பேய்கள் கூழட்டு உண்ணும் பகுதியில் நகைச்சுவை விளைக்கும் நிகழ்ச்சிகள் வருகின்றன. ஒரு குருட்டுப் பேயின் உண்கலத்தை ஒரு திருட்டுப் பேய் ஒளித்து வைத்துக் கொள்ளுகின்றது; குருட்டுப் பேய் கையில் கூழ் ஏற்று அருந்துகின்றது. இந் நிகழ்ச்சி,

> "ஊணு தரிக்கும் கள்ளப்பேய்
> ஒளித்துக் கொண்ட கலம்தடவிக்

காணு தரற்றும் குருட்டுப்பேய்
கைக்கே கூழை வாரீரே."[21]

[ஊன்-உணவு ; ஆதரிக்கும்-ஆசைப்படும்: கலம்-பாத்திரம; அரற்றல்-கதறியழல்]

என்ற தாழிசையில் காட்டப்பெறுகின்றது ஓர் ஊமைப் பேயின நிலை இது :

"பையாப் போடு பசிகாட்டிப்
பதலை நிறைந்த கூழ்காட்டிக்
கையால் உரைக்கும் ஊமைப்பேய்
கைக்கே கூழை வாரீரே."[22]
[பையாப்பு-துன்பம்; பதலை-பானை]

சூல் கொண்டுள்ள ஒரு பேய் பசியால் செவிகளடைத்துப போகின்றது. கூழைக் கண்டதும் காதடைப்பு நீங்குகின்றது; நாக்கைத் துழாவிக்கொண்டு உண்ணுவதற்கும் தயாராகின்றது. இதனைக் கவிஞர்,

"அடைத்த செவிகள் திறந்தனவால்
அடியேற் கென்று கடைவாயைத்
துடைத்து நக்கிச் சுவைகாணும்
சூற்பேய்க்கு இன்னும் சொரியீரே."[23]
[சூல்-கருப்பம்; சொரியீர்-வாருங்கள்]
என்று காட்டுகின்றார்.

பேய்களிலும் குறைமதியுள்ளவை இருக்கும் போலும்! ஒரு பேய் ஓட்டைக் கலத்தில் கூழ் பெற்று உண்ணுகின்றது. கூழ் ஒழுகும் நிலையைப் பார்க்கக் கலத்தைக் கவிழ்த்துப் பார்க்கின்றது அப் பேய். கூழ் முழுவதும் கொட்டிப் போகின்றது!

"பொல்லா ஓட்டைக் கலத்துக்கூழ்
புறத்தே ஒழுக மறித்துப்பார்த்(து)
எல்லாங் கவிழ்ந்து திகைத்திருக்கும்
இழுதைப் பேய்க்கு வாரீரே."[24]
[பொல்லா-கெட்ட; மறித்துப் பார்த்து-தலைகீழாகத் திருப்பி; இழுதை-அறிவற்ற]
என்பது கவிஞரின் சொல்லோவியம்.

---

21. தாழிசை-569
22. தாழிசை-570.
23. தாழிசை-571.
24. தாழிசை-572.

ஒரு பேய்க்கு உண் கலம் கிடைக்கவில்லை. அது போர்க் களத்தில் இறந்து கிடந்த யானைத் துதிக்கையின் ஒரு நுனியை பல்லின்மேல் நிறுத்திக் கொண்டு மறுபக்கத்தில் கூழை வார்க்கும் படி வேண்டுகின்றது.

> " துதிக்கைத் துணியைப் பல்லின்மேல்
> செவ்வே நிறுத்தித் துதிக்கையின்
> நுதிக்கே கூழை வாரென்னும்
> நோக்கப் பேய்க்கு வாரீரே."[25]

[துணி-துண்டம்; செவ்வே-செவ்வையாய்; நுதி-நுனி]

என்ற தாழிசையால் இப்பேயின் நிலையினைக் கண்டு நகைத்து மகிழலாம்.

**அழுகைச் சுவை:** கலிங்கப் போர்க்களத்தில் காணும் நிகழ்ச்சிகள் பல அழுகைச் சுவை பயப்பவையாகும். துன்பத்திலும் இன்பத்தைக் காண்பதுதான் ஆன்மாவை உணர்வதாகும் என்று கூறுவர். இக்கட்டத்தில் சில தாழிசைகளைப் படித்தநுபவித்து நம் உள்ளம் துக்க உணர்ச்சியால் பூரிக்கவே அழுகை, சுவையாக மலர்கின்றது; கருணை ரஸமாகின்றது. இச் சுவையை மேல் நாட்டார்போல் நம் நாட்டார் இறுதி வரையில் வளர்த்துக்காட்ட முனைவதில்லை. கலிங்கப் போர் முடிந்தபின் திரும்பி வாராத தன் கொழுநனைத் தேடிக்கொண்டு போர்க்களத்திற்கு வருகின்றுள் மங்கையொருத்தி. அங்குத் தன் கணவனின் உடல், முகம் வேறு வேருகவும் கை, கால் வேறு வேருகவும், துண்டுபட்டுக் கிடப்பதைப் காண்கின்றுள். கொழுநனின் தலைமட்டும் அவள் கைக்குக் கிடைக்கின்றது; ஏனைய உறுப்புக்களை நரிகள் இழுத்துச் சென்றன போலும்!

> " பொருதடக்கை வாளெங்கே? மணிமார்பு எங்கே?
> போர்முகத்தில் எவர்வரினும் புறங்கொடாத
> பருவயிரத் தோள்எங்கே? எங்கே என்று
> பயிரவியைக் கேட்பாளைக் காண்மின் காண்மின்."[26]

[மணி-அழகிய; வயிரம்-அழுத்தமானது; பயிரவி-யோகினி (காளியின் பரிவார மகளிர்)]

என்பது கவிஞர் காட்டும் சொல்லோவியம்.

25. தாழிசை-573. 26. தாழிசை-484.

இன்னொருத்தி தன் கணவன் முகத்தைக் கண்ட பிறகு தன் உயிரைத் துறக்க விரும்புகின்றாள். போர்க்களத்திற்கு வந்து சாதகரையும் இடாகினியையும் அவ்வுடலைக் காட்டுமாறு வேண்டுகின்றாள்.

" தங்கணவர் உடல்தாமும் போக என்றே
சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பார்
எங்கணவர் கிடந்தஇடம் எங்கே என்றென்(று)
இடாகினியைக் கேட்பாரைக் காண்மின்
காண்மின்."[27]

[சாதகர் - காளியின் மெய்காப்பாளர்; இடாகினி - சுடலைப் பிணம் தின்னும் பேய்]

என்பது அவள் நிலையைக் காட்டும் சொல்லோவியம்

போர்க்களம் புக்க மகள் ஒருத்தி தன் கேள்வனின் உடலைக் காண்கின்றாள்; வாய் மடிந்த நிலையில் காணப்படுகின்றது. பேசாத அவனைப் பார்த்து 'உதடுகளில் காயம் பட்டதோ?' என வினவுகின்றாள். உடனே வெறுப்புமிக்கு அங்கேயே தன் உயிரை விடுகின்றாள்.

" வாய்மடித்துக் கிடந்ததலை மகனை நோக்கி
மணியதரத் தேதேனும் வடுவுண் டாயோ?
நீமடித்துக் கிடந்ததெனப் புலவி கூர்ந்து
நின்றாவி சோர்வாளைக் காண்மின் காண்மின்."[28]

[தலைமகன்-கணவன்; மணி-அழகிய; அதரம்-உதடு; கூர்தல்-மிகுதல்; ஆவி-உயிர்]

சிறந்த வீரனான தன் கொழுநன் வெற்றியுடன் மீளாமை கருதி அவன் மனைவி வெறுப்புற்று உயிர் துறக்கும் காட்சி இது

தன் கொழுநனைத் தழுவிய வண்ணம அவனுடனே தன் உயிரையும் துறக்கும் நங்கையொருத்தியைக் காண்கின்றோம. இவள் குற்றுயிராகத் தரைமீது கிடக்கும் தன் கொழுநனைக் காண்கின்றாள். தரை மகளும் ஒரு பெண்ணாகலின், அந்நிலமகள் தன் கணவனைத் தாங்கலாகாதெனக் கருதுகின்றாள்; உடனே அவன் உடலைத் தன் மடியின்மீது கிடத்திக் கொள்ளுகின்றாள். விண்ணாடு செல்லும் அவன் உயிர் அங்குள்ள அர மகளிரைத் தழுவக்கூடும் என்று கருதி

27. தாழிசை-481. 28. தாழிசை-482.

அவன் உயிர் போகும்போதே தன் உயிரையும் போக்கிக் கொள்ளுகின்றாள்.

"தரைமகள்தன் கொழுநன்றன் உடலந் தன்னைத்
தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்(டு)
அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்
ஆவிஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்."[29]

[தரைமகள்-மண்மகள்; அரமகள்-தெய்வப்பெண்; ஆவி-உயிர்; ஒக்க-ஒருசேர]

இத்தாழிசை 'தலையொடு முடிதல்'[30] என்ற புறத்துறையைச் சார்ந்ததாகும். மேற்கூறிய நான்கு தாழிசைகளிலும் களம்புக்க மகளிர் செய்தி கூறப்பெற்றது. உள்ளத் தெளிவிற்குக் 'கருணம்' (அழுகைச் சுவை) ஒரு சாணை போன்றது. தங்கத்தை நெருப்பி விட்டு உருக்குவதால் அது தூய்மையாதல்போல் மனிதன் மனமும் சோகம் என்றும் நெருப்பில் வாட்டப்படுவதால் பதப்படுகின்றது. மேனாட்டு அறிஞர் கூறும் Cathartic effect என்பதும் இதுவே யாகும். இதுபற்றியே இந்த ரஸம் சிறப்பாகப் போற்றப்படு கின்றது.

**இளிவரல் சுவை :** அருவருப்பு அல்லது 'இழிவு' தோன்ற நிற்கும் செயல்களனைத்தும் இளிவரல் சுவையை நல்கும்; நாணத் தக்க செய்கையாலும் இச்சுவை பிறக்கும். கருணாகரனும் அவ னுடைய வீரர்களும் கலிங்க நாட்டைத் தாக்கியபொழுது அவர் கள் முன் நிற்கமாட்டாது 'கலிங்க வீரர்கள்' மாற்றுருக் கொண்டு மறைகின்ற செய்திகளைக் கூறும் தாழிசைகளில் இச்சுவையைக் காணலாம். சிலர் சமணர்கள் போலவும், சிலர் புத்தர்கள் போலவும், சிலர் வேதியர்கள் போலவும், சிலர் பாணர்கள் போலவும் மாற்றுருக் கொண்டு மறைகின்றனர்.

"வரைக்கலிங்கர் தமைச்சேர மாசை ஏற்றி
வன்தூறு பறித்தமயிர்க் குறையும் வாங்கி
அரைக்கலிங்கம் உரிப்புண்ட கலிங்கர் எல்லாம்
அமணரெனப் பிழைத்தாரும் அநேகர் ஆங்கே."[31]

[வரை-மலை; மாசு-பழிச்சொல்; தூறு-புதர்; வாங்கி-களைந்து; அரை - இடை; கலிங்கம் - ஆடை; உரிப்புண்ட - களையப்பெற்ற; அமணர்-சமணர்]

29. தாழிசை-483.
30. புறப். வெண். மாலை-79.
31. தாழிசை-466.

சமண வேடம் பூண்டு உயிர்பிழைத்தோடிய கலிங்க வீரர் களின் செயலைக் காட்டுவது இச் சொல்லோவியம்.

"வேடத்தாற் குறையாது முந்நூ லாக
வெஞ்சிலைநாண் மடித்திட்டு விதியாற் கங்கை
ஆடப்போந் தகப்பட்டேம் கரந்தோம் என்றே
அரிதனைவிட் டுயிர்பிழைத்தார் அநேகர்
ஆங்கே."[32]

[சிலை-நாண் ; மடித்திட்டு-சுருட்டி; அரி-போர்க் கருவி]

வேதியர் கோலங்கொண்டு உயிர் பிழைத்தவர்களின் செயலைக் காட்டுவது இது.

"குறியாகக் குருதிகொடி யாடை யாகக்
கொண்டுடுத்துப் போர்த்துத்தங் குஞ்சி முண்டித்(து)
அறியீரோ சாக்கியரை யுடைகண் டால்என்
அப்புறமென் றியம்பிடுவர் அநேகர் ஆங்கே."[33]

[குறி-புத்தர் அடையாளம்; குருதி-செந்நீர்; கொடி-கொடிச் சீலை; குஞ்சி- முடி மயிர்; முண்டித்து-மொட்டையடித்து; சாக்கியர்-புத்தர்]

கலிங்க வீரர் புத்தர் உருக்கொண்டு உயிர் பிழைத்த காட்சி இது

"சேனைமடி களங்கண்டேம் திகைத்து நின்றேம்
தெலுங்கரேம் என்றுசில கலிங்கர் தங்கள்
ஆனைமணி யினைத்தாளம் பிடித்துக் கும்பிட்(டு)
அடிப்பாணர் எனப்பிழைத்தார் அநேகர்
ஆங்கே."[34]

[களம்-போர்க்களம்; தாளம்பிடித்து-தாளமாகக் கொண்டு, அடி-அடிபற்றி வாழும்; பாணர் என-பாணர் என்று]

பாணர் வேடம் பூண்டு உய்ந்த கலிங்க வீரர்களின் செயலைக் காட்டுவது இது. இந்த நான்கு தாழிசைகளில் 'மென்மை'யினை நிலைக்களனாக் கொண்டு 'இளிவரல் சுவை' பிறந்தவாறு காண

32. தாழிசை-467.
33. தாழிசை-468.
34 தாழிசை-469.

லாம். மென்மை என்பது, ஆற்றலும் பொருளும் இன்றி எளியராம் நிலை என்பர் பேராசிரியர்.

**மருட்கைச் சுவை.** இயற்கைக்கு மாருக எதையாகிலும் கண்ணுற்றால் வியப்பு தோன்றுகின்றது. நாம் எதிர்பாராத ஒன்று நிகழ்ந்து விட்டாலும் வியப்பெய்துகின்றேம். தொல்காப்பியரும் மருட்கைச் சுவை தோன்றும் நிலைக்களன்களுள் 'புதுமை'யையும் ஒன்ருக குறிப்பிடுகின்ருரன்றே? புதுமை என்பது, முன்னறியா யாணர்த் தன்மை; அதாவது நூதனம். "யாதொன்ருனும் எவ்விடத்தினும் எக்காலத்தினும் தோன்ருததொரு பொருள் தோன்றியவழி வியத்தல், அது கந்திருவர் அந்தரம் போவது கண்டு வியத்தல் போல்வன" என்பர் இளம்பூரணர். இமயத்திலிருந்து மீண்ட முது பேய் காளியின் முன்பு காட்டிய தான் கற்ற இந்திர சாலங்கள் பலவும் நம்மை வியப்புச் சுவையில் ஆழ்த்துகின்றன. காட்சிகளையெல்லாம் நேரில் காண்பது போன்ற சூழ்நிலையை உண்டாக்குகின்றன.

முது பேய் யானையின் துதிக்கையை ஒரு கையில் வைத்து அதனை மறு கைக்கு மாற்றும் பொழுது அது யானைத் தலையாகின்றது.

> " ஏற நின்னிருதி ருக்கண் வைத்தருள்செய்
> இக்கை யிற்சிலது திக்கைபார்
> மாறி இக்கையில்அ ழைக்க மற்றவை
> மதக்க ரித்தலைகள் ஆனபார்."[35]
>
> [ஏற-நேரே; மதக்கரி-மதயானை.]

என்ற தாழிசையால் இக்காட்சி சித்திரிக்கப்பெறுகின்றது.

ஒரு கையில் யானைத்தலையை வைத்துக்கொண்டு காட்டிய இந்திர சாலம் இது:

> " இக்க ரித்தலையின் வாயி னின்றுதிர
> நீர்கு டித்துருமி டித்தெனக்
> கொக்க ரித்தலகை சுற்ற மற்றிவைகு
> றைத்த லைப்பிணமி தப்பபார்."[36]

[கரி-யானை; உதிர நீர்-குருதி; உரும்-இடி; கொக்கரித்தல்-இரைச்சல் இடல்; அலகை-பேய்.]

35. தாழிசை-162.
36 தாழிசை-163.

யானைத் தலையினின்றும் பெருகும் குருதியைப் பேய்கள் குடித்து இடி இடித்தாற்போல கொக்கரித்து ஆரவாரிப்பதையும் அந்தக் குருதி வெள்ளத்தில் யானைகளின் குறையுடலங்கள் மிதப்பதையும் காட்டும் மாயக் காட்சி இது.

அடுத்து, மாயப் போராகிய பரணிப் போரையே கண் முன் கொண்டுவந்து நிறுத்துகின்றது முதுபேய்.

“ அடக்கம் அன்றிதுகி டக்க எம்முடைய
அம்மை வாழ்கஎன எம்மைபார் !
கடக்கம் அன்றபயன் வென்று வென்றிகொள்
களம்பெ ரும்பரணி யின்றுபார்.”[37]

[ அடக்கம்-அடங்குவது ; கடக்கம் - வங்காளத்திலுள்ள ஓர் ஊர் ]

முதுபேய் தன் மாய வித்தையால் போரில் இறந்துபட்ட குதிரைகளையும் வெட்டுண்டு துடிக்கும் வீரருடல்களையும், வெருவி யோடும் யானைகளையும், பெருகியோடும் உதிர வெள்ளத்தையும் காட்டுகின்றது.

“ துஞ்சி வீழ்துரக ராசி பார்!உடல்
துணிந்து வீழ்குறைது டிப்பபார் !
அஞ்சி யோடுமத யானை பார்!உதிர
ஆறும் ஓடுவன நூறுபார் !”[38]

[ துஞ்சுதல்-இறத்தல்; துரகம்-குதிரை.]

என்ற தாழிசையால் இக்காட்சியினைக் காணலாம்.

அடுத்து, குருதி வெள்ளமும் அதில் மிதக்கும் பொருள்களும் காட்டப்பெறுகின்றன.

“ அற்ற தோளிவைஅ லைப்ப பார்!உவைய
ருத நீள்குடர்மி தப்பபார் !
இற்ற தாள்நரியி ழுப்ப பார்!அடியி
முக்கு மூளையில்வ ழுக்கல்பார் !”[39]

---

37. தாழிசை-164.
38. தாழிசை-165.
39. தாழிசை-166.

[அலைப்ப-குருதிவெள்ளம் அலைத்துச் செல்லலை; இற்ற-உடலினின்றும் இற்று வீழ்ந்த; தாள்-கால்கள்; அடி-பாதம்; இழுக்கும்-வழுக்கும்]

உடலிலிருந்து அறுப்புண்டு நீங்கிய தோள்களைக் குருதிவெள்ளம் அலைத்துச் செல்லுகின்றன. அறுபடாத நீண்ட குடல்கள் அந்த வெள்ளத்தில் மிதந்து செல்லுகின்றன. குதிரை, யானை முதலிய வற்றின் கால்களை நரிகள் இழுத்துச் செல்லுகின்றன மூளைச் சேற்றில் வீரர்கள் வழுக்கி வீழ்கின்றனர். இக்காட்சியை மேற் காட்டிய தாழிசையில் காணலாம்.

அந்த மாயப்போரில் இன்னும் சில காட்சிகள் காட்டப் பெறுகின்றன.

> "நிணங்கள் பார்! நிணம ணங்க னிந்தன நி
> லங்கள் பார் நிலம டங்கலும்
> பிணங்கள் பார்! இவைகி டக்க நம்முடைய
> பேய லாதசில பேய்கள் பார்!"[40]

[நிணம-கொழுப்பு; மணம-நாற்றம் கனிந்த-முதிர்ந்த.]

இறந்துபட்ட வீரர்களின் கொழுப்பும், கொழுப்பின் மணங்கமழும் இடங்களும், எங்கும் பிணமயமாக இருத்தலும் அப்போர்க்களக் காட்சியில் காணப்படுகின்றன இத்தனைக்கும் மேலாக 'பேய் அலாத சில பேய்களும்' (New species of demons) காட்டப்பெறு கின்றன.

**அச்சச் சுவை:** அச்சம் என்ற உணர்ச்சி மக்களுடைய உடன்பிறந்த சொத்து என்றே சொல்லலாம். அச்சவுணர்ச்சி இல்லாத மாந்தர்களே இல்லை என்று கூறிவிடலாம். அவரவர்கள் மனத்துணிவிற் கேற்றவாறு அச்சத்தை உண்டாக்கும் நிலைக் களன்கள் வேறுபடலாம். ஆயினும், அச்சவுணர்ச்சிமட்டிலும் எல்லோரிடமும் அமைந்திருக்கும் இவ்வளவு பழக்கமான உணர்ச்சியாக இருந்தபோதிலும் அச்சத்தைக் கவிஞர்கள் இலக் கியத்திற்கு ஒரு முக்கிய சுவையாக விவரிப்பதாகத் தெரியவில்லை. ஆயினும், இலக்கியங்களில் அச்சச் சுவை ஆங்காங்குச் சிறப் புடன் கையாளப்பெற்றிருப்பதை நாம் அறிந்து துய்க்கலாம்.

குலோத்துங்கனின் படைவீரர்கள் கலிங்க நாட்டிற்குள் புகுந்து ஊர்களை எரிகொளுவிச் சூறையாடுவதைக் கண்டவுடன்

40. தாழிசை-167.

கலிங்க நாட்டு மக்கள் 'எங்கே புகலிடம்? யாரோ அதிபதி?' என்று தம் அரசனிடம் ஓடி முறையிடுகின்றனர். இக்காட்சியைக் கவிஞர்,

" உரையிற் குழறியும் உடலிற் பதறியும்
ஒருவர்க் கொருவர்முன் முறையிட்டே
அரையில் துகில்விழ அடையச் சனபதி
அடியிற் புகவிழு பொழுதத்தே."[41]

[குழறுதல் - தடுமாறுதல்; பதறுதல் - நடுங்குதல்; துகில-ஆடை; அடைய-எல்லோரும்]

என்று காட்டுவர். குடிமக்கள் மிக்க நடுக்கத்துடன விரைந்தோடி அரசனிடம் முறையிடும் காட்சியைக் காட்டுவது இது. அங்ஙனம் ஓடுங்கால் அவர்களுடைய ஆடையும் நழுவி விழுவதையும் காட்டுகின்றார் கவிஞர்

" இடிகின் றனமதில் எரிகின் றனபதி
எழுகின் றனபுகை பொழிலெல்லாம்
மடிகின் றனகுடி கெடுகின் றனமினி
விளைகின் றனபடை பகையென்றே."[42]

[பதி-ஊர்; பொழில் - சோலை; மடிகின்றன - அழிக்கப்படுகின்றன; குடி-குடிமக்கள்]

என்று குடிமக்கள் தமக்கு நேர்ந்த பல்வேறு தீங்குகளைச் சொல்லி முறையிடுவதை இத் தாழிசையில் காணலாம். இந்த இரண்டு தாழிசைகளிலும் அச்சச் சுவை மிளிர்வதைக் கண்டு மகிழலாம்.

இன்னும், கருணாகரன் போரில் இறங்கிப் பொருதபொழுது அவன்முன் எதிர்த்து நிற்க ஆற்றுமல் அனந்தபன்மன் ஓடி ஒளிந்து கொண்டதும் கலிங்க வீரர்கள் பெரிதும் நடுங்குகின்றனர்.

" எதுகொல் இதுஇது? மாயை ஒன்றுகொல்?
எரிகொல்? மறலிகொல்? ஊழி யின்கடை
அதுகொல்? எனஅல றுவி ழுந்தனர்
அலதி குருதியோ டேழ்க லிங்கரே."[43]

[இது-போர்; எரி-தீ; மறலி-எமன்; ஊழி-யுகம்; அலதிகுலதி-ரிக்க நடுக்கம்]

41. தாழிசை-374. 42. தாழிசை-372. 43. தாழிசை-450.

சோழவீரர்கள் புரியும் போரைக் கண்டு கலிங்க வீரர்கள் நடுங்கின காட்சியைக் காட்டுவது இது. சோழவீரர்கள் புரியும் போரின் வன்மையை வியந்து 'இது மாயை கொல்?' எனவும், அவர்கள் விடும் கூரிய கணைகள் எங்கும் சென்று எரித்தலால் 'எரிகொல்?' எனவும், கலிங்க வீரர்களின் உயிர்களை அவர்கள் எளிதில் கவர்தலால் 'மறலி கொல்?' எனவும், போர்க்கள முழுவதும் பிணக்குவியல் நிறைந்து கிடந்ததால் 'ஊழின் கடை கொல்?' எனவும், இன்னதுதான் என்று துணிந்துரைக்க இயலாமையால் 'இது எது கொல்?' எனவும் மொழிந்து கலிங்க வீரர்கள் பெரிதும் வெருவலாயினர். இதிலும் அச்சுவையைக் காணலாம்

இவ்வாறு வெருவியோடிய வீரர்களில் சிலர் கடலில பாய் கின்றனர். சிலர் யானைகளின் வயிற்றில் புகுந்து மறைகின்றனர்; சிலர் குகைகளில் ஒளிகின்றனர். சிலர் புதர்களில் நெருங்கிப் பதுங்குகின்றனர்.[44] இன்னும் சிலர் தத்தம் நிழலுக்கே அஞ்சி, அதனைத் தம்மைத் தொடர்ந்து வரும் அது தமிழரெனக் கருதி, 'அபயம், அபயம' என்று பயந்து வணங்குகின்றனர்.[45] இச் செய்திகளைக் கூறும் தாழிசைகள் இரண்டும் அச்சச் சுவைபற்றி யனவே யாகும்.

இமயத்தினின்று போந்த முதுபேயின் இந்திர சாலங்களைக் கண்ட அலகைகள் அவற்றை மேலும காண்ப நற்த அஞ்சி நாலா பக்கங்களிலும் வெருவியோடுகின்றன. இந்த நிலையினைக காட்டும் தாழிசைகள் யாவும்[46] அச்சச் சுவை பயப்பனவாகும். உடனே வித்தையினை நிறுத்தச் சொல்லுமாறு காளிதேவியை அப் பேய் கள் வேண்டுகின்றன.

> "அக்கணம் ஆளும்அ ணங்கினை
> வந்தனை செய்துக ணங்களெலாம்
> இக்கணம் ஆளும்இ னித்தவிர்
> விச்சையெ னக்கைவி திர்த்தலுமே."[47]

[கணம்-பேய்கள் கூட்டம்; அணங்கு-காளிதேவி; விச்சை-வித்தை; கைவிதிர்த்தல்-கைநடுங்குதல்.]

மேற் கூறிய காட்சியினைப் காட்டுகின்றது இத்தாழிசை. இதிலும் அச்சச்சுவை பொதுளுவதைக் கண்டு மகிழலாம்.

---

44. தாழிசை-451.
45. தாழிசை-452.
46 தாழிசை-168, 171.
47 தாழிசை-173.

பெருமிதச் சுவை : பெருமிதம் என்பது வீரம். அஃது ஏனைப் பெருமைகளோடும் ஒப்ப நில்லாது பேரெல்லையாக நிற்பதால் 'பெருமிதம்' எனப்பட்டது என்பர் பேராசிரியர். எனவே, அறிவு ஆண்மை பொருள் முதலிய சிறப்புக்களால் மக்கள் எல்லாரோடும் ஒப்ப நில்லாது உயர்ந்து நிற்றல் பெருமிதம் என்று கொள்ளுதல் பொருந்தும். பெருமிதம் என்பது தன்னைப் பெரியனாக மதித்தல் என்பர் இளம்பூரணர். எந்தச் சிக்கலான சந்தர்ப்பத்திலும் மனம் குன்றாமல் விடா முயற்சியுடன் செயலாற்றுவதை வீரம் மிக்க செயல் என்று நாம் கருதுகின்றோ மன்றோ? வீரனது அடையாளம் போர்க்களத்தில் முன்னணியில் நிற்பது மட்டிலும் அன்று. ஆயுள் முழுவதும் பொறிகளை அவை வழி செல்லாது அடக்க முயல்வது கூட வீரம் உள்ளிருப்பதைக் காட்டுவதாகும். எனவே, புலனைந்தையும் அடக்கி யாண்ட புத்தர், சங்கரர், இராமாநுசர், காந்தியடிகள் போன்ற முனிவர்களையும் சிறந்த வீரர்கள் என்று சொல்லுதல் வேண்டும். தம் உயிரைத் துரும்பாக மதித்துச் செயலாற்றுவதையே கவிஞர்கள் வீரம் என்று இலக்கிய நெறியாகக் கொண்டுள்ளனர்.

காளி தேவியை வழிபடும் வீரர்களைக் குறிப்பிடுமிடத்து பெருமிதச் சுவை வெளிப்படுவதைக் காணலாம் தாங்கள் கோரும் வரத்தைத் தரும்படியும் அதற்கு ஈடாகத் தங்கள் உடலிலுள்ள உறுப்புக்களை அரிந்து தருவதாகவும் வீரர்கள் பரவும் ஒலி எம் மருங்கும் கேட்கப்பெறுகின்றது. இதில் பெருமித உணர்ச்சி பொங்கி வழிகின்றது.

"சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து தருதும் என்று
பரவும்ஒலி கடலொலிபோல் பரக்கு மாலோ."[48]

[தறுகண்-அஞ்சாமை; பரவுதல்-துதித்தல்; பரக்கும்-பரவும்]

வீரர்களின் வழிபாட்டியல்பினைக் கூறிய கவிஞர் வழிபாட்டினையே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்துகின்றார்.

"அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ

48. தாழிசை-109.

கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலம் கும்பிட்டு நிற்கு மாலோ."[49]

[அணங்கு-காளி; கொற்றவை-காளி; பரவும்-துதிக்கும்]

அன்னையை வழிபடுவோர் தங்கள் தலைகளை அறுத்துத் தேவியின் கையில் சமர்ப்பிக்கின்றனர்; அறுபட்ட தலைகள் தேவியைத் துதிக்க, தலைகுறைந்த உடல்கள் அவ்வம்மையை வணங்கி நிற்கும் காட்சியைக் காண்கின்றோம்.

இன்னும் சில வீரர்கள் ஓமத்தீ வளர்க்கும் காட்சி நம்மைக் கிளர்ந்தெழச் செய்கின்றது. அவர்கள் தங்கள் விலா எலும்பு களைத் தங்கள் உடலினின்றும் பிடுங்கி அவற்றைச் சமித்தாக ஓமத்தீயில் இடுகின்றனர்; செந்நீரை நெய்யாக ஊற்றுகின்றனர். இதனைக் கவிஞர்,

" சொல்லரிய ஓமத்தீ வளர்ப்ப ராலோ
தொழுதிருந்து பழுஎலும்பு தொடர வாங்கி
வல்லெரியின் மிசையெரிய விடுவ ராலோ
வழிகுருதி நெய்யாக வார்ப்ப ராலோ."[50]

[பழு எலும்பு-விலா எலும்பு; தொடர - ஒன்றொடொன்று தொடர்புற்று நிற்க; வாங்கி-பிடுங்கி; குருதி-செந்நீர்]

என்று காட்டுகின்றார். இந்த மூன்று தாழிசைகளிலும் பெருமிதச் சுவை மிளிர்வதைக் கண்டு மகிழலாம்.

**வெகுளிச்சுவை:** பகைவர்கள் செய்த தீச்செயல்களை நினைந்து மனம் கொதிக்கும் நிலையைக் 'குரோதம்' என்று குறிப் பிடுவர் இலக்கண நூலார். குரோத உணர்ச்சியில் மலர்ந்த சுவையே வெகுளியாகும். மாபாரதக் கதையில் பல இடங்களில் பீமனின் செயல் இந்த உணர்ச்சிக்குத் தக்க எடுத்துக்காட்டாகும். துச்சாதனன் திரௌபதியை மன்றுக்கு இழுத்து வருகின்றான். "ஆடை குலைவுற்று நிற்கின்றாள்!—அவள் ஆவென்று அழுது துடிக்கின்றாள்." இந்த நிலையைக் காண்கின்றான் வீமன். அவன் வெஞ்சினம் கரை மீறி எழுகின்றது. கனல் தெறிக்கும் சொற் களைச் சிந்துகின்றான்.

" நாட்டையெல் லாந்தொலைத்தாய்—அண்ணே
நாங்கள் பொறுத் திருந்தோம்

49. தாழிசை-111. 50. தாழிசை-110.

மீட்டும் எமையடிமை—செய்தாய்
மேலும் பொறுத் திருந்தோம்

துருபதன் மகளை—திட்டத்
துய்நன் உடன் பிறப்பை,
இருபகடை என்றாய் —ஐயோ!
இவர்க் கடிமை என்றாய்!

'இதுபொறுப்ப தில்லை'—தம்பி!
எரிதழல் கொண்டுவா
கதிரை வைத் திழந்தான்—அண்ணன்
கையை எரித்திடு வோம்."[51]

என்று பாரதி காட்டும் சொல்லோவியத்தில் வெகுளிச் சுவையைக் கண்டு மகிழலாம்.

தான் திறை கொடாத செயலைக் காரணமாகக் கொண்டு குலோத்துங்கன் தன் நாட்டின்மீது படையை ஏவியுள்ளான் என்பதைக் கேள்வியுறும் அனந்தபன்மன் சினங் கொள்ளுகின்றான். "வெந்தறுகண் வெகுளியினால் வெய்துயிர்த்துக் கை புடைத்து வியர்த்து நோக்கி"[52] இவ்வாறு பேசுகின்றான் :

" வண்டினுக்கும் திசையானை மதங்கொடுக்கும்
மலர்க்கவிகை அபயற் கன்றித்
தண்டினுக்கும் எளியனோ எனவெகுண்டு
தடம்புயங்கள் குலுங்க நக்கே."[53]

[கவிகை - வெண்கொற்றக் கொடை ; தண்டு - சேனை ; வெகுண்டு - கோபித்து ; நக்கு - சிரித்து]

" கானரணும் மலையரணும் கடலரணும்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி
தானரணம் உடைத்தென்று கருதாது
வருவதுமத் தண்டு போலும்."[54]

[கான் - காடு ; அரணம் - பாதுகாப்பு]

---

51. பாரதி : பாஞ்சாலி சபதம்-279 *to* 281.
52. தாழிசை-375. 53. தாழிசை 376.
54. தாழிசை-377.

இத்தாழிசைகளில் வெகுளிச் சுவை பீறிட்டுக் கொண்டு வரு வதைக் கண்டு மகிழலாம்.

**உவகைச் சுவை :** சுவை நூலார் உவகையை முதல் சுவை யாகக் குறிப்பிட்டுள்ளனர். 'காதல் இல்லாமல் கதை உண்டா ?' என்ற ஒரு வினு நம்மிடையே உலவுகின்றதல்லவா ? இதற்கு மூலகாரணம் நம் தமிழ் இலக்கியங்களில் எதுவும் உவகையைத் தழுவி இருப்பதுவேயாகும். தமிழ் இலக்கியங்களில் இச்சுவை ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. காதலையே ஒரு கலை போல் வளர்த்துள்ளனர் தமிழர்கள். இலக்கியங்களில் வரும் காதற் சுவையை அநுபவிக்க உள்ளத் தூய்மையும் வேண்டும் ; சுவைக்கும் பழக்கமும் வேண்டும். கற்பனையுலகில் காணும் இன்பக் கனவுகளாகின்ற வருணனைகளை யதார்த்த உலக நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டு நம் இலக்கியங்களைக் குறை கூறுகின் றனர் சிலர். உவகைச் சுவையைத் தமிழ் இலக்கண நூலார் அகத்திணை இயலில் கூறியுள்ளனர். காதல் நிகழ்ச்சிகள் யாவற்றையும் களவு, கற்பு என்ற பிரிவுகளில் அடக்கிக் காட்டுவர் அவர்கள். இவ்விரண்டு பிரிவுகளிலும் உள்ள செய்திகளையே வடமொழி வாணர்கள் 'விப்ரலம்ப சிருங்காரம்', 'சம்போக சிருங் காரம்' என்று வேறு ஒரு முறையில் இரண்டு பிரிவுகளாகப் பாகு பாடு செய்து விளக்குவர். முன்னது பிரிவைப்பற்றிக் கூறுவது ; பின்னது புணர்ச்சியைப்பற்றி உரைப்பது. தொல்காப்பியர் கூறியுள்ளவை யாவும் இவ்வுவகைச் சுவையின் தொடர்புடையன என்று அவர் கூருவிடினும், அவர் அமைத்த முறைகளும் செய்திகளும் இதனுள் அடங்குவனவாயின.

போரைப்பற்றிய நூலாகிய கலிங்கத்துப் பரணியிலும் உவகைச் சுவை இடம் பெற்றிருப்பதிலிருந்தே அச்சுவையின் பெரு மையை அறியலாம். 'கடைத்திறப்பில்' இச்சுவை பல்வேறு கோணங்களில் சித்திரிக்கப்பெற்றிருப்பதை இரண்டாம் பொழி வில் விளக்கினேன். ஈண்டும் ஒன்றிரண்டு காட்டுகின்றேன்.

போரில் புண்பட்ட வீரர்கட்கு வீட்டில் மருத்துவ சிகிச்சை தரப்பெறுகின்றது. அப்புண்களுக்கு அவ் வீரர்களின் துணைவியரே சிகிச்சை தருகின்றனர். இதனைக் கவிஞர்,

> " தங்குகண் வேல்செய்த புண்களைத்
> தடமுலை வேதுகொண்டு ஒற்றியும்
> செங்கனி வாய்மருந்து ஊட்டுவீர் !
> செம்பொன் நெடுங்கடை திறமினோ."[55]

55. தாழிசை-55.

[கண்வேல்-கண்ணாகிய வேல்; வேது-புண்கட்குச் சூடான பொருளால் கொடுக்கும் ஒற்றடம்; வாய் மருந்து-வால் எயிறு ஊறிய நீர்]

" பொருங்கண் வேலிளைஞர் மார்பின் ஊடுருவு
புண்கள் தீரஇரு கொங்கையின்
கருங்கண் வேதுபட ஒற்றி மென்கைகொடு
கட்டு மாதர்கடை திறமினோ."[56]

[கட்டும்-நோய்க்குக் கட்டுக் கட்டுதல்போல் இறுகத்தழுவும்]

என்ற தாழிசைகளில் காட்டுவர். புறப்பொருள் அநுபவத்தை அகப்பொருள் அநுபவத்துடன் சுவைபட பிணைத்துக் காட்டும் கவிஞரின் திறன் எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியது. இத்தகைய எடுத்துக்காட்டுக்களை இரண்டாவது பொழிவினை நோக்கி அறிந்து மகிழ வேண்டுகிறேன்.

**சமநிலை:** சமநிலை என்பது யோகியர் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் ஒரு நிலையாகும். அஃது ஓர் உயர்ந்த மனநிலை. ஆசையும் வெறுப்பும் இருக்கும்வரை மனத்திற்குச் சமநிலை ஏற்படாது என்பது தெளிவு. அதனால்தான் பெரியோர்கள் சமநிலையை அடைய எத்தனையோ பிறப்புக்களில் தவம் செய்து பாடுபடுகின்றனர். இந்தச் சுவைக்குக் 'கலிங்கத்துப் பரணியில்' இடம் இல்லை. போரை நாடுபவர்களிடம் எங்ஙனம் அமைதி காண்டல் இயலும்?

**இறுவாய்:** அன்பர்களே, இதுகாறும் சுவைகளைப்பற்றிய சில கருத்துக்களையும், கலிங்கத்துப் பரணியில் வரும் சுவைகளையும் அறிந்து கொண்டோம். இலக்கியங்களை எல்லோரும் ஒரே விதமாகத் துய்த்தல் இயலாது. அதுபற்றியே இலக்கியங்களைப் படிப்பதிலும் பல கருத்துக்கள் எழுந்தன. நம் நாட்டவர் இலக்கியம் மனத்திற்கு இன்பம் அளிப்பதைவிட உள்ளத்திற்கும் அமைதியை நல்க வல்லதாக இருத்தல் வேண்டும் என்று கருதினர். ஒரு காவியத்தைப் படிப்பதனாலோ, அல்லது சிறந்த நாடகம் அல்லது சிறந்த படக்காட்சியைக் காண்பதனாலோ சுவைஞர்கட்குப் புலன்களின் தெளிவு ஏற்படுகின்றது. இலக்கியங்களில் காணப்பெறும் சுவைகள் இப்பயனைத் தரவல்லவை; சுவைகளால் புலன்கள் தெளிவடையும், உள்ளக்கனிவுடன் இலக்

56. தாழிசை-56.

கியத்தைத் துய்ப்பவர்களே இவ்வுண்மையை அறிவர். உலக இயல்பிற்குப் படம்போலிருக்கும் கலைகளிலாவது சுவைகளை உணர்ந்து இன்புறக் கற்றுக்கொள்ளட்டும் என்றே நமது முன்னோர்கள் நாடகங்களிலும் நாட்டியங்களிலும் இலக்கியங்களிலும் சுவைகளைத் திறமையுடன் வளர்த்துக் காட்டியுள்ளனர். துன்பக் கடல் போன்ற இவ்வுலகில் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' இருந்து இன்பம் பயக்கவல்ல இலக்கியங்களை நாம் கவனிக்காவிட்டால் நமக்கு உலகில் ஆறுதல் அளிக்கக்கூடிய பொருள்களே இல்லை என்றாகிவிடும் என்று கூறி அமைகின்றேன். வணக்கம்.

# 6. மும்மணிகள்

**ஆறும் பொழிவு**

*தமிழன்பர்களே! தாய்மார்களே!*

வணக்கம். இன்று நடைபெறுவது கலிங்கத்துப் பரணி பற்றிய ஆறும் சொற்பொழிவு. இதுவே இத் தொடரில் நடைபெறும் இறுதிச் சொற்பொழிவுமாகும். இதுகாறும் நடைபெற்ற ஐந்து பொழிவுகளிலும் சயங்கொண்டார் படைத்த அருந்தமிழ்ச் சொல்லோவியத்தை, கலைச் செல்வத்தை, பல்வேறு கோணங்களில் நின்று கண்டு மகிழ்ந்தோம். இன்று பாட்டுடைத் தலைவனாகிய முதற் குலோத்துங்கன், அவன் தளபதியாகிய கருணாகரத் தொண்டைமான், இந்த அருந்தமிழ் நூலை, ஒப்பற்ற கலைச் செல்வத்தைப் படைத்தளித்த கவிஞர் பெருமான் சயங்கொண்டார் ஆகிய மூவர்களைப்பற்றியும் உள்ள சில செய்திகளையும் உங்கட்குத் தெரிவிக்க விரும்புகின்றேன். அரசர் மணியையும் தளபதி மணியையும் காட்டிய ஒளியில் கவிஞர் மணியின் ஒளியும் நன்கு ஒளிர்ந்ததைக் கடந்த ஐந்து பொழிவுகளிலும் கண்டோம்; மூன்று மணிகளின் ஒளியிலும் உலவி மகிழ்ந்தோம். அந்த மூன்று மணிகளையும்பற்றிய செய்திகளைக் கூறும் இப் பொழிவு "மும்மணிகள்" என்று தலைப்பிட்டது பொருத்தமேயன்றோ? முதலாவதாகப் பாட்டுடைத் தலைவனை குலோத்துங்கனைப்பற்றிய குறிப்புக்களைக் காட்ட விரும்புகின்றேன். இவன் புகழ் பாடும் நூலாதலால் இவனைப்பற்றி முதலில் அறிந்து கொள்வோம்.

## 1. குலோத்துங்கன்

குலோத்துங்கன் சளுக்கியர் மரபில் தோன்றிச் சோழர் குலத்தை விளங்க வைத்துப் பெரு வீரனாய்த் திகழ்ந்த பேரரசனாவான். இவன் தந்தை சளுக்கிய குலத்து இராசராசன்;

தாய் கங்கைகொண்ட சோழனின் மகளாகிய அம்மங்கைதேவி.[1] இராசராசனும் கங்கை கொண்டானின் உடன் பிறந்தாள் மகனே யாவான். மக்கள் தாயம் பெற்றுள்ள நாடுகளில் வாழும் ஆண் மக்கள் யாவரும் தம் தந்தையின் மரபையே தமது மரபாகக் கூறிக் கொள்வது வழிவழி நிகழ்ந்துவரும் வழக்கமாகும். அம்முறைப்படி, குலோத்துங்கன் கீழைச்சளுக்கிய மரபினன் ஆவான். ஆனால், இவன் சோழ மண்டலத்தில் தன் தாய்ப்பாட்டன் அரண்மனை யில் பிறந்து இளமைப் பருவத்தில் அங்கு வளர்ந்து வந்தமை யாலும், தமிழ்மொழியையே தாய் மொழியாகக் கொண்டு பயின்று தமிழ் மக்களின் வழக்க ஒழுக்கங்களை மேற்கொண்டமையாலும் இவன் தன்னைச் சோழ அரசகுமரனாகவே கருதிக் கொண்டான். அதற்கேற்ப, சோழ நாட்டிற்குப் பேரரசனாகும் பேற்றை எதிர் காலத்தில் எய்தி அதனை ஐம்பதாண்டுகள் நல்லாட்சி புரியும் நல்லூழும் பெற்றிருந்தான்.

சோழர்களும் சளுக்கியர்களும் மூன்று தலை முறையாக மகட் கொடை முறையில் குருதியுறவு கொண்டிருந்தனர். சோழர் சளுக்கியர் உறவினை அடியிற் குறிப்பிட்ட மரபுவழிப் படத்தால் தெளிவாக அறியலாம்.

(சோழர்) (கீழைச் சளுக்கியர்)

இராசராசன்-I
- இராசேந்திரன்-I
  - விசயராசேந்திரன்
    - மதுராந்தகி ×
  - அம்மங்கை × இராசராச நரேந்திரன்
    - குலோத்துங்கன்-I
- குந்தவை × விமலாதித்தன்

இந்த உறவு முதன் முதலில் எவ்வாறு தொடங்கியது என்பதை காண்டு விளக்குவேன்.

1. S. I. Vol I No 39, A grant of Vira-chola Verses 6-8.

முதலாம் இராசராசன் காலத்தில்தான் (கி. பி. 985-1014) பிற்காலச் சோழர்களின் புகழ் பல்வகையானும் சிறப்புற்றோங்கியது. நாட்டின் பரப்பும் நாற்புறத்திலும் விரிந்தது. இராசராசன் கி. பி. 972 முதல் 985-இல் அரசுக் கட்டில் ஏறினன். கி. பி. 972 முதல் 989 வரை கீழைச்சளுக்கியரது ஆட்சிக்குட்பட்டிருந்த வேங்கி நாடு[2] உள்நாட்டுக் கலகங்களால் அல்லலுற்றிருந்தது. வேங்கி நாட்டின் குழப்பநிலையைப் பயன்படுத்திக் கொண்டு முதலாம் இராசராசன் தன் மகன் இராசேந்திரனை ஒரு பெரும் படையுடன் வேங்கி நாட்டிற்கு அனுப்பினன். இராசேந்திரன் அந்நாட்டை வென்று அதனைத் தனக்கு உரிமையாக்கிக்கொண்டதுடன் அந்நாட்டு வேந்தனுகிய விமலாதித்தனையும் சிறைப் பிடித்துக் கொண்டு தஞ்சைக்குத் திரும்பினன். விமலாதித்தனும் தஞ்சையில் பல ஆண்டுகள் வாழ்ந்து வந்தான்.

இந்நிலையில் இராசராசனுக்கு ஒரு நாள் ஒரு நல்லெண்ணம் உதித்தது. அதனைத் தன் நாட்டு நலத்திற்குப் பயன் படுத்திக் கொண்டான். இராசராசன் விமலாதித்தனைச் சிறை நீக்கித் தன் மகள் குந்தவையை அவனுக்கு மணமியற்றித் தந்தான். அவன் நாட்டையும் அவனுக்கு வழங்கி அதனை ஆட்சி புரியும் உரிமையையும் அளித்தான். இதனல் சளுக்கிய நாட்டு மக்களின் அன்பைப் பெற்றான். விமலாதித்தன் கி பி. 1015 முதல் 1022 வரை ஆட்சி செலுத்தினன். விமலாதித்தனுக்கு இராசராச நரேந்திரன், விசயாதித்தன் என்ற இரு மக்கள் பிறந்தனர். விமலாதித்தன் இறந்த பிறகு இராசராச நரேந்திரன் மணிமுடி கவிக்கப்பெற்று நாட்டை ஆளத் தொடங்கினன். அந்தக் காலத்தில் சோழ நாட்டின் அரசனாக முதலாம் இராசேந்திரன் (கி. பி. 1012-1044) என்பான் ஆண்டு வந்தான்; தன் வட நாட்டு வெற்றிக்குப் பிறகு இவன் தஞ்சையை விட்டுத் திருச்சி மாவட்டம்-உடையார் பாளையம் வட்டத்தில் கங்கை கொண்ட சோழபுரம் என்ற தலைநகரை ஏற்படுத்தி அதிலிருந்துகொண்டு ஆட்சி புரிந்து வந்தான். தந்தை வழியைப் பின்பற்றித் தன் மகள் அம்மங்கையைத் தன் உடன் பிறந்தாள் மகனை இராசராச நரேந்திரனுக்குக் கடிமணம் இயற்றித் தந்தான். மணமக்கள் இருவரும் வேங்கி நாட்டில் வாழ்ந்து வந்தனர்.

2. வேங்கி நாடு என்பது, கிருஷ்ணை கோதாவரி என்ற இரு பேராறுகளுக்கும் இடையில் கீழ்க்கடலைச் சார்ந்துள்ள ஒரு நாடு. அந்த நாட்டை ஆண்டு வந்தவர்கள் கீழைச் சளுக்கியர்கள்.

சில ஆண்டுகள் கழித்த பின்னர் அம்மங்கை தேவி கருவுற்றனள். கருவுயிர்ப்பதற்காகத் தன் தாய் வீடான கங்கை கொண்ட சோழபுரத்திற்குச் சென்றாள். அங்கு ஓர் ஆண் மகவை ஈன்றாள். அந்த பிள்ளைதான் நம் குலோத்துங்கன்; கலிங்கத்துப் பரணியின் பாட்டுடைத் தலைவன். பிள்ளை பிறந்த சமயத்தில் நன்னிமித்தங்கள் தோன்றின.[3] மக்கள் பெருமகிழ்வுற்றனர். குழந்தையின் பாட்டியார், கங்கை கொண்டானின் பட்டத்தரசி, தன் 'குலமகள்தன் குலமகனைக் கோகனத மலர்க் கையால் எடுத்துக்கொண்டு'[4] பாராட்டிய பொழுது, அவன் அவயவத்தின் அடையாளங்களை அடைவே நோக்கினாள்; காலஞ் சென்ற தன் கணவனின் அடையாளங்களுடன் அவை ஒத்திருப்பதைக் கண்டாள். களிபேருவகையுடன்,

"இவன்எமக்கு மகனாகி இரவிகுலம்
பாரிக்கத் தகுவன் என்றே."[5]

[இரவி-சூரியன்; பாரித்தல்-வளர்த்தல்]

என்று வாழ்த்தினாள்; குலமரபுப்படி அக்குழந்தைக்குப் பாட்டன் பெயராகிய 'இராசேந்திரன்' என்றே பெயரிட்டாள்[6]. சந்திர குலத்தைச் சார்ந்த சளுக்கிய அரசர்களும் சூரிய குலத்தைச் சார்ந்த சோழ வேந்தர்களும் இக்குழந்தையின் பிறப்பால் பெரு மகிழ்ச்சியுற்றிருந்தனர் என்பதைக் கவிஞர் பெருமான்,

"திங்களினி எங்குழவி செம்மலிவ னென்றும்
செய்யபரி திக்குழவி ஐயனிவ னென்றும்
தங்களின்ம கிழ்ந்திருகு லத்தரசர் தாமுந்
தனித்தனி உவப்பதோர் தவப்பயனு மொத்தே."[7]

[இருகுலம்-தாய்தந்தையர் குலம்]

என்ற தாழிசையால் காட்டுவர். கங்கை கொண்ட சோழனுடைய ஐந்து புதல்வர்களும்[8] தன் மருகன் இராசேந்திரனிடத்துப் பெரிதும் அன்பு காட்டினர். இராசேந்திரனின் ஆற்றலை

3. தாழிசை-235, 236.
4 தாழிசை-236.
5. தாழிசை-237.
6 S. I. I. Vol I. No. 30. (செல்லூர்ச் செப்பேடு). பாட்டன் பெயரைப் பேரனுக்கு வைப்பது வழிவழி வரும் மரபு.
7. தாழிசை-238.
8. இராசாதிராசன், சுந்தர சோழ பாண்டியன், இராசேந்திரன்-II, இராசமகேந்திரன், வீரராசேந்திரன் என்போர்,

யுணர்ந்த சான்றோர்கள் தாயின் குலத்தையும் தந்தையின் குலத்தையும் ஒருங்கே பெருமையுறச் செய்யப் பிறந்தவன் என்று கருதி இவனை 'உபய குலோத்தமன்' (இரண்டு குலத்திற்கும் உத்தமன்) என்று பாராட்டிப் பேசினர்.

இராசேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தில் தங்கியிருந்த காலத்தில் வேங்கி நாட்டில் தன் தந்தையாகிய இராசராச நரேந்திரன் நோய்வாய்ப் பட்டிருப்பதாக ஒரு திருமுகம் வரப் பெற்றனன். அதைக் கண்டதும் இராசேந்திரன் மிகவும் கவன்று தன் அம்மான்மார்களிடம் பிரியா விடைபெற்றுக் கொண்டு வேங்கி நாட்டிற்கு விரைந்தான். வேங்கி நாட்டை அடைந்ததும் பிணிவாய்ப்பட்டுக் கிடந்த அவனுடைய தந்தையின் நிலைமையைக் கண்டு மனமுடைந்தான். அருகில் அமர்ந்து அணுக்கத் தொண்டனாய்த் தந்தையை நன்கு கவனித்துப் பணிவிடைகள் செய்தான். கி.பி. 1062 இல் அவன் தந்தை இறந்து பட்டனன். தந்தையின் பெரும்பிரிவிற் காற்றாது மிகவும் வருந்தினன் இராசேந்திரன். தந்தைக்கு ஆற்ற வேண்டிய ஈமக் கடன்களையும் இறுதிச் சடங்குகளையும் குறைவின்றிச் செய்தான். அம்மான்மார்களும் ஆன்றோர்களும் கூறிய ஆறுதல்களால் ஒருவாறு அவனுடைய துன்பமம் நீங்கியது.

"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் உலகு."[9]

[நெருநல்-நேற்று ; சற்று முன்]

என்ற பொய்யா மொழியை உணர்ந்தவனன்றோ இவன்? அமைச்சரும் உறவினரும் முடிசூட்டு விழாவிற்கு ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினர்.

தென்னாட்டில் சோழர்கள் பல சிற்றரசர்களையும் தம்மடிமைப் படுத்தி முடிவேந்தர்களாய் மேன்மையுற்றுத் திகழ்ந்ததைப் போலவே, தக்கணத்தின் வடபாகத்தில் மேலைச் சளுக்கியர் பெரும் புகழுடன் விளங்கினர். இவ்விரு குலத்து வேந்தர்களும் ஒருவரையொருவர் வென்று கீழ்ப்படுத்த வேண்டுமென்று எண்ணங் கொண்டவராயிருந்தனர். முதலாம் இராசராசன் காலத்திலிருந்தே சோழர்கள் கீழைச் சளுக்கிய மன்னர்கட்குத் தம் பெண்களை மணம் புரிவித்து அன்னாரைத் தம் நெருங்கிய உறவினராகச் செய்து கொண்டிருந்தனர் என்பதை மேலே குறிப்

9. குறள்-336.

பிட்டேன் அல்லவா? இதனால் கீழைச் சளுக்கியர்களின் உறவு மேலைச் சளுக்கியருக்குக் கிடைக்கும் வாய்ப்பே இல்லாது போயிற்று. ஆனால், சோழர்களின் வலியும் பெருமையும் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கின. அக்காலத்தில் மேலைச் சளுக்கியரின் அரசனாகத் திகழ்ந்தவன் ஆறும் விக்கிரமா தித்தன். இவன் ஒப்பற்ற பெரு வீரன் என்பதை வரலாற்று மாணாக்கர்கள் நன்கு அறிவர். இவன் கீழைச் சளுக்கியரைச் சோழர்களிடமிருந்து பிரித்துத் தன்பால் சேர்த்துக் கொள்ளும் காலத்தை எதிர்நோக்கி யிருந்தான்.

> "காலங் கருதி யிருப்பர்; கலங்காது
> ஞாலம் கருது பவர்."[10]

என்பது வள்ளுவப் பெருந்தகையின் வாக்கு அன்றோ? வேங்கி நாட்டதிபன் இராசராச நரேந்திரன் இறந்ததை அறிந்து அதுவே தனது குறிக்கோளை எய்துவதற்குத் தக்க காலம் என்பதை ஓர்ந்து, வனவாசியில் தன் பிரதிநிதியாக இருந்து கொண்டிருந்த மாதண்டநாயகனாகிய சாமுண்டராயன் என்பவனை ஒரு பெரும் படையுடன் வேங்கி நாட்டுக்கு அனுப்பி வைத்தான்.

அக்காலத்தில் சோழப் பேரரசனாகத் திகழ்ந்தவன் வீர இராசேந்திரன். முதல் இராசேந்திரனுக்குப் பிறகு சோணாட்டை ஆண்ட இராசாதிராசன் சளுக்கிய மன்னனை ஆகவமல்லனோடு புரிந்த கொப்பத்துப் போரில் உயிர் துறந்தான் என்பதையும் உடனே அவன் தம்பியாகிய விசய ராசேந்திரன் (இராசேந்திரதேவன்)[11] பொருகளத்தில் முடிகவித்துக் கொண்டு போரை நடத்தி வெற்றி பெற்றான் என்பதையும் நான்காம் பொழிவில் குறிப்பிட்டதை[12] நினைவு கொள்ளுமாறு வேண்டு கின்றேன். இவன் தன்மகள் மதுராந்தகியைத் தன் மருகன் இராசேந்திரனுக்குக் கடிமணம் செய்து கொடுத்தான் என்பதைக் குறிப்பிட விரும்புகின்றேன். மேலே குறிப்பிட்ட மரபுவழிப் படத்தை நோக்கித் தெளிவுபெற வேண்டுகின்றேன். இந்த இராசேந்திரதேவன் தன் தம்பி இராச மகேந்திரனுக்கு இள வரசுப் பட்டம் கட்டியிருந்தான். இவன் இளவரசனாய் இருந்த போதே இறந்து விட்டான்.[13] இவனுக்குப் பிறகு கி. பி. 1063-இல்

10. குறள்-485.
11. இவனை இரண்டாம் இராசேந்திரன் என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர்.
12. இந்நூல் பக்கம்-95.
13. பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி. 1 பக். 235.

அரசு கட்டில் ஏறியவன் வீரராசேந்திரனே. இவன் பேராற்றல் படைத்த பெருவீரன் என்பதையும், இவன் காலத்தில் நடை பெற்ற கூடல் சங்கமப் போரில் வாகை சூடியவன் என்பதையும் நாம் நன்கு அறிவோம்.

சாமுண்டராயன் தலைமையில் மேலைச் சளுக்கியர் படை யொன்று வேங்கி நாட்டை நோக்கிச் செல்கின்றது என்பதை அறிந்தான் வீரராசேந்திரன். தன்பாட்டன் இராசராசன் காலம் முதல் நெருங்கிய உறவினுற் பிணிக்கப்பெற்றிருந்த வேங்கி மன்னரையும், தங்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த வேங்கி நாட்டையும் இழப்பது தனது அடலாண்மைக்கும் பெருமைக்கும் மாசு தரும் என்று கருதினுன்; உடனே ஒரு பெரும் படையுடன் வேங்கி நாட்டிற்கு விரைந்தான். மேலைச் சளுக்கியர்கட்கும் சோழர் கட்கும் ஒரு கடும்போர் நிகழ்ந்தது. இப்போரில் சாமுண்டராயன் கொல்லப்பட்டான்; அவன் தலைமையின்கீழ் வந்த படைகள் யாவும் சிதறியோடின[14]. இப்போர் வீரராசேந்திரன் மேலைச் சளுக்கியரோடு இரண்டாம் முறை நடத்தியதாகும்.

குலோத்துங்கன் தன் தந்தை இறந்த பிறகு வேங்கி நாட்டை ஆண்டமைக்குத் தக்க சான்றுகள் இல்லை. அக்காலத்தில் அவன் இளைஞனுக இருந்தமையாலும், அவனுடைய சிறிய தந்தையான விசயாதித்தன் வேங்கி நாட்டை ஆளவேண்டும் என்று பெரு விருப்புடையவனுக இருந்தமையாலும் இளவரசுப் பட்டம் பெற்றிருந்தும்[15] நாட்டின் ஆட்சியைப் பெற முடிய வில்லை. அவன் மாமனை வீரராசேந்திரனும் மேலைச் சளுக்கிய ருடன் போர் நிகழ்த்துவதில் பெரிதும் ஈடுபட்டிருந்தமையால், வேங்கி நாட்டின் நிலைமையை யுணர்ந்து தன் மருமகனின் ஆட்சி யுரிமையை நிலைநிறுத்துவது இயலாத தாயிற்று.[16] ஆகவே, வேங்கி நாட்டை விசயாதித்தனே ஆட்சி புரிந்து வந்தான். இது பற்றிக் குலோத்துங்கனுக்கும் அவன் சிற்றப்பன் விசயாதித்தனுக் கும் பகைமை ஏற்பட்டிருந்தது என்பது விசயாதித்தன் செப்பேடு களாலும் அவனுடைய மகன் சத்திவர்மன் செப்பேடுகளாலும்

14. S. I. I. Vol. III. Pages 34 and 66.

15. தந்தை உயிருடன் இருந்தபொழுதே இளவரசுப் பட்டம் கட்டப்பெற்ற நாளிலே நாட்டின் ஒழுகலாற்றின்படி 'விஷ்ணு வர்த்தனன்' என்ற அபிடேகப் பெயர் அளிக் கப் பெற்றனன். Ins 396 & 400 of 1933.

16 EP. Ind. Vol XXV, p. 248. Kanyakumari Inscription of Vira Rajendra Chola, verse 77.

நன்கு அறியக்கிடக்கின்றது.[17] ஆனால் அப் பகைமை முற்றாமல் நாள் செல்லச் செல்லக் குறைந்து கொண்டேபோய் இறுதியில் நீங்கியது. சத்திவர்மன் கி. பி. 1063-இல் இறக்கவே, அவன் தந்தை விசயாதித்தன் நாட்டின்மீது வைத்திருந்த பற்றும் குன்றியது. எனவே, அவன் தன் தமையன் புதல்வனாகிய இராசேந்திரனிடத்தில் (குலோத்துங்கனிடத்தில்) சிறிது அன்பு பாராட்டவும் தொடங்கினான். குலோத்துங்கனும் தன் சிறிய தந்தை உயிர் வாழும் அளவும் வேங்கி நாட்டை ஆட்சி புரியட்டும் என்று அமைதியுடன் வாளா இருந்து விட்டான். ஆயினும், தன் சிறிய தந்தைக்குப் பிறகு வேங்கி நாட்டைத் தான் ஆளவேண்டும் என்ற எண்ணம் மட்டிலும் அவன் உள்ளத்தில் நிலைபெற்றிருந்தது என்பது ஒருதலை.

விசயாதித்தன் வேங்கி நாட்டை ஆண்டு கொண்டிருந்த பொழுது குலோத்துங்கன் சோழ நாட்டில் தன் மாமன் வீட்டில் வாழ்ந்து வந்தான். அப்பொழுது சோழ நாட்டை ஆண்டவன் வீரராசேந்திரன்.[18] வீரராசேந்திரன் மேலைச் சளுக்கியர்களுடன் நடத்திய போர்களில் குலோத்துங்கன் அப்போர்கள் சிலவற்றில் கலந்துகொண்டு தன் அம்மானுக்குத் துணைபுரிந்தான் என்பது சில நிகழ்ச்சிகளால் அறியப்பெறுகின்றது. வீரராசேந்திரன் வேங்கி நாட்டிலுள்ள விசயவாடையில் மேலைச் சளுக்கியருடன் போரிட்டு வெற்றி பெற்றுத் தன்பால் அடைக்கலம் புகுத்த விசயாதித்தனுக்கு அந்நாட்டை அளித்த காலத்தில் குலோத்துங்கனும் அந்நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டிருத்தல் வேண்டும் என்று அறிகின்றோம்.[19] அன்றியும், அவன் கடாரத்தரசனுக்குத் துணை செய்யும் பொருட்டுச் சோழ நாட்டிலிருந்து பெரும் படையொன்றை அனுப்பிய நாளில் கடாரத்திற்குச் சென்ற தலைவர்களுள் குலோத்துங்கனும் ஒருவன்.[20] எனவே, வீரராசேந்திரன்

17. Ryali plates of Vijayaditya VII and the Telugu Academy plates of Saktivarman II.

18. வீரராசேந்திரன் ஆட்சிக்காலம் கி. பி. 1063-1070.

19. Nilakanta Sastri, K. A. : **The Colas** (Second Edition) pp. 261-2.

20. தாழிசை-151 ஆனால் இவனது மெய்க்கீர்த்திகளில் இந்நிகழ்ச்சி குறிக்கப்பெறவில்லை எனவே, இவனது ஆட்சிக் காலத்தில் அது நிகழவில்லை என்பது திண்ணம். ஆகவே, இவனது இளமைப் பருவத்தில் வீரராசேந்திரன் ஆட்சியில் நிகழ்ந்த கடாரப் படையெடுப்பில் இவனும் கலந்து கொண்டு அங்குச் சென்று போர் புரிந்திருத்தல் வேண்டும் என்பது உறுதியாகின்றது. (சதாசிவ பண்டாரத்தார், T. V. : பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி 2, பக் 5, அடிக்குறிப்பு காண்க.)

காலத்துப் போர் நிகழ்ச்சிகள் சிலவற்றில் பங்கு கொண்டு இருத்தல் வேண்டும் என்றும், இதுகாரணமாக இவன் இளமையி லேயே போரில் சிறந்த பயிற்சி பெற்று ஒப்பற்ற பெரு வீரனுகத் திகழ்ந்தனன் என்றும் கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை.

வீரராசேந்திரன் தான் இறப்பதற்கு மூன்று ஆண்டுகட்கு முன்னர், கி. பி. 1067 இல், தன் மக்களுள் ஒருவனுன அதிரா சேந்திரனுக்கு இளவரசுப் பட்டம் கட்டியிருந்தான் என்பது கல் வெட்டுக்களால் அறியப்பெறும் செய்தியாகும். கி. பி. 1070 இன் தொடக்கத்தில் வீரராசேந்திரன் இறந்தவுடன் அதிராசேந்திரன் அரசு கட்டில் ஏறினுன். ஆனுல், முடிசூடிய சில மாதங்களில் அதிராசேந்திரன் நோய்வாய்ப்பட்டு இறந்தான் என்பது தஞ்சை மாவட்டத்திலுள்ள கூகூரில் காணப்பெறும் கல்வெட்டொன்ருல் அறியலாகும்.[21] இவன் வைணவர்களைத் துன்புறுத்திய கிருமி கண்ட சோழன் என்றும், அக்கொடுஞ் செயல்பற்றிச் சோழ நாட்டில் நிகழ்ந்த கலகத்தில் வைணவர்களால் கொல்லப்பெற் றிருத்தல் வேண்டும் என்றும் சில ஆசிரியர்கள் கருதுவதைத்[22] திரு. பண்டாரத்தார் பல சான்றுகளுடன் மறுப்பர்[23]. அங்ஙனமே முதற்குலோத்துங்கன் தான் சோழ நாட்டைக் கவர்ந்துகொள்ளும் பொருட்டு உள்நாட்டில் கலகம் நிகழுமாறு செய்து அதில் அதிரா சேந்திரனைக் கொன்றிருத்தல் வேண்டும் என்று சில ஆய் வாளர்கள் கருதுவதையும் மறுத்துக் குலோத்துங்கனுக்கும் அதிரா சேந்திரனுக்கும் எவ்வித பகைமையும் காழ்ப்பும் இல்லை என்பதும நன்கு நிலைநிறுத்தப் பெற்றுள்ளன.[25] அதிராசேந் திரனைப்பற்றியே கலிங்கத்துப் பரணி குறிபபிடாததற்கும், வீர ராசேந்திரன் மெய்க்கீர்த்தியின் இரண்டடிகளும் 'புகழ்மாது விளங்கச் செயமாது விரும்ப' என்று தொடங்கும் இவ்வேந்த னுடைய மெய்க்கீர்த்தியும் கலந்து வரையப்பெற்றிருப்பதற்குக் காரணம் வீரராசேந்திரனுக்குப் பிறகு உரிமைப்படி சோழ மண்ட லத்திற்கு அரசனுக்கப்பெற்றவன் குலோத்துங்கனே என்று உணர்த்துவதறகேயாகுமெ என்று திரு. K. A. நீலகண்டசாஸ்திரி

21. Inscription 280 of 1917.

22. The Colas Vol I p. 354.

23. பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி 1 (நான்காம் பதிப்பு பக். 270-71.

24. Annual Report for Epigraphy for 1904 p. 11.

25. பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி 1 (நான்காம் பதிப்பு) பக். 271-72 ; பகுதி 2. மூன்ருும் பதிப்பு) பக். 5-7.

யார் கருதுவர்.[26] சோழ நாட்டின் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டிய சமயத்தில் குலோத்துங்கன் தலைநகரில் இல்லாமல் திக்கு விசயம் புறப்பட்டதும், குலோத்துங்கன் ஆட்சிக்கு வந்ததும் அவனை வீழ்த்துவதற்கு ஆரும் விக்கிரமாதித்தன் முயன்றதும், அதிராசேந்திரனைப்பற்றிக் கலிங்கத்துப் பரணி குறிப்பிடாததும், அதிராசேந்திரன் காலத்தில் நடந்ததாகக் கூறப்பெறும் உள்நாட்டுக் கலகத்தில் குலோத்துங்கனும் பங்கு கொண்டிருத்தல் கூடும் என்று ஊகிக்க இடமுண்டு என்பதும் திரு. சாஸ்திரியாரின் கருத்து ஆகும்.[27] திரு. பண்டாரத்தார், அதிராசேந்திரன் காலத்தில் நாடு அமைதியாக இருந்தது என்று கல்வெட்டுச் சான்றுகளால் உறுதிப்படுத்தியதும், வீரராசேந்திரனும் குலோத்துங்கனும் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டவர்களாதலின், குலோத்துங்கனுக்கு முன்னதாகப் பரகேசரி என்ற பட்டம் புனைந்த வேந்தன் ஒருவன் இருந்தமையையும்,[28] அவன் உரிமையையும் ஒப்புக்கொண்டவன் என்று காட்டியதும் எவரும் ஏற்றுக் கொள்ள வேண்டிய காரணங்களாகும். விக்கிரமாங்கதேவ சரிதமும் விக்கிரமசோழன் உலாவும் அதிராசேந்திரன் ஆட்சியைக் குறிப்பிடுகின்றன. கலிங்கத்துப் பரணி அவன் ஆட்சியைக் குறிப்பிடாததற்கு யாது காரணமாக இருத்தல் கூடும் என்பதை ஊகிக்க முடியவில்லை.

வீரராசேந்திரனுக்குப் பிறகு சில திங்கள்வரை அரசாண்ட அதிராசேந்திரன் கி. பி. 1070 இல் இறந்த பிறகு சோழர் மரபில் அரச குமாரன் ஒருவரும் இல்லாமையால், குறுநில மன்னரது கலகமும் உள் நாட்டுக் குழப்பமும் எழுந்தன. சோழ நாட்டு மக்கள் எல்லோரும் அமைதியான வாழ்வின்றி ஆற்றொணாத் துன்பத்துள் ஆழ்ந்தனர். சயங்கொண்டார் இந்நிலையை,

> "மறையவர் வேள்வி குன்றி
> மனுநெறி யனைத்தும் மாறித்
> துறைகளோ ராறும் மாறிச்
> சுருதியும் முழக்கம் ஓய்ந்தே."[29]
> [சுருதி - வேதம்.]

---

26. The Colas (Second Edition) - p. 294.
27. ibid p. 294 and 295.
28. சோழ வேந்தர்களிடம் இராசகேசரி, பரகேசரி என்ற பட்டங்கள் மாறி மாறி வரும் என்பது அறியத்தக்கது. தந்தை பரகேசரியாக இருப்பின் மகன் இராசகேசரியாக இருப்பான்.
29. தாழிசை-258.

என்றும்,

"சாதிகள் ஒன்றோ டொன்று
தலைதடு மாறி யாரும்
ஓதிய நெறியி னில்லா(து)
ஒழுக்கமும் மறந்து போயே."[30]

[தலைதடுமாறுதல் - கண்டவாறு கலத்தல்.]

என்றும்,

"ஒருவரை யொருவர் கைமிக்(கு)
உம்பர்தம் கோயில் சோம்பி
அரிவையர் கற்பின் மாறி
அரண்களும் அழிய ஆங்கே"[31]

[கைம்மிகுதல்-கீழ்ப்படுத்து மேமபடல்; உம்பர்-கடவுளர்; சோம்புதல்-பூசையின்றி அவிந்து கிடத்தல்; அரண்-ஒழுக்க வரம்பு]

என்றும்,

"கலியிருள் பரந்த காலைக்
கலியிருள் கரக்கத் தோன்றும்
ஒலிகடல் அருக்கன் என்ன
உலகுய்ய வந்து தோன்றி"[32]

[கலி-துன்பம்; கரத்தல்-மறைதல்; அருக்கன்-ஞாயிறு]

என்றும் தம் நூலில் தெளிவாகக் கூறியுள்ளமை ஈண்டு அறியத் தக்கது. அன்றியும், சோழ நாடு அக்காலத்தில் அரசனின்றிக் குழப்பத்திற்குள்ளாயிருந்தது என்பது குலோத்துங்கனின் மெய்க் கீர்த்திகளாலும் உறுதிப்படுகின்றது.[33] இங்ஙனம சோழ நாடு நிலைகுலைந்திருக்கும் செய்தியை வடபுலத்தில போர் புரிநது

30. தாழிசை-259 31. தாழிசை-260. 32. தாழிசை-261.

33. "அருக்க னுதயத் தாசையி லிருககும
கமல மனைய நிலமகள தன்னை
முந்நீர்க் குளித்த அந்நாள் திருமால்
ஆதிக் கேழ லாகியெடுத் தன்ன
யாதுஞ் சலியா வகையினி தெடுத்துத்
தன்குடை நிழலில் இன்புற இருத்தித்
திகிரியும் புலியும் திசைதொறும் நடாத்திப்
புகழும் தருமமும் புவிதொறும் நிறுத்தி"
(S. I. I. Vol III No. 66.

கொண்டிருந்த குலோத்துங்கன் அறிந்து கங்கை கொண்ட சோழ புரத்திற்கு விரைந்தான். அங்கிருந்த அமைச்சர், படைத்தலைவர் முதலான அலுவலர்கள் அனைவரும் சோழனுடைய மகள் வயிற்றுப் பேரன் என்ற உரிமைபற்றி இவனை அரசனாக ஏற்றுக் கொண்டு முடி சூட்டினர். அந்த நாளிலிருந்துதான் 'குலோத்துங்கன்' என்ற அபிடேகப் பெயரைப் பெற்றான். அதற்கு முன்னர் அவனுக்கு வழங்கி வந்த பெயர் 'இராசேந்திரன்' என்பதை நாம் அறிவோம்,

குலோத்துங்கனின் ஆட்சி முறை முதலிய செய்திகளை வரலாற்று நூல்களில் விரிவாகக் கண்டு கொள்க. அவன் மேற்கொண்ட போர்களைப்பற்றிக் கலிங்கத்துப் பரணி குறித்திருப்பதை நான்காம் பொழிவில் கண்டோம்.[34] அவன் கருணாகரத் தொண்டமானைக் கொண்டு கி. பி. 1112இல் நடத்திய வட கலிங்கப் போர்தான் 'கலிங்கத்துப் பரணி' என்ற நூலின் பொருளாக அமைத்தது. கலிங்கத்துப் பரணியில் குறிப்பிடப் பெற்றுள்ள நிகழ்ச்சிகள் யாவும் செப்பேடுகளிலும், கல்வெட்டுக்களிலும் காணப்பெறும் செய்திகளுடன் ஒத்திருப்பதாக அறிஞர்கள் ஆய்ந்து கூறியுள்ளனர்.[35] அவற்றை விரிப்பின் இப்பொழிவும் பெருகும் என அஞ்சி இத்துடன் நிறுத்துகின்றேன். அடுத்து, இவனுடைய தளபதியும் கலிங்கப்போரை மேற்கொண்டவனுமான கருணாகரத் தொண்டைமானைக் குறித்துச் சில செய்திகளை அறிவோம்.

(முன்பக்க தொடர்ச்சி)

தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவை
தனிமையும் தவிர வந்து புனிதத்
திருமணி மகுடம் உரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவாறு பெருகக் கலியாறு வறப்பச்
செங்கோல் திசைதொறும் செல்ல''

*(S. I. I. Vol III No.* 701.)

34. இந்நூல் பக்கம்-97-105.

35. பிற்காலச் சோழர் சரித்திரம்-பகுதி 2 (மூன்றாம் பதிப்பு) *pp.* 10 - 40.

## 2. கருணாகரத் தொண்டைமான்

பெரும்புகழ் பெற்ற இந்தத் தளபதியை முதன் முதலாக நமக்குத் தெரிவித்தவர் செயங்கொண்டார் என்ற கவிஞர் பிரானே ஆவர். குலோத்துங்கன் அடைந்த வெற்றிச் சிறப்புக்களுக்கெல் லாம் அவன் கீழ் அமர்ந்த தானைத் தலைவர்களே காரணமாவர். அத்தலைவர்களுள் முதன்மை பெற்றுத் திகழ்ந்தவன் இக்கருணா கரனே. கலிங்கப் போரை நேரில் சென்று நடத்தித் தன் அரசனை அபயனுக்கு வாகை மாலை சூட்டியவன் இப்பெரு மகனே யாவான். ஆகவே, ஏவுதற் கருத்தனான அபயனுடன் இயற்றுதற் கருத்தனான இக் கருணாகரனையும் சயங்கொண்டார் தம் பரணியில் பலவிடங்களிலும் சிறப்பித்துள்ளார். இக்குறிப்புக் களையும், கல்வெட்டுக்களால் இவனைப்பற்றி அறியலாகும் செய்தி களையும், வரலாற்று அறிஞர்கள் இவனைப்பற்றி எழுதியுள்ளன வற்றையும் ஒருங்கு திரட்டி உங்கள் முன் வைக்க முயல்கின்றேன்.

கருணாகரன் என்ற பெயர் இராமபிரானின் திருநாமங்களுள் ஒன்று என்பதைக் கம்பராமாயணத்தால் அறிகின்றோம். அணை கட்டுவதற்கு முன்பு இராமன் வருணனை வேண்டித் திருப் புல்லணையிலிருந்ததைக் கம்பநாடன்,

> "தருண மங்கையை மீட்பதோர்
>     நெறிதரு கென்னும்
> பொருள்ந யந்துநன் நூல்நெறி
>     யடுக்கிய புல்லில்
> கருணை யங்கடல் கிடந்தனன்
>     கருங்கடல் நோக்கி
> வருண மந்திரம் எண்ணினன்
>     விதிமுறை வணங்கி"[36]

என்று கூறுவன். பரதன் கங்கை வேடனாகிய குகனுக்குத் தன் அன்னை கைகேயியை அறிமுகம் செய்து வைக்குங்கால், "கடுமை யார் கானகத்துக் கருணைஆர் கலியேக"[37] என்று கூறிய தொடரி லும் 'கருணாகரன்' என்ற பெயரின் பொருளை விளக்கிக் கூறுவதை அறியலாம். இவற்றை மனத்தில் வைத்தே சயங்கொண்டாரும்,

> " இலங்கை யெறிந்த கருணா கரன்றன்
>     இகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்

36 கம்பரா- யுத்த. வருணனை வழிவேண்-5.

37. கம்பரா. அயோத். குகப்.69.

கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடத் திறமினோ."[38]

[கருணாகரன்-கருணைக்கடலாகிய அயோத்தி அண்ணல்; இகல்-வலி; சிலை-வில்; கேட்பீர்-கேட்க விரும்பும் பெண்களே; கருணாகரன்-கருணாகரத் தொண்டைமான்; களப்போர்-கலிங்கப் போர்]

என்று பாடியுள்ளார் என்று கருதலாம். இருவரும் கருணாகரன் என்ற பெயருடையவராயினும் ஒருவன் இலங்கையெறிந்த புகழுடையவன்; மற்றவன் கலிங்கம் எறிந்த புகழுடையவன். குலோத்துங்கனைத் திருமாலின் அவதாரம்[39] என்று சிறப்பித்த கவிஞர் பெருமான் அவன் தளபதியாகிய கருணாகரனை அத்திருமாலின் திருவாழி[40] என்று போற்றியுள்ளார்.

"கண்ணா கியசோ ழன்சக் கரமாங்
கருணா கரன்வா ரணமேற் கொளவே"[41]

[வாரணம் யானை.]

என்று கலிங்கப்போர்மேல் செல்லுமிடத்திலும்,

"தண்டு கொண்டவன்
சக்கரம் வந்ததே"[42]

[தண்டு-சேனை.]

என்று எங்கராயன் வாக்காலும் இதனை அறியலாம்.

கருணாகரத் தொண்டைமான் பல்லவ அரசர் மரபுவழி வந்தவன்; தொண்டைமான் என்ற சிறப்புப் பெயர் பெற்றவன்; வண்டை என்ற ஊரின் தலைவன். இங்ஙனம் சிற்றரசனாகத் திகழ்ந்த இப்பெருமகன் குலோத்துங்கனின் தலைமைச் சேனாதிபதியாகவும் மந்திரத் தலைவனாகவும் விளங்கினான். கலிங்கத்துப் பரணி ஆசிரியர் இச்செய்திகளையும் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

"மண்ட லீகரும் மாநில வேந்தரும்
வந்து ணங்கு கடைத்தலை வண்டைமன்
தொண்டை மான்முதல் மந்திரப் பாரகர்
சூழ்ந்து தன்கழல் சூடி இருக்கவே".[43]

38. தாழிசை-64.
39. தாழிசை-234.
40. தாழிசை-363, 388.
41. தாழிசை-363.
42. தாழிசை-388.
43. தாழிசை-327.

[மண்டலீகர்-மண்டலத்தலைவர் ; உணங்குதல்-வருத்துதல் ; கடைத்தலை-வாயில் ; வண்டை-ஒரு நகரம் ; மந்திரம்-சூழ்ந்து எண்ணுதல் ; பாரகர்-கரைகண்டவர் ; கழல்-பாதம்]

முதற்குலோத்துங்கன் காஞ்சியில் வீற்றிருந்த நிலையினைக் குறிப்பது இத் தாழிசை.

"இறைமொ ழிந்தளவில் எழுக லிங்கமவை
எறிவ னென்று கழல் தொழுதனன்
மறைமொ ழிந்தபடி மரபின் வந்தகுல
திலகன் வண்டைநகர் அரசனே."[44]

[இறை - குலோத்துங்கன் ; எழு கலிங்கம் - ஏழு பிரிவான கலிங்கம் ; எறிவன் - அழிப்பேன் ; மரபு - நன்மரபு ; வண்டை நகர் அரசன் - கருணாகரன்]

குலோத்துங்கன் இட்ட கட்டளையைக் கேட்டவுடன் கருணாகரத் தொண்டமான் போருக்கு எழுந்தமையைக் காட்டும் சொல் லோவியம் இது.

"வண்டை வளம்பதி பாடீரே
மல்லையும் கச்சியும் பாடீரே
பண்டை மயிலையும் பாடீரே
பல்லவர் தோன்றலைப் பாடீரே"[45]

[வண்டை-கருணாகரன் ஊர் ; கச்சி-காஞ்சிபுரம் ; பல்லவர் தோன்றல்-கருணாகரன.]

பேய்கள் கூழடுவதற்கு அரிசி குற்றுங்கால் உலக்கைப் பாட்டு பாடிக் கொண்டே முற்றுவதைக் காட்டுவது இத்தாழிசை. இன்னும் கருணாகரன் பல இடங்களில் 'வண்டை நகர் அரசன்' என்றும், 'வண்டையர் கோன்' என்றும் நூலில் குறிக்கப்பெற்றுள் ளான். இவ்விடத்தில் ஒரு முக்கிய வரலாற்றுச் செய்தியை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகின்றேன். பிற்கா லச் சோழப் பேரரசில் பல்லவ வேந்தர்கள் தம் பழைய பெரு வலிமை குன்றி சோழர்களின் கீழ் அமைச்சர்களாகவும், ஏனைய அலுவலர் களாகவும் அமர்ந்திருந்ததுடன், தொண்டை நாட்டிலும் சோணாட்டிலும், பிறவிடங்களிலும் சிறியவும் பெரியவுமான ஊர் கட்குத் தலைவர்களாகவும் வாழ்ந்து வந்தனர். இச் செய்தியைப்

44. தாழிசை-341, 45. தாழிசை-534.

பல கல்வெட்டுக்களால் அறியலாம். அவ்வாறு அமர்ந்த பல்லவ வேந்தர்களுள் நம் கருணாகரனும் ஒருவன். இவன் முன்னோர் தொண்டை நாட்டை ஆண்டமைபற்றி அவருடைய நாட்டு ஊர்களையும் செய்திகளையும் இவனுக்கு உரியனவாகப் புலவர்கள் சிறப்பிப்பாராயினும் உண்மையில் இவன் சோணாட்டவனே என்பது உளங் கொள்ளத்தக்கது.

கருணாகரன் ஆண்ட வண்டை என்ற ஊர் தொண்டை நாட்டிலுள்ள தென்றும், சென்னைக்கும் செங்கற்பட்டுக்கும் இடையில் புகை வண்டிப் பாதையில் ஒரு நிலையமாக அமைந்துள்ள வண்டலூரே அவ்வண்டை என்றும் காலஞ் சென்ற திரு. வி. கனகசபைப் பிள்ளை, டாக்டர் ஹுல்ஸ் (Dr. Hultzsch) முதலிய வரலாற்று அறிஞர்கள் கருதினர்.[46] அவர்கள் அங்ஙனம் கருதினமைக்குக் காரணம் பல்லவ மரபினனாய்த் தொண்டைமான் என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்ததும், தொண்டை மண்டல சதக நூலார் அவனைத் தொண்டை நாட்டினனாக பாடியுள்ளது மாகும்.[47] ஆனால், பேராசிரியர் மு. இராகவய்யங்கார் அவர்கள் அவ்வண்டை என்ற ஊர் தொண்டை நாட்டிலுள்ள வண்டலூர் அல்ல வென்றும், அது சோழ மண்டலத்தில் திருநறையூர் நாட்டைச் சார்ந்த ஊர் என்றும், அந்த ஊர்க் கல்வெட்டுக்களில் 'வண்டாழஞ்சேரி' என்று வழங்குகின்றதென்றும், அந்த வண்டாழஞ்சேரியே இப்பொழுது 'வண்டுவாஞ்சேரி' என மருவி வழங்குகின்றதென்றும் கருதுவர். அதற்குச் சான்றாக இவர் குறிப்பிடும் கல்வெட்டு :

" ஸ்வஸ்தி ஸ்ரீ கோ. இராஜகேசரிவன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவருக்கு யாண்டு நாற்பத்து மூன்று, ஜயங்கொண்ட

46. *S. I. I.* II, 113.
47. " பண்டைபோர் நாளையில் ஓரேழ்
 கலிங்கப் பரணிகொண்டு
 செண்டையும் மேருவில் தீட்டுவித்
 தோன்கழல் செம்பியன்சேய்
 தொண்டைநன் னாடு புரக்கின்ற
 கோனந்தி தோன்றல்எங்கள்
 வண்டையர் கோன்நங் கருணா
 கரன்தொண்டை மண்டலமே."
 —தொண்டை மண்டல சதகம் - 92,

சோழ மண்டலத்து எயிற்கோட்டத்து எயில் நாட்டுத் திருவத்தியூர் ஆழ்வார்குச் சோழ மண்டலக் குலோத் துங்க சோழ வள நாட்டுத் திருநறையூர் நாட்டு வண்டாழஞ் சேரி யுடையான் வேளான் கருணாகரனான தொண்டைமானார் தேவியர் அழகிய மணவாளனி மண்டை யாழ்வார் வைத்த திருநுந்தா விளக்கு."

இதில் குறிப்பிப்பெற்றுள்ள 'கருணாகரனான தொண்டைமானார்' தான் கருணாகரத் தொண்டைமான் என்பது பேராசிரியர் அய்யங்கார் அவர்களின் கருத்தாகும். அமைச்சர் குலம் போன்ற உயர் பதவியிலுள்ள மகளிரை 'ஆழ்வார்' என்று வழங்குதல் அக்காலத்து வழக்கு என்பதற்கும் கல்வெட்டுக்களிலிருந்து சான்றுகளையும் எடுத்துக் காட்டி உறுதி செய்வர்.[48] 'வண்டுவாஞ் சேரி' என்ற அந்த ஊர் தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்திலுள்ள 'திருநறையூர்' என்பதும், 'நாச்சியார் கோவில்' என்று வழங்கும் அந்த ஊருக்கும் திருச்சேறைக்கும் இடையில் உள்ள ஊரே என்பதும் அறியத் தக்கவை.

கருணாகரத் தொண்டைமானுக்குத் தமையன் ஒருவன் இருந் தான். கலிங்கத்துப் பரணி இவனை,

"தொண்டை யர்க்கரசின் முன்வருஞ் சுரவி
துங்க வெள்விடை யுயர்த்தகோன்
வண்டை யர்க்கரசு பல்லவர்க்கரசு
மால்க ளிற்றின்மிசை கொள்ளவே."[49]

[சுரவி-காமதேனு ; துங்க-தூய்மையான ; வெள்விடை-வெண் மையான எருது ; களிறு-யானை.]

என்ற தாழிசையில் குறிப்பிடுகின்றது. அண்ணன் காஞ்சியி லிருந்து கொண்டு தொண்டை நாடுமுழுவதையும் ஆண்டு கொண்டிருந்ததால் 'பல்லவர்க்கரசு' என்று குறிப்பிடப்பெற்

48 S. I. I. iv No 862 p. 18 இல் "நம்பெருமாள் (அபயன்), திருத்தங்கையார் மதுராந்தகியாழ்வார்", ibid p. 35 இல் "சுங்கந் தவிர்த்த குலோத்துங்க சோழன் மகளார் அம்மங்கையாழ்வார்", ibid III p. 153 இல் விருதராச பயங்கர வாணகோவரையர் தங்களாச்சி சோழகுல சுந்தரி விச்சாதிரியாழ்வார்" என்பன காண்க.

49. தாழிசை-364,

றுள்ளான். குலோத்துங்கனுக்குப் படைத் தலைவனும் அமைந்த கருணாகரன் வண்டை நகரின்கண் இருந்து சோழ நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி செய்து வந்ததால் 'வண்டையர்க்கரசு' என்று சுட்டப்பெறுகின்றான். தம்பியைப் போலவே தமையனும் பேரரசனை குலோத்துங்கனுக்கு உட்பட்ட பல சிற்றரசர் களுள் ஒருவனாய், நெருங்கிய நண்பனாய், இருந்து வந்தான் என்று ஊகம் செய்வதில் தவறு ஒன்றும் இல்லை. இந்த நட்புக் காரணமாகவே குலோத்துங்கன் பாலாற்றங்கரையில் பரி வேட்டையாடியபின் தன் பரிவாரங்களுடன் காஞ்சியில் வந்து தங்கியிருந்தனன் என்று கருத இடம் உண்டு. ஒருதாய் வயிற்றுப் பிறந்த சகோதர்களுள் மூத்தோனிருப்பவும் இளையோன் அரசிய லில் தலைமை வகிக்க நேர்ந்தது,

> " ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக என்னாது அவருள்
> அறிவுடை யோனாறு அரசும் செல்லும்"[50]

என்ற ஆன்றோர் கருத்துப்படி ஒக்குமென்றே கொள்ளல் வேண்டும்.

கலிங்கப் போரின் வெற்றிக்கு முக்கிய வில் விசையாகத் திகழ்ந்தவன் கருணாகரத் தொண்டைமானே என்பதைக் 'கலிங் கத்துப் பரணி' உறுதி செய்கின்றது. சோழப் படைகளால் அழிக்கப்பட்டன போக எஞ்சி நின்ற கலிங்கப் படைகள் நாற்புறமும் சிதறியோடி ஒழிந்தன. தொண்டைமான் வாகை சூடிக் குலோத்துங்கனை வந்தடைகின்றான். இதனைக் கவிஞர் பெருமான்,

> " கடற்கலிங்கம் எறிந்துசயத் தம்பம் நாட்டிக்
> கடகரியும் குவிதனமும் கவர்ந்து தெய்வச்
> சுடர்ப்படைவாள் அபயனடி அருளி னோடுஞ்
> சூடினான் வண்டையர்கோன் தொண்டைமானே".[51]

[சயத்தம்பம்-வெற்றித்தூண் ; கரி-யானை ; தனம்-செல்வம் ; அபயன்-குலோத்துங்கன் ]

என்ற தாழிசையால் இச் செய்தியை நமக்கு அறிவிக்கின்றார்.

முதற் குலோத்துங்கனது 42-ஆம் ஆண்டில் பொறிக்கப் பெற்ற ஆலங்குடிக் கல்வெட்டில் இக்கலிங்கப் போரின் விவரம் குறிப்பிடப்பெற்றுள்ளது. அச்செய்தி கூறும் கல்வெட்டுப் பகுதி வருமாறு :

---

50. புறம்-283. 51. தாழிசை-471

" வடதிசை வேங்கை மண்டலங் கடந்து
தாங்கிய கலிங்கமுந் தழலெரி பரப்ப
விலங்கல் போல விளங்கிய வேந்தர்
விட்டவெங் கரியோடு பட்டனர் புரளப்
பொருகோ பத்தொடு போர்முக மதிர்வரு
கோமட் டையன் மாதவ னெதிர்பட
எங்க ராய னிகலவ ரேச்சணன்
மாப்பிறளா (?) மதகரி யிராசணன்
தண்டுபதி யாகிய தலைச்சே னுபதி
மண்டலிக தாமய னெண்பாத் (?) திசைமுகன்
போத்தயன் கேத்தணன் செருச்சே னுபதி
என்றிவ ரனைவரும்
வெற்றவே முத்தொடு பட்டு மற்றவர்
கருந்தலையோடு வெண்ணிணங் கழுகொடு
பருந்தலைத் தெங்கணும் பரப்ப வுயர்த்துத்
தருங்கட லாடைத் தராதலந் திறந்து
கலிங்க மேழுங் கைகொண் டொருபகல்,
* * * * *
வீரசிம் மாசனத்து வீற்றிருந் தருளின
கோவிராச கேசரி வன்மரான........
ஸ்ரீ குலோத்துங்க சோழவேந்தருக்கு........"[52]

இக்கல்வெட்டுப் பகுதியிலிருந்து கருணாகரன் சேனையுடன் எதிர்த்து இறந்த கலிங்க சேனாதிபதிகள் இன்னாரின்னார் என்பதை அறிந்துகொள்ளலாம் ஆனால், இவர்களுள் சிலரது பெயர்கள் தெளிவாக அறியக் கூடவில்லை. குலோத்துங்கனது ஏனைய கல்வெட்டுக்கள் யாவும் கலிங்க வெற்றியைப் பொதுவாகத்தான் சிறப்பித்துக் கூறுகின்றன. ஆயின், இக்கல்வெட்டு ஒன்று மட்டிலும் விவரமாக அவ்வெற்றியினைச் சிறப்பித்துக் கூறுகின்றது என்பதனை ஈண்டு உங்கட்குக் குறிபபிட விரும்புகின்றேன். இக்கல்வெட்டுக் குறிப்பிடும் கலிங்கசேனாதிபதியருள் எங்கராயன் என்பவனே கருணாகரனை எதிர்க்காது அவனுடன் சந்து செய்து கொள்ளும்படிக் கலிங்கவேந்தனுக்கு கழறியுரைத்தவன். இது,

" என்று கூறலும் எங்க ராயனுன்
ஒன்று கூறுவன் கேளென் றுணர்த்துவான்"[53]

என்ற சயங்கொண்டாரின் கூற்றாலும் அறியப்பெறுகின்றது. மேற் குறிப்பிட்ட கல்வெட்டினால் குலோத்துங்கனது 45-ஆம் ஆட்சி ஆண்டிற்கு முன்பு (கி பி. 1115) கருணாகரனது கலிங்கப்

52. S. I. I. iv p. 136. 53. தாழிசை-378.

படையெடுப்பு நடந்திருத்தல் வேண்டும் என்பது உறுதிப்படு கின்றது என்பதனை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கின்றேன்.

கலிங்கப்போர் நடைபெற்ற காலத்தில் குலோத்துங்கன் மகன் விக்கிரம சோழன் இளங்கோவாக இருந்தனன் என்றும், அவனும் கருணாகரனுடன் கலிங்கப் போருக்குச் சென்றனன் என்றும், ஆங்கு நடந்த போரொன்றில் அவன் வெற்றி பெற்றான் என்றும் சில வரலாற்று ஆசிரியர்கள் கருதுவர். விக்கிரம சோழன் இள வயதில் கலிங்க நாட்டின்மீது படையெடுத்துச் சென்று, ஆங்கு நடந்த போரொன்றில் வெற்றி பெற்றான் என்பது உண்மையே[54]. ஆயின், அது சயங்கொண்டார் பாடிய கலிங்கப் போரைத்தான் குறிக்கின்றது என்று துணிய இடமில்லை. மற்று, அப்போர் தெலுங்க வீமன் என்ற கலிங்க மன்னனுடன் நடத்தியதென்பது,

" தெலுங்க வீமன் விலங்கன்மிசை யேறவும்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலந் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளி"[55]

எனவரும் அவனது மெய்க்கீர்த்தியால் தெளிவாகின்றது. ஒட்டக் கூத்தரும் தம் உலாக்களில்,

" ஏனைக் கலிங்கங்கள் ஏழனையும் போய்க்கொண்ட
தானைத் தியாக சமுத்திரமே".[56]

" கலிங்கப் பெரும்பரணி கொண்ட பெருமான்".[57]

என்று குறிப்பிடுவனவும் இக்கலிங்க வெற்றியாகவே கருத வேண்டும். குலோத்துங்கன் நடப்பித்த கலிங்கப்போர் விக்கிரம சோழன் நடத்திய அப்போரினும் வேறான தென்பது கல்வெட்டு ஆய்வாளர்களும் ஒரு முகமாக ஒப்புக் கொள்வர். சயங்கொண் டார் பாடிய கலிங்கப் போருக்கு விக்கிரமனும் சென்றிருப்பின்,

54. ஒட்டக்கூத்தர், விக்கிரம சோழனது கலிங்க வெற்றி பற்றிப் பாடிய பரணி யொன்றும் உண்டென்பது, தக்கயாகப் பரணி உரையால் அறியப்பெறுகின்றது. அந்த நூல் இக்கலிங்க வெற்றியைப் புகழ்வது போலும்.

55. இராகவய்யங்கார், மு; ஆராய்ச்சித் தொகுதி (1938) பக். 421-22.

56. விக்கிரம சோழன் உலா-கண்ணி 331.

57. குலோத்துங்க சோழன் உலா-கண்ணி-28.

அப் போருக்குச் சென்றிருந்த தானைத் தலைவர், துணைத் தானைத் தலைவர் இவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுத் தனித்தனித் தாழிசைகளால் பாடும்[58] கவிஞர் பெருமான் இளங்கோ என்பது விளங்கத் தோன்ற அவ்விக்கிரமன் பெயரையும் குறிப்பிட்டுச் சிறப்பித்திருப்பர் அல்லவா? ஆனால், மேற்காட்டிய மெய்க்கீர்த்தி குறிப்பிடும் கலிங்கப் போர் குலோத்துங்கன் கி. பி. 1095-6 இல் நடத்திய 'தென் கலிங்கப் போர்' என்றும், அப்போருக்கு விக்கிரமன் இளவயதில் சென்றிருத்தல் வேண்டும் என்றும் பேராசிரியர் மு. இராகவய்யங்கார் கருதுகின்றார்கள்.[59] குலோத்துங்கன் இரண்டாம் முறையாக நடத்திய வடகலிங்கப் போரோ, அவன் ஆட்சி முடிவுக்குச் சில ஆண்டுகட்கு முன்னர்க் கருணாகரன் நடத்தியதாகும் என்பது பேராசிரியரின் கருத்தாகும். கல்வெட்டு ஆய்வாளர்கட்கும் இக்கருத்து உடன்பாடாகும

கலிங்கத்துப் பரணிப் படிகளிலும் தண்டியலங்கார மேற்கோளிலும் கலிங்கப் போரையும் கருணாகரனையும்பற்றிக் காணப் பெறும் ஒரு சில பழம் பாடல்களையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றேன்.

"தடங்குலவு நாண்மாலைத் தாமத்தன் கையில்
விடங்குலவு வெல்வான் விதிர்ப்ப — நடுங்கியதே
கோண்மேவு பாம்பின் கொடுமுடிய தல்லவோ
வரண்மே வியகலிங்கர் மண்".[60]

[ஈற்றுச் சீர் 'மன்' என்பதுவும் பாடம்]

"சுரநிரைத் தாலன்ன தண்பனி
தூங்கத் தலைமிசைசெங்
கரநிரைத் தாரையும் காண்பன்கொ
லோகலிங் கத்துவெம்போர்
பொரநிரைத் தார்விட்ட வேழமெல்
லாம்பொன்னி நாட்டளவும்
வரநிரைத் தான்றெண் டை மான்வண்டை
மாநகர் மன்னனே."[61]

இப்பாடல்கள் இரண்டும் சென்னை பழம் பொருட்காட்சி சாலை (Museum) கையெழுத்து நூல் நிலையத்திலும், தஞ்சை சரசுவதி

58. தாழிசை-364, 365.
59. ஆராய்ச்சித் தொதி - பக். 438.
60. கலிங்கத்துப் பரணிப் படியொன்றில் காணப்பெறுவது.
61. கலிங்கத்துப் பரணிப் படி.

மகாலிலும் உள்ள பரணிப் படிகளின் இறுதியிலும் காணப் பெறுபவை.

" கரடத்தான் மாரியும் கண்ணுல் வெயிலும்
நிரைவயிரக் கோட்டா னிலவுஞ்—சொரியுமால்
நீளார்த் தொடையதுல னேரார் கலிங்கத்து
வாளாற் கவர்ந்த வளம்."[62]

" கோட்டந் திருப்புருவம் கொல்லா லவர்செங்கோல்
கோட்டம் புரிந்த கொடைச்சென்னி — நாட்டஞ்
சிவந்தன வில்லே திருந்தார் கலிங்கஞ்
சிவந்தன செந்தீத் தெற."[63]

" ஒருவ ரொருவர்மேல் வீழ்ந்துவட நாடர்
அருவ ரருவரென வஞ்சி — வெருவந்து
தீத்தீத்தீ யென்றயர்வர் சென்னி படைவீரர்
போர்க்கலிங் மீதெழுந்த போது."[64]

இவை மூன்றும் தண்டியலங்கார மேற்கோள் பாடல்களாகும்.

இறுதியாக இன்னெரு ஆராய்ச்சிக் குறிப்பு ஒன்றை உங்கள் முன் வைத்து இப்பொழிவினை முடிக்க எண்ணுகின்றேன். "ஸூக்தி ரத்நஹாரம்" என்ற வடமொழி நீதித் திரட்டைக் "குலசேகரன்" என்று தன் அரசன் பெயரிட்டு வழங்கியவன் குலசேகரனுடைய தலைமை அமைச்சனை 'காலிங்கராசர்' என்பவரென்றும், அக்காலிங்கராசர்தான் அபயனது சேனுதிபதி யாகவும் சிதம்பரம் முதலிய கோயில்களில் திருப்பணி செய்தவனுகவும் கல்வெட்டுக்களால் அறியப்பெறும் காலிங்க ராயனேயாதல் வேண்டுமென்றும், இக்காலிங்கராயனது கல் வெட்டுக்களில் இவனுக்கு 'அருளாகரன்' என்ற மறு பெயரும், தன்னரசனை அபயன்பொருட்டு வட நாட்டு அரசர்களுடன் போர்கள் பல புரிந்த செய்தியும் காணப்பெறுவதால் இவனே அவ்வபயனுடைய தலைமைச் சேனுதிபதியாய்க் கலிங்கமெறிந்த கருணுகரனுக வேண்டுமென்றும், 'வண்டை' என்ற ஊரின் தலைவனுகக் கருணுகரனையும், மணவி என்ற ஊரின் தலைவனுக

62. தண்டி-கருவிக் காரக ஏதுவணியின் மேற்கோள்.
63. ஷை -குணக்குறை விசேட அணியின் மேற்கோள்.
64. ஷை -சொற்பொருள் பின்வருநிலை அணியின் மேற்கோள்.

இக்காலிங்கராயனையும் பரணியும் கல் வெட்டுக்களும் முறையே வேறுபடக் கூறினும், முதலில் வண்டையிலிருந்த கருணாகரனே கலிங்கப் போருக்குப்பிறகு மணவியைத் தனக்குரிய ஊராக மாற்றி யிருக்கக் கூடுமென்றும், ஸூக்தி ரத்நஹாரத்தில் குலசேகரனின் அமைச்சனாக இக்காலிங்கராயனைக் கூறியிருப்பதற்குக் காரணம் அங்குலசேகரப் பெயர் அபயனுக்குரியதென்பது 'வாழி சோழ குலசேகரன்'[65] என்ற பரணித் தொடரால் அறியப்பெறுதலால் என்றும், ஆகவே அவ்வபயனே அந்நீதி நூல் கூறும் குல சேகரனாதல் வேண்டும் என்றும் திருவனந்தபுரம் கல்வெட்டுத் துறைத் தலைவராக இருந்த திரு. ஏ.எஸ். இராமநாத அய்யரவர் கள் கூறுவர்.[66] இவற்றால் குலசேகரன் அமைச்சர் காலிங்க ராயனான அருளாகரன், கலிங்கம் வென்ற கருணாகரன் என்ற மூவரும் ஒருவரே என்பது திரு அய்யரவர்கள் கொண்ட முடிவு என்பதாகத் தெரிகின்றது.

இக்கருத்தைப் பேராசிரியர் மு. இராகவய்யங்கார் அவர்கள் மறுத்து, ஸூக்தி ரத்நஹாரம் செய்த காலிங்க ராசனும், அபயன் சேனாதிபதியருள் ஒருவனான மணவிற் காலிங்கராயனும், அவன் தலைமைச் சேனாதிபதியான வண்டைக் கருணாகரனும் மூவேறு தலைவர்கள் என்றும், அம்மூவரையும் ஒருவராகக் கொள்வதற்குத் தக்க சான்றுகள் இல்லையென்றும் தடை விடைகளால் தெளிவாக ஆய்ந்து அறுதியிட்டுள்ளார்கள்.[67] விவரம் விரும்புவோர் அந் நூலை நோக்கி அறிந்து கொள்வார்களாக. இறுதியாக "பரணிக் கோர் சயங்கொண்டான்" என்று புலவர்கள் போற்றும் சயங் கொண்டாரைப்பற்றி ஒரு சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்பு கிறேன்.

## 3. சயங்கொண்டார்

'கலிங்கத்துப் பரணி' என்னும் நூலை இயற்றிக் குலோத்துங் கனின் புகழையும் அவன் தலைமைச் சேனாதிபதியான கருணாகரத் தொண்டைமானின் பெருமையையும் இப் பூவுலகில் என்றும் அழியாமல் நிலைபெறச் செய்தவர் சயங்கொண்டார் என்ற கவிஞர் பெருமான். அவர் குலோத்துங்க சோழனின் அவைக் களத்தை அணி செய்த ஒப்பற்ற புலவர் மணி. இளமைப்

65. தாழிசை-285.

66 "கருணாகரத் தொண்டைமானும் ஸ்ரீ ஸூக்தி ரத்ந ஹாரமும்" என்ற கட்டுரையில்.

67. ஆராய்ச்சித் தொகுதி-பக் 439-445.

பருவத்திலேயே இலக்கண இலக்கியங்களை முறையே கற்றுத் தேர்ந்த வித்தகர். ஒருநாள் கவிஞர், அபயனைக் காண விழைந்து அவனுடைய அவைக்களம் அணுகினர். அப்போது அவ்வரசன் இவரை நோக்கி அவருடைய ஊர் யாது என வினவ அவரும் உடனே,

" செய்யும் வினையும் இருளுண் பதுவும்
தேனும் நறவும் ஊனும் களவும்
பொய்யும் கொலையும் அறமும் தவிரப்
பொய்தீர் அறநூல் செய்தார் தமதூர்
கையும் முகமும் இதமும் விழியும்
காலும் நிறமும் போலும் கமலம்
கொய்யும் மடவார் கண்வாய் அதரம்
கோபம் கமழும் தீபங் குடியே."[68]

*[நறவு-தேன்; இதழ்-உதடு; கமலம்-தாமரை; அதரம்-உதடு]*

என்ற கவிதையால் விடையிறுத்தனர். அதனைக் கேட்ட அக்காவலன் இவரது கல்விப் பெருக்கையும் கலையுணர்ச்சியையும் கண்டு இவரைத் தமது அவைக்களப் புலவராய் அமர்த்திக் கொண்டான் என்ற செய்தியை அறிகின்றோம் ஆனால் 'தீபங் குடி' என்ற பெயருடன் தொண்டை நாட்டில் ஒருரும், சோழ நாட்டில் ஓருரும் உள்ளன. தஞ்சை மாவட்டத்துக் கல்வெட்டொன்று "இளங்கோ நாட்டுத் தீபங்குடி" என்று ஓர் ஊரைக் குறிக்கின்றது.[69] இவற்றுள் சயங்கொண்டார் எந்த ஊரைச் சார்ந்தவர் என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. எனினும், இவர் முதற் குலோத்துங்கனைச் சிறப்பித்திருப்பதால் சோழ நாட்டுத் தீபங்குடியினர் என்று கோடலே பொருந்தும்.

மேற் கூறியவாறு அவர் பிறந்த ஊர் இன்னதென்பதோடு கூட, அவரது பிறப்பு, வளர்ப்பு, இயற்பெயர், வாழ்க்கை வரலாறு முதலிய செய்திகளும் நன்கு அறியக்கூடவில்லை. ஆயினும், இவர் கலிங்கத்துப் பரணி பாடியதுகுறித்துச் செவிவழிச் செய்தி ஒன்று வழங்கி வருகின்றது. கலிங்கப் போர் நிகழ்ந்த பிறகு ஒருநாள் கவிஞரேறும் காவலரேறும்

68 தமிழ் நாவலர் சரிதை-117. இப்பாடல் 'தீபங்குடிப் பத்து' என்னும் நூலில் சில பாட வேறுபாட்டுடன் மூன்றாவது பாட்டாக வுள்ளது.

69. A. R. No, 28 of 1917.

சவையில் மகிழ்ச்சியுடன் உரையாடிக் கொண்டிருந் தனர். அது காலை அவ்விறைவன், "செந்தமிழ்ப் புலவீர், கலிங்க நாட்டைச் சயங்கொண்டமையால், யானும் தங்களைப் போல 'சயங்கொண்டான்' ஆயினேன்" என்று வேடிக்கை யாக விளம்பினன். அதனைச் செவிமடுத்த கவிஞர் பெருமான் அங்ஙனமாயின், "சயங்கொண்டானைச்' சயங்கொண்டான் பாடுதல் சாலத் தகவுடைத்தாம்" என இயம்பினர். இவ்வுரை யாடல் நிகழ்ந்த சில நாட்களில் 'கலிங்கத்துப் பரணி'யைப் பாடி முடித்தனர் என்பதே அந்தச் செய்தியாகும். இந்த நூல் அரங் கேற்றப்பெறுங்கால் அந்நூலிலுள்ள பாடல்களின் சொற்சுவை பொருட் சுவைகளைக் கண்டு வியந்து ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டிப் புலவரையும் அவரது நூலினையும் சிறப்புச் செய்ததாகவும் அச்செவிவழிச் செய்தியால் அறிகின்றோம். இஃதெவ்வாறாயினும், சயங்கொண்டாருக்கு அக்கொற்றவன் பெரும் பரிசு அளித்திருத்தல் வேண்டும் என் பதில் அணுவளவும் ஐயமில்லை. 'கவிச்சக்கரவர்த்தி' என்ற பட்டத்தையும் முதற்குலோத்துங்கன் இவருக்கு வழங்கியிருத்தல் வேண்டும் என்று ஊகம் செய்வதில் தவறு ஒன்றும் இல்லை.

**சமயம் :** கவிஞர் பெருமான் எச்சமயத்தைச் சார்ந்தவர் என்பதனையும் உறுதியாக அறுதியிட முடியவில்லை. இவரது ஊரைப்பற்றிய மேற்கூறிய பாடலில் இரவில் உண்ணாமை, உயிர்க் கொலை புரியாமை முதலிய சமண சமயக் கோட்பாடுகளை நன்கு விளக்கியிருத்தலால், அப்போது இவர் சமணராயிருந்தன ரென்பது தெள்ளிதிற் புலனாகின்றது 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்"[70] என்ற திருவாய் மொழிப்படி இவர் குலோத்துங்கனின் பிறப்பினை,

" அன்றிலங்கை பொருதளித்த அவனேஅப்
பாரதப்போர் முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதரன்
எனஉதித்தான் விளம்பக் கேண்மின்."[71]

[பொருது-போர் செய்து ; கதிராழி-ஒளியையுடைய சக்கரம்]

என்று திருமால் அவதாரமாகவே கூறுகின்றனரேனும் இவரை வைணவர் என்று கொள்ளுவதற்கில்லை.

" புயல்வண்ணன் புனல்வார்க்கப் பூமிசையோன்
தொழில்காட்டப் புவன வாழ்க்கைச்

70. திருவாய்மொழி-4 . 4 : 8. 71. தாழிசை-232.

செயல்வண்ணம் நிலைநிறுத்த மலைமகளைப்
புணர்ந்தவனைச் சிந்தை செய்வாம்.''[72]

[புயல் வண்ணன் - திருமால்; புனல் - நீர்; பூமிசையோன்- நான்முகன் ; செயல் - திருமணச் சடங்கு ; புவனம் - உலகம் ; வாழ்க்கை - இல்லற வாழ்க்கை ; வண்ணம் - தன்மை ; மலை மகளைப் புணர்ந்தவன் - சிவன்]

என்று முதலில் சிவ வணக்கம் கூறியிருத்தலாலும், உமாதேவி, ஆனைமுகன், முருகவேள், உமாதேவியின் கூறுகளான அன்னையர் எழுவர் (சப்தமாதர்) ஆகியோருக்கெல்லாம் தனித்தனியாக வணக்கம் கூறியிருப்பதாலும் இவரைச் சைவ சமயத்தினர் என்று உறுதியாகக் கூறலாம். இதனால், இவர் முதலில் சமணராக இருந்து குலோத்துங்கனை வந்து அடைந்த பின்னர் சைவராய் மாறி யிருத்தல் வேண்டும் என்று தோன்றுகின்றது. மேலும் நான் முகன், திருமால் முதலானோர்க்கும் வணக்கம் கூறியிருத்தலால் இவர் சமயப் பொறையுடையவர் என்பதற்குத் தட்டில்லை.

**காலம்** : இனி, இவர் வாழ்ந்த காலத்தைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். முதற் குலோத்துங்கன் (கி. பி. 1070-1118) கிட்டத்தட்ட ஐம்பதாண்டுகள் ஆட்சிபுரிந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். இரண்டாம் கலிங்கப்போர் நடை பெற்றது கி. பி. 1112 இல். இந்தப் போரைத்தான் சயங்கொண் டார் கலிங்கத்துப் பரணியின் நூற்பொருளாக அமைத்துக் கொண்டார். எனவே, சயங்கொண்டாரின் காலமும் குலோத் துங்கனின் காலமும் ஒன்றே என்று கொள்வதற்குத் தடை இல்லை. இப்படிக் கொண்டால் இக்கவிஞர்பிரான் கம்பநாடனுக்கு முந்தி யவர் என்பது பெறப்படுகின்றது. பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் கம்பநாடன் தன் காவியத்தைக் கி. பி. 1178 இல் பாடி முடித்து கி. பி. 1185 இல் அரங்கேற்றினார் என்பதைப் பல சான்றுகளுடன் நிறுவியுள்ளார்கள்[73] என்பது ஈண்டு நினைதற் பாலது. எனவே, இவரைக் கம்பநாடன் வாழ்ந்த காலத்திற்கு முன்பு வாழ்ந்தவர் என்றே கொள்ளல் வேண்டும்.

**புகழ்க் கொடை** : இவ்விடத்தில் முக்கிய நிகழ்ச்சியொன் றினைக் குறிப்பிட விரும்புகின்றேன். சயங்கொண்டார் அபயனுக் களித்த புகழ்க்கொடை அவன் அவருக்கு உதவியிருக்கக் கூடிய

72. தாழிசை-1.
73. வையாபுரிப்பிள்ளை, 5: தமிழ்ச் சுடர் மணிகள்-கம்பர். பக் 130.

[கொ]யாப் பொருட் கொடையினும் பல்லாயிரம் மடங்கு பெரிது என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ ?

" கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றவர் செய்யும் உடம்பு"[74]

[மலரவன் - நான்முகன்]

என்று ஆன்றோர் கூறியவாறு நான்முகன் படைத்த இவ்வுடம்பு அழிய, கவிஞர் செய்த காவியம் என்றும் மாயாது நிலைத்து நிற்குமன்றோ ? ஒரு சமயம் இவர் அபயன்மீது முனிவு கொண்டு பாடியதாகத் தமிழ் நாவலர் சரிதையில்,

" காவலர் ஈகை கருதுங்கால் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசுஒவ்வா—பூவில்நிலை
யாகாப் பொருளை அபயன் அளித் தான்புகழாம்
ஏகாப்பொருள் அளித்தேம் யாம்."[75]

[காவலர்-அரசர்; ஈகை-கொடை; பாவலர்-புலவர்; பூ-பூமி]

என்று காணப்பெறும் வெண்பா ஒன்றாலும் இதனை அறியலாம். குலோத்துங்கன் தனக்குச் செய்த சிறப்புக் குறைந்து தன் மனத்தை வருத்தவே அது கண்டு பொருதவராய்ச் சினந்து சயங்கொண்டார் இதனைப் பாடினார் என்று சிலர் கருதுவர்.

**கவித் திறமை :** சயங்கொண்டாரது பாடல்களின் சிறப்பினை முன்னர் நடைபெற்ற பொழிவுகளில் கண்டோம். இவரது பாடல்களனைத்தும் சொல் நயம, பொருள் நயம், ஓசை நயம், சந்த இன்பம கொண்டவை என்பதனையும் அறிந்தோம். இவர்,

"முன்னோர் மொழி பொருளேயன்றி அவர்
மொழியும் பொன்னேபோற் போற்றுவம்"[76]

என்ற இலக்கிய மரபினையொட்டிப் பாடும் பெற்றியுடையவர் என்பதையும் முன்பொழிவுகளில் ஆங்காங்கு காட்டியவற்றை நினைவு கூர வேண்டுகின்றேன். எனவே, இவர் பாடல்களில் இவர் காலத்திற்கு முற்பட்டோரின் கருத்துக்களைக் காணலாம், எடுத்துக் காட்டாக ஒன்றை ஈண்டுக் காட்ட நினைக்கின்றேன்.

74. குமரகுருபரர் : நீதிநெறி விளக்கம் - 7.
75. தமிழ் நாவலர் சரிதை-118.
76. நன்னூல்-நூற்பா. 9.

" பேணுங் கொழுநர் பிழைகளெலாம்
பிரிந்த பொழுது நினைந்(து) அவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனபொற் கபாடம் திறமினோ."[77]

[பேணும்-அன்பு செய்யும்; கொழுநர்-கணவர்]

கடைதிறப்பில் வரும் இப்பாடல் பிரிவுத் துன்பத்தால் கணவரின் பிழைகளை நினைதலும், அவரைக் கண்ட உவகையில் அவற்றை மறத்தலும் மகளிர் இயல்பாம் என்பதைக் காட்டுவதாக உள்ளது. இதில்,

" காணுங்கால் காணேன் தவறாய ; காணாக்கால்
காணேன் தவறல் லவை"[78]

என்ற வள்ளுவத்தின் கருத்தும்,

" மாணார்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
காணாக்கால் ஆயிரமும் சொல்லுவேன்-கண்டக்கால்
பூணாகம் தாவென்று புல்லப் பெறுவேனோ
நாணோ(டு) உடன்பிறந்த நான்"[79]

[மாணார்-பகைவர்; கடந்த-நேர்நின்று பொருது வென்ற; மறம்-வீரம்; வெம்போர்-கொடிய போர்; மாறன்-பாண்டியன்; ஆகம்-மார்பு; புல்லுதல்-தழுவுதல்]

என்ற முத்தொள்ளாயிரப் பாடலின் கருத்தும் அமைந்திருத்தலைக் கண்டு மகிழலாம். இங்ஙனம் பலப்பல கருத்துக்கள். இவருடைய பாடல்களில் ஐம்பத்து நான்கு சந்த வேறுபாடுகள் இருக்கக் காண்கின்றோம் இத்தகைய சிறப்புக்கள் அமைந்த கவிஞர் பெருமானின் வாக்கிலும் போக்கிலும் ஈடுபட்டு முன்னோரும் பின்னோருமான தமிழ்ப் புலவர்கள் எல்லோரும் இந்த நூலைப் பாராட்டியுள்ளனர். எடுத்துக்காட்டாக,

" கலிங்கப் பெரும்பரணி கொண்ட பெருமான்"[80]

77. தாழிசை-65.
78. குறள்-1286.
79. முத்தொள்ளாயிர விளக்கம்-54.
80. விக்கரம சோழன் உலா - கண்ணி. 331.

" கலிங்கரோடத் தென்றமிழ்
தெய்வப்பரணி கொண்டு"[81]

என்று ஒட்டக் கூத்தர் இந்நூலைச் சிறப்பித்தமையை அறியலாம். பிற்காலப் புலவராகிய பலட்டடைச் சொக்கநாதப் புலவர் என்பார்,

" வெண்பாவிற் புகழேந்தி; பரணிக்கோர்
சயங்கொண்டான ; விருத்தமென்னும்
ஒண்பாவில் உயர்கம்பன் ; கோவைஉலா
அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன் ;
கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள் ;
வசைபாடக் காளமேகம் ;
பண்பாய பகர்சந்தம் படிக்காச
லாலொருவர் பகரொணுதே"[82]

என்று சிறப்பித்துள்ளமை ஈண்டு அறியத்தக்கது. யார் யார் எந்தெந்த வகை இலக்கியங்களை இயற்றுவதில் வல்லவர் என்று 'திறனாய் கவிதை' இது. பன்முறை படித்துத் தமிழ் இலக்கியக் களஞ்சியத்தை முன்னும பின்னும் பன்முறை நோக்கித் திறனாய்ந்த புலவரின் திறனை எண்ணி எண்ணி மகிழ்கின்றோம்.

**வேறொரு நூல் :** இப்புலவர் பெருமான் 'கலிங்கத்துப் பரணி' என்ற இந்தச் செல்வத்தைத் தவிர புகார் நகரத்து வணிகரைச் சிறப்பித்து 'இசையாயிரம' எனற மற்றொரு நூலைப் பாடியதாகத் 'தமிழ் நாவலர் சரிதை'யால் அறிகின்றோம். அநநூலில், "செட்டிகள் மேல் இசையாயிரம் பாடியபோது செக்கார் 'புகார் தங்கட்கு ஊர்' என்று பாடச் சொல்லச் சயங்கொண்டார் பாடியது" என்ற தலைக்குறிப்புடன் காணப்பெறும்,

" ஆடுவதும் செக்கே அளப்பதும் எண்ணெயே
கூடுவதும் சக்கிலியக் கோதையே—நீடுபுகழ்க்
கச்சிசெப் பேட்டிற் கணிக்குங்காற் செக்கார்தாம்
உச்சிக்குப் பின்புகார் ஊர்."[83]

என்ற வெண்பாவால் இதனை அறியலாம்.

எனவே, அன்பர்களே, இதுகாறும் நாம் மும்மணிகளின் முத்திறப் பெருமையினைக் கண்டு மகிழ்ந்தோம். இங்ஙனம்

31. தக்கயாகப் பரணி - தாழிசை 776.
82. தனிப்பாடல்.
83. தமிழ் நாவலர் சரிதை-119.

ஆறு நாட்கள் உங்களுடன் கலந்து அளவளாவவும், 'கலிங்கத் துப் பரணி' என்னும் நூலை மீண்டும் ஒருமுறை ஆழ்ந்து கற்கவும், கற்றவற்றை ஒருமுறை உங்களிடம் கோவைப்படுத்திப் பேசவும் வாய்ப்பளித்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தாருக்கும், கரும்பு தின்னக் கூலி கொடுத்துவரும் எங்கள் குலத் தோன்றல் களாகிய[84] பல்கலைக்கழக மானியக் குழுவிற்கும் (University Grants Commission) என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். நாம் எல்லோரும் ஒருங்கு கூடி தமிழுடன் உறவாடுவதற்குக் காலமும் இடமும் களனும் அமைத் துக்கொடுத்த 'பாக்காலா தமிழ் மன்றத்தினருக்கு' உங்கள் சார்பாகவும், எங்கள் பல்கலைக்கழகத்தின் சார்பாகவும், என் சார்பாகவும் என் நன்றியை மீண்டும மீண்டும் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன். எங்கெங்கிருந்தெல்லாம் வரும் பக்தர்கட்கு மடைதிறந்து கருணை வெள்ளம் பாய்ச்சும் எம்பெருமான் ஏழுமலையான், "பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண் டல்"[85], ஒன்றுக்கும் பற்றுத என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு இத்தமிழ்ப் பணியினைத் தமிழ் நாட்டெல்லையிலிருந்து கொண்டு புரிமாறு பணித்து, எனக்கு எல்லா நலன்களையும் ஈந்து, உடல்நலத்துடனும் மனவளத்துடனும் இருந்துகொண்டு தொடர்ந்து தமிழ்ப் பணியினை நடத்தி வருமாறு திருவருள் புரிகின்றான் என்பதை நான் உணர்கின்றேன்; நீங்களும் அதனை அறிவீர்கள். 'குன்றம்ஏந்திக் குளிர்மழை காத்த'[86] அந்த எம்பெருமானை நினைந்து,

"அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்று
உடையாய் என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகலொன்(று) இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே."[87]

என்ற நம்மாழ்வார் பாசுரத்தைப் பாடி அமைகின்றேன். வணக்கம்.

---

84. குறள்-399; (பரிமே. உரை); சிவப்பிரகாசர்: வெங்கை யுலா கண்ணி-60.

85. குமரகுருபரர்: மீனுட்சியம்மைப் பிள்ளைத் தமிழ்-காப்பு-1.

86. திருவாய்மொழி 3. 3 : 8.

87. திருவாய்மொழி 6. 10 : 10,

## பின்னிணைப்பு

### பொருட் குறிப்பு அகராதி